வீர சந்நியாசி

# சிரத்தானந்தர் சரித்திரம்

---

'தமிழ்நாடு' ஆசிரியர்
டாக்டர். பி. வரதராஜுலு நாயுடு
அவர்களின் முகவுரையும்

சர்வதேசிக ஆரிய சமாஜத் தலைவரான,
மகாத்மா நாராயண சுவாமி
அவர்களின் சிறப்புரையுடன்

"மாஜினி" முதலிய நூல்களின் ஆசிரியரான
எம். ஆர். ஜம்புநாதன்
எழுதியது.

---

ரூடன் அண்டு கோ,
14, பள்ளியப்பன் தெரு, சாவுகார்பேட்டை
சென்னை.

---

பதிவு
பெற்றது } வி. 1989 [விலை அணா 12

"பூகோள முழுவதும் வேத தர்மத்தை ஸ்தாபிக்கவும்" என கர்ச்சனை செய்த மஹரிஷி தயானந்தரின் பாத கமலங்களில் சமர்ப்பிக்கிறேன்.

எம். ஆர். ஜம்புநாதன்

# பொருளடக்கம்

பக்கம்

அத்தியாயம் 18.



அத்தியாயம் 19.



அத்தியாயம் 20.



அத்தியாயம் 21.



அத்தியாயம் 22.

' தமிழ் நாடு ' ஆசிரியர், தமிழரின் தேசீய திலகம்

டாக்டர். பி. வரதராஜுலு நாயுடு,

அவர்களின்.

## முகவுரை

---

சுவாமி சிரத்தானந்தர் ஓர் வீர சந்நியாசி. அன்பே வடிவானவர்; ஆண்மையை அணிகலமாகக் கொண்டவர்; ஹிந்து சமுதாயத்தை செப்பனிட்டு, சீர்படுத்தி, உத்தாரணஞ் செய்ய உதித்த உத்தமர்களில் சுவாமி சிரத்தானந்தருக்கு ஒப்பாக இக்காலத்தில் வேறெவரையும் சொல்ல முடியாது. கிணற்றிலிட்ட விளக்குப் போலிருந்த மிக மிக பழமையான வேததர்மங்களை குன்றின் மேலிட்ட விளக்கு போல் பிரகாசிக்கச் செய்த கீர்த்தி சுவாமி சிரத்தானந்தருக்கே உரியதாகும். ஹிந்து தர்மங்களின் அருமை பெருமைகளை அழித்து, இந்நாட்டைத் தாழ்த்திய "பிராம்மணியத்தை" போக்க, மகரிஷி தயானந்த சரஸ்வதி சுவாமிகள் தொடங்கிய போரை சிறப்புடன் தொடர்ந்து நடத்திய பெருமை சிரத்தானந்தருடையதேயாகும். ஆரிய சமாஜத்தினர் இந்தியாவுக்கு செய்துள்ள அருங் காரியங்களை, பாரபட்ச மற்ற, நீதிவான்களே அறிய முடியும். வைணவம், சைவம், சாக்தேயம், சமணம், வேதாந்தம், இஸ்லாம், கிறிஸ்தவம் போன்ற பல் வேறு சமயங்களில் ஆரிய சமாஜத்தினர் குற்றங் கண்டார்களாகையால், ஆரிய சமாஜத்தின் மீது அனைவருக்கும் சந்தேக

மும் கோபமு முண்டாகி விட்டது. ஆரிய சமாஜத்தின் மதக் கொள்கையில் மாறுபட்ட அபிப்பிராயம் எனக்கு முண்டு. நான் ஒரு அத்வைதி. சர்வ மதங்களிலும் ஈஸ்வரனைக் காண வேண்டு மென்ற ஆவல் கொண்டவன். எனினும், தயானந்த மகரிஷியும், சிரத்தானந்த சந்நியாசியும் இந்தியாவுக்கும், ஹிந்துக்களுக்கும் செய்துள்ள கைங்கர்யம் ஒப்புயர்வற்றதென்ற அபிப்பிராயம் நான் கொண்டிருக்கிறேன். ஹிந்து சமுதாயமும், அதன் தர்மங்களும் அழிந்து போகாமலிருக்க வேண்டுமானல், ஹிந்துக்களுக்குள்ளிருக்கும் ஜாதி பேதங்கள் தொலைந்து, ஹிந்து சமூகம் வீரஞ் செறிந்த நெஞ்சம் பெற வேண்டும். அறிவோடு கூடிய ஆண்மையற்ற எந்த சமூகமும் உலகில் இருக்கக் கூடாதென்பதே எனது கொள்கை. ஹிந்து சமூகத்தினரிடையே முளைத்துள்ள குற்றங்குறைகளை நீக்கி, அவர்களுள்ளத்தில் அன்பு, ஆண்மை, தேசிய ஒற்றுணர்ச்சி ஆகிய அருங் குணங்களை வளர்த்தவர்களில் சிரத்தானந்த சுவாமிகள் முதன்மை பெற்றவராவர். முஸ்லிம்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் சிரத்தானந்தர் மீது வெறுப்பு தோன்றியது போலவே ஹிந்துக்களான வைணவர், சைவர், சாக்தேயர், சமணர், பௌத்தர் போன்ற பிரிவினர்களுக்கும் அவரிடம் விருப்ப மில்லை யென்பதை நான் அறிந்திருக்கிறேன். ஆயினும் சகல மக்களிடத்திலும், சுவாமி சிரத்தானந்தர் கொண்டிருந்த அன்பின் வலிமை, அவர் கூட நெருங்கிப் பழகியவர்களுக்கு நன்கு தெரிந்த விஷயமாகும். முஸ்லிம்களுக்கோ, கிறிஸ்தவர்களுக்கோ ஆரிய சமாஜத்தினர் விரோத மானவர்கள் என்று கருதுவது தவறாகும். ஹிந்து தர்மங்களை முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும் குறை கூறி பேசவும், எழுத

வும் செய்யலா மென்றால், அது போன்ற உரிமைகள் ஹிந்துக்களுக்கும் உண்டு என்பதை முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும் ஒப்புக் கொள்வதே நியாயமாகும். இவ் விஷயத்தில் சிரத்தானந்தருடைய ஆண்மை அளவு கடந்திருந்ததை அவர் சரித்திரத்தில் பரக்கக் காணலாம். தென் இந்தியாவில் "ஆரிய சமாஜம்" அல்லது "ஹிந்து மகா சபை" என்ற ஒரு சங்கத்தை ஸ்தாபிக்க வேண்டு மென்றும், அதற்காக என்னுடைய ஒத்துழைப்புத் தேவை யென்றும், சிரத்தானந்த பெரியார், சில வருஷங்களுக்கு முன் என்னைக் கேட்டார்கள். அவருக்கு 1926-ம் ஹு நான் கொடுத்த பதில் பின் வருமாறு:—ஆரிய சமாஜ மதக் கொள்கையில் மாறுபட்ட கருத்து கொண்டிருக்கிறேன். எனினும், சமுதாய ஒற்றுமை, சமூக சீர்திருத்தம், கல்வி, கட்டுப்பாடு, வீரம் முதலான குணங்களை ஹிந்துக்களிடம் வளர்த்தும் துறையில் ஆரிய சமாஜத்தார் செய்யும் கைங்கர்யங்களில் எனக்கு அதிக அன்புண்டு. தென் இந்தியாவைப் பொறுத்த மட்டில், ஆரிய சமாஜ பிரசாரத்தில் நான் கலந்து கொள்வது சாத்திய மில்லை தென் இந்தியாவில் முஸ்லிம்கள் மிகவும் சிறுபான்மை யோராக விருக்கின்றனர். அவர்களால் மற்ற வகுப்பினருக்கு யாதொரு இடையூறு மில்லை. சிறு தொகையினராயுள்ள முஸ்லிம்களின் மனதில் நம்பிக்கையும், தேசப் பற்றும், தைரியமும் குறையாமல் பாதுகாப்பது எனது தேசீய கடமையாகும். மதத்தையும், கடவுளையும் விட தேசமும் தேசமக்களும் அதிக முக்கிய மானவர்கள் என்பதே எனது கொள்கை. ஆகையால் பிற மதத்தினர் மனதில் சந்தேகம் உண்டாக்கக் கூடிய காரியங்களில் கலந்து கொள்ள எனக்குப் பிரியமில்லை. மேலும், தென் இந்தியா

வில் ஹிந்துக்களுக்குள்ளாக பிராம்மணர்—பிராம்மண ரல்லாதார் விசாரம் நாளுக்கு நாள் வலுத்து வருகின்றது. பூணூல் தரிப்பவர்களிடம் எனக்கு நம்பிக்கையில்லை. ஆரிய சமாஜத்தில் பூணூல் மிகவும் முக்கியமானதாயிருக் கிறது. பிராம்மணரல்லாதாரின் முன்னேற்றத்தைத் தடுக்க, பலதிறப்பட்ட பிராம்மணத்தலைவர்கள் யாவரும், கட்டுப் பாடாக வேலை செய்து வருகிறார்கள். இந்நிலைமையில் பிராம்மண ரல்லாதார் யாவரும் உச்சிக்குடுமி வைத்து, பூணூல் தரித்து பிராம்மணிய மயமாகும்படி சொல்ல நான் எப்படித் துணிவது? ஆகையால் ஹிந்து மகா சபை யையோ அல்லது ஆரிய சமாஜத்தையோ, தென் இந்தியா வில் ஆதரிப்பதற்கு இவ்விரண்டு காரணங்கள் தடையாக நிற்கின்றன" என்று சுவாமிகளுக்குக் கூறி விட்டேன். ஆயினும் ஹிந்து சமூகத்திற்கும், ஹிந்துஸ்தானத்திற்கும் சிரத்தானந்த சந்நியாசி செய்துள்ள சேவை பொன்னே போல் போற்றத்தக்க தென்பதே எனது அபிப்பிராயம். சுவாமிகளுடைய திவ்ய சரித்திரத்தை எனது நண்பர் ஸ்ரீ. எம். ஆர். ஜம்புநாதன் தமிழில் எழுதி வெளியிடுவதை நான் பெரிதும் போற்றுகிறேன். மதமாற்சர்ய மின்றி, உண்மையை அறிய விருப்பமுள்ள சர்வ சமயத்தினரும் சிரத்தானந்தருடைய வீர சரித்திரத்தை படித்தறிய வேண் டியது அவசிய மென்பதே எனது கோரிக்கை.

"தமிழ் நாடு"
சென்னை.
21—5—31

பி. வரதராஜுலு.

———

# சிறப்புரை

ஸ்ரீ சுவாமி சிரத்தானந்தரின் ஸ்தானத்தை வகிப்பவரும், எல்லா ஆரிய சமாஜத்தலைமைச் சங்கத்தின் தலைவரான பெரிய தத்துவஞானி மகாத்மா ஸ்ரீ நாராயண சுவாமி அவர்கள் எழுதியது :

ஸ்ரீ சுவாமி சிரத்தானந்தர் ஆரிய சமாஜ பெருந் தலைவர்களுள் ஒருவராம். ஆரிய சமாஜத்திற்கு அவர் யாவற்றையும் அளித்து விட்டார் என்பது மிகையாகாது. கடைசியில் ஆரிய சமாஜத்திற்கு தன் தேகத்தையும் தானஞ் செய்து விட்டார். அவர் இந்து சங்கடனம், சுத்தி இயக்கம், இராஜீயத்தொண்டு, சன்ம சாதியை உடைத்தெறிந்து குணகர்மானுசாரம் அதை ஸ்தாபிக்குஞ் செயல், ஆசிரம தர்மத்தை மறுபடியும் தழைக்கச் செய்யும் பணிகளால் திடமுள்ளவராகி தன் வாழ்நாட்களின் பெரும் பாகத்தைக் கழித்து அவைகளில் வெற்றியையும் அடைந்து விட்டார் எனலாம். தர்மத்தின் பீடத்திலே அவர் பலிதானம், அளித்ததால் கருணையும் கல்வியும், நிறைந்த ஆரிய சாதியின் மேன்மையை நாடுபவர்களின் கடமை அதிகரித்து விட்டது.

அக்கடமையைச் செய்ய பெரும் ஊக்கத்தை அளிக்க, தமிழ் சத்தியார்த்தப் பிரகாச முதலிய அநேக நூல்களை எழுதிய ஸ்ரீ. எம். ஆர். ஜம்புநாதன், ஸ்ரீ சுவாமி சிரத்தானந்தரின் சரித்திரத்தை எழுதுவதானது எனக்கு பெரும் ஆனந்தத்தை அளிக்கின்றது. துரிதமாய் அந்

நூல் தமிழ் படித்து பேசுபவர்களிட மெல்லாம் செல்லும். இந் நூலைப் படித்தால், எந்த சீர் திருத்த செயல்களுக்காக சுவர்க்க வாசி சுவாமிகள் தன் வாழ்நாட்களைக் கழித்து தன் உயிரையும் அளித்தாரோ, அவைகளை நிறைவேற்ற கூடிய வரையில் முயற்சி செய்யவேண்டும் என தமிழர் களுக்குப் புலனுகும். சென்னை முதலிய தேசங்களில் வசிப்பவர்களுக்கு தமிழோ தாய் பாஷை யாகும். அவர் கள் கல்வி கற்றவர்களும் குணம் குறைகளைக் காண்ப வர்களாகும். நெடுங் கண்களுடன் காணும் அறிந்த ஸ்திரி புருஷர்களும் அங்கு உண்டு என்பதை நான் அறி வேன். எல்லா சீர் திருத்தத்திற்கும் சன்ம காரணமான ஆரிய சமாஜத்தைப் பரவச் செய்ய அங்கு கூடியவரை முயற்சி செய்தால், சீர்திருத்த முயற்சிகள் அங்கு சாசு வதமாய்ச் செம்மையாகும் என நான் நம்புகிறேன்.

26—5—31. நாராயணசுவாமி,

தலைவர் சார்வதேசிக ஆரியப்பிரதிநிதி சபை, டில்லி.

# சில வருஷங்கள் முன், ஆசிரியர் மூலமாய் ஸ்ரீ சிரத்தானந்த சந்நியாசி அளித்த சந்தேசம்,

---

தமிழ் இளைஞர்களே! புராதனத்திலே புவியிலுள்ளோர்களெல்லாம் பெருங்குணங்களில் பயிற்சியாக பெருங் கூட்டமாய் நமது புண்ணிய பூமியையே நாடினார்கள். இப்புனித கண்டம் புனர்சன்மம் என்னும் பெருங் கஷ்டத்தில் பிலனுகின்றது. எத்தனையோ தேசம் தழைத்து மறைந்தது. ஆட்சியும் தோன்றி அழிந்தது. ஆனால் நாகரீகத்தின் ஊற்று நிலையான நமது நாடு, பழம் பெருமையுடனில்லை யானாலும் இன்னும் ஜீவனுடனிருப்பது கண் கூடு. ஏன் என நீங்கள் ஒரு விநாடியாவது நினைத்ததுண்டோ? ஈஜிப்டும், பாபிலோனியாவும், போன இடம் தெரிய வில்லை. அஸ்ஸீரியாவும் அந்நிய நாடுகளும் அழிந்த சின்னத்தையும் அறியோம். ரிஷிகளால் நிறுவப்பட்ட இப் புனித பூமி இன்னம் பேராதரவுடன் நிலைத்துள. இக் கல்பத்தின் பிரும்மாவினால் உதயமான உணர்வு என்னும் சுடரை எங்கும் நாம் இன்னம் அணைக்க வில்லை.

பிருமசர்யத்தின் வன்மையினாலேயே ரிஷிகள் யமனையும் ஜயித்தார்கள் என புனித வேதம் முழங்கும். அபலை, அரண்மனை ஆற்றங்கரையை பிருமசரியமே ஆட்சி புரிய வேண்டும். ஆண்டி அரசன் ஆசான் அனைவரும் பிருமசாரியாகவே இருப்பதவசியம். திடமும்

தூய்மையுடனுன இக்கற்பனையை முதன்மையாய் மறு படியுங் கற்ருல் தேசம் தலையோங்கும்.

சுய நலமே இப்பொழுது சகத்தை ஆட்சி புரிகின் றது. தந் நலமே தேசாபி மானமென எங்கும் எண்ணு கிருர்கள். ஐரோப்பா இவைகளில் தலைமையாகி அமே ரிக்கா, ஆப்பிரிக்கா, ஆசியாவையும் இந் நோய்களுக்கிரை யாக்கி விட்டது. தர்மத்தின் மூலஸ்தானமான இந்நாடும் அந்தகாரத்தில் சூழ்ந்துள்ளது.

எல்லாப்பழம் புகழுடன் தர்ம பானு புலனுகி எங் ஙனம் பெரும் இருளைப்பாழாக்குவது? உண்டு, பருகி உல் லாசமாயிரு என்னும் சட்டம் ஓங்கி வாமமார்க்கிகளால் வையகமெல்லாம் வீழ்ந்திருக்குங்கால், பகவான் புத்த பெருமான், பெண், பிள்ளை பெற்ருேரைப் பிரிந்து மறு படியும் மகா ஜனங்களை பெரிய புனித வாழ்க்கையில் திருப்பினுர். தர்மம் தோய்ந்த தேசத்திலே மறுபடியும் தீமை தாண்டவமாடியதும், ஸ்ரீ சங்கரபகவான் தோன்றி புன்மைகளைப் பாழாக்க பிருமசரிய மென்றும் புனித நீர் ஊற்றைப் புலனுக்கினுர். பிறகு இது வரை நமது சரிதை யில் பார்த்திராத பெருங்கோரமான பாழ் இருள் எங்கும் பரவியது. மூர்த்தி பூஜை, மனித உபாசனை புஸ்தக வணக்கமும் பாரத மக்கட்களின் கண்களை காரிருளாக்கி விட்டது. பதஞ்சல வியாசர்களின் சந்ததிகள் பல நாமங்களுள்ள ஒரு ஈசனின் பூஜையை மறந்து விட்டார் கள். அதி சூத்திரனுன நிஷதனைக் கட்டித்தழுவிய இரா மரின் சந்ததிகள், நமது ரத்தமும் மாமிசமுமான ஆறு கோடி மக்களை கூலிகளாக்கி பெருங் கொடுமைகளுக் குள்ளாக்கி விட்டார்கள். பட்சி பறவைகளுக்கும் சிகித்

ஸை செய்த, கருணைக்கடலான பகவான் புத்தரின் சந்ததிகள் அதிகம் புசித்து அதோகதி வாழ்க்கையில் அமைந்திருக்குங்கால் பால பிருமசாரி பகவான் தயானந்தர் தோன்றினர். அவர் புனிதமான வாழ்க்கையில் பாய்ந்து பிரும்மாண்டமான புண்ணிய சுபாவத்தால் அவர் பிறந்த பாரத நாட்டிற்கு பெரும் பொக்கிஷ ஆதர்சபர்வதமாகி விட்டார்.

தமிழ் இளைஞர்களே! உங்கள் நன்மைக்கும் அதனல் உலக நன்மைக்கும் தன் உயிரேயே தியாகஞ்செய்த மகரிஷியின் மொழியைக்கேட்பீர்களா? அவர் உங்களுக்கு அளித்த சந்தேசம் யாது?

பிருமசரியத்தின் பயிற்சியே புராதன ஜனங்களுக்கு புத்துயிர் அளித்து உங்கள் ஆன்மாவையும் உணர்வையும் ஐக்கியமாக்கும். அதனல் ஒன்று சேர்ந்த உங்கள் வன்மையானது ஐரோப்பாவின் மூலை முடுக்குக்களெல்லாம் சென்று வெளியில் வெண்மையாயுள்ள ஐரோப்பியர்களைப் புனிதமாக்கி சாந்தத்தையும் சிறப்பையும் சகத்திற்கு அளிக்கும்.

எங்கள் குருநாதரின் சந்தேசம் இதுவே. உங்கள் குருநாதரின், உலகநாதனின் ஒப்பில்லாத சந்தேசம் இதுவே. நீங்கள் இதற்கு செவி சாய்க்கப் போவதில்லையா? பாரத மக்களைப் புராதன சோதி மலையைப்போல் பெருமையாக்க உங்களுக்கு சிறிய ஆசையாவது இருக்குமேயானல் சுயநலம் சீர் குலைந்த வாழ்க்கையை நீங்கள் பலியளித்து விட வேண்டும்.

ஓம். சாந்தி. சாந்தி. சாந்தி.

# முன்னுரை

ஸ்ரீ சிரத்தானந்தர் சரித்திரம் ஒவ்வொரு தமிழரும் படிக்க வேண்டிய நூலாகும். இந்நூலின் துணையால் இளைஞர்கள் நாட்டிலே புதிய யுகத்தைப் புலனாக்குவார்கள். அதனால் பாரத நாடே பெருமை யுடனாவது ஒரு புறமிருக்க தமிழர்கள் செல்லும் நாடுகளெல்லாம் புத்துயிரைப் பெறும். தமிழர்கள் மறுபடியும் தலைமைப் பதவியைப் பெறுவார்கள்.

தமிழர்களிடத்தில் தரணியிலுள்ள எல்லா நற்குணங்களிருந்தும் சொல்வது சுலபம் செய்வது கஷ்டம் என ஏக்கமாகி வாயளாவிப் பேசி சும்மா யிருக்கும் சீரழிந்த குணமொன்றே அவர்களை அதோகதியில் அமிழ்த்திருக்கின்றது. செய்வது சுலபம் சொல்வது கஷ்டம் என்பதை உணர்த்தும் சிரத்தானந்த வாழ்க்கையானது மறுபடியும் தமிழர்களை கர்மயோகிகளாய் செய்து விடுமென்பதில் சந்தேகமில்லை.

தமிழர்கள் சமூக விஷயத்தில் திட்டமான நோக்கமன்னியில் தவிக்கிறார்கள். நாளொரு நோக்கம் பொழுதொரு திட்டமாக பச்சோந்தியைப் போல் தங்கள் எண்ணங்களை மாற்றும் மதியற்றவர்களும் இந்நாட்டில் அதிகம். நான் வேறு மதம் செல்லப் போகிறேன் என வாயினால் புகன்று சேராமல், மற்றவர்களைச் சேர வற்புறுத்தும் பேடித்தலைவர்களும் நாட்டிலில்லாமலில்லை. சாதித் தாண்டவ மாடி தீண்டாமை அரக்கன் கோரமாய் தலை விரித்தா

டும் தமிழ் நாட்டில் சிரத்தானந்தரின் சரித்திரத்தின் அவசியத்தை சனங்களே அறிவார்கள். இந்நூல் குருகுலத்தை முதன் முதலாய் ஸ்தாபித்த விதமும் அதன் விளக்கமான திட்டங்களும் தமிழர்களுக்கு குருகுலத்தை ஏற்படுத்த வழியைக் காண்பிக்கும். இந்து சமூகத்தைச் சீர்திருத்தி புத்துயிர் அளித்து, நாட்டிலே பெரும் சமூக சேவை செய்து, மாப்பிள்ளை கலகத்தில் அநேக இந்துக்களைக் காப்பாற்றி, கல்பாத்தியில் தீண்டார்தவர்களுக்கு சமத்துவத்திற்குப் போராடி ஜயித்த ஆரிய சமாஜ சித்தாந்தத்தின் விளக்கத்தை இந்நூலில் காணலாம். ஆரிய சமாஜ நிபந்தனையிலிருந்து பூணூல் தரிப்பதும், உச்சிக்குடுமி வைப்பதும், அதன் முதன்மையான சித்தாந்த மில்லை என விளங்கி, நவீனத்தில் அத்தியாவசியமான ஒழுக்கமும் உணர்வுமே அதன் அடிப்படையான குணமென நன்கு புலனுகும். நூலிலுள்ள விஷயமும் பொருள் அடக்கமும் வாசகர்களுக்கு இந்நூல் எதற்கு என்பதை நன்கு விளக்குமாதலால் நாம் ஒன்றும் அதிகமாகக் கூறவிரும்ப வில்லை.

இந்நூலிற்கு முகவுரை அளித்த தேசபக்தர் டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு அவர்களுக்கும், சிறப்புரை அருளிய மகாத்மா ஸ்ரீ நாராயண சுவாமி அவர்களுக்கும் என் நமஸ்காரத்தைச் செலுத்துகிறேன். தமிழர்களேயும் என் குற்றம் குறைகளை எல்லாம் நீக்கி குணத்தைக் கிரகித்து எனக்கு ஆதரவளிக்க வேண்டுமென வணக்கமுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

பம்பாய் — எம். ஆர். ஜம்புநாதன்.

1—7—1931



சுவாமி சிரத்தானந்தர்

3844

# ஸ்ரீ சிரத்தானந்தர் சரித்திரம்.

## அத்தியாயம் ஒன்று

### ஜன்மமும் குழந்தைப் பருவமும்

ஹஸ்தினபுரத்திலுள்ள அகண்ட மசூதியிலே சகோதரத்துவத்தைப் பற்றி உபந்நியாசஞ் செய்த வீர சந்நியாசியை அறியாதவர்கள் பாரத நாட்டிலில்லை. பாரத நாட்டின் சுதந்திரப் போர் தோல்வி அடைந்த காலத்தில் ஆரம்பத்திலேயே வீர சன்னியாசியின் ஜன்மமாயிற்று.

பிழைப் பன்னியில் இனி யாது செய்வோம் எனக் திக்கற்று நாடுக ளெல்லாம் அலைந்து, இங்கிலீஷ் சர்க்காரின் சைந்நியத்தில் சேர்ந்து ரிசால்தார் என்னும் பதவியைப் பெற்று சர்க்காருக்காக நேபாளத்தினருகில் போர் புரியுங் காலத்தில் லாலா நானக்சந்தன் தனக்கு மகன் பிறந்தான் என 1856-ம் வருடம் செவியுற்றார். இவ் விளங் குழந்தையே பிற்காலத்தில் வீர சன்னியாசி என அழைக்கப்பட்டார். இவர்கள் க்ஷத்திரிய வம்சத்தைச் சேர்ந்தவர்கள். தல்வனம் என்னும் கிராமமே இவர்களின் பூர்வீக நிலயமாகும். நானக்சந்தன் குலாப்ராயின் கடைசி புதல்வன். குலாப்ராயர் எப்பொழுதும் ஈசுவரத் தியானத்தில் பிரியமுள்ளவர். விடியற் காலையில் எழுந்து ஈசனின் நாமத்தை உரத்த குரலுடன் பஜனை செய்து பகவத் கீதையையும் பாராயணஞ் செய்வது வழக்கம். அப்பொழுது விக்கிரம சிங்கன் என்னும் நண்பனொருவன் ஈசனின் நாமத்தை

மெதுவாய் உரைக்கலாகாதோ எங்கள் உறக்கத்தை ஏன் கெடுக்கவேண்டும் என ஒரு சமயத்தில் உரைத்த பொழுது அறியாமையினால் உறக்கத்தி லுள்ளவர்களுக்கும் உற்சாக மளிப்பதற்கே உரத்த குரலுடன் பாராயணஞ் செய்கிறேன் என அச்சமன்னியில் பதில் அளித்தார். சித் தத்தில் செம்மையாவதுபோல் சொல்லும் இந்த குலாப்ரா யரின் முதல் மகனான நானக்சந்தனும் தன் தந்தையினிட மிருந்து ஈசுவர பக்தியைப் பெற்றான் எனலாம்.

நானக்சந்தன் தல்வனம் என்னும் கிராம மகன்று கபூர்தலாப் போலீசில் ஒரு உத்தியோகம் பெற்று சில நாட் கழித்தார். உண்மை வாதிக்கு உத்தியோகத்தால் விபத்து வருவதென்பதை அறிந்து, அதை ராஜீநாமாச் செய்து இன் னம் பல வேலைகளில் அமர்ந்து இனி வேறு எங்கேயாவது செல்லவேண்டுமென தன் ஜனங்களிட மிருந்தெல்லாம் பிரிந்து நாடகன்றா.

உன் பெண்ணிற்கு இன்னம் விவாகமாக வில்லை. தாமதமானால் ஆபத்து வந்து விடும் என்னும் அயலார் மொழிகள் நாராச பாணம் போல் செவியில் விழுந்து இனி என்ன செய்வதெனத் திகைத்து ஊர் சுற்றினார்.

1856-ம் வருடம் சுதந்திரப் போர். பாரத சேனை களில் பெரும்பாலோர், இங்கிலீஷ் காரர்களுடன் போர் புரியலானார்கள். கானபூர், மீரத், டில்லியிலே பெருஞ் சண்டை. இங்கிலீஷ்காரர்கள் சில இராஜபக்த சேனைகளைக் கொண்டு இங்குமங்கும் தவித்தார்கள். பஞ்சாபிலுள்ள ஹிஸ்ஸாரிலே இங்கிலீஷ்காரர்கள் பெரும் பாரத சேனைக களோடு போர் புரிய நேர்ந்தது. ஹிஸ்ஸார் நாட்டில் நுழைந்த இங்கிலீஷ்காரர்கள் பெருங்குழப்பத்தில் இங்கு

மங்குஞ் சுற்றுங்கால் நானக் சந்தனும் அங்கு சென்று ஒரு இங்கிலீஷ் தலைவனைப் பார்த்து சலாம் செய்தார். அவன் இவரை உற்று நோக்கி :—

"நமது சைன்னியங்களுக்கு உண்ண ஒன்றுமே இல்லை ஏதாவது ஏற்பாடு செய்யவும்" என்றான்.

நானக் சந்தர், ஒரு பிராமணனிடஞ் சென்று, ஓ பிராம்மணனே! நீ ஏதோ சிராத்தத்திற்காக இவைகளை யெல்லாம் செய்கிறாய். இக்கலவரத்தில் இதை உண்ண ஒருவரும் வரப்போவதில்லை; சர்க்கார் சேனைகளுக்கு போஜனமளிக்க இன்னம் அதிகமாய்ச் செய்து இத்துடன் அளித்தால் நீ அதிகப் பொருள் பெறுவாய் எனப் புகன்று, உணவை எல்லாம் தயார் செய்து சைன்னியங்களுக் களித்துத் திருப்தி செய்தார்.

சைன்னியத்தின் சேனைத் தலைவன் இதனால் சந்தோஷமாகி நானக் சந்தனை நோக்கி "உனக்கு இப்பொழுது சம்பளம் என்ன" வென வினவினான்.

"நான் இன்னும் உத்தியோகத்திற்காக அலைகிறேன். எனக்குச் சம்பள மொன்றுமில்லை" என்றான்.

உடனே நானக் சந்தனின் பெயரைக் குறித்துக் கொண்டு, அவனுக்கொரு உத்தியோகமளித்து 'என்னுடைய உதவியைக் கொண்டு சுதந்திர வீரர்களை எல்லாம் கொன்று தோற்கடித்தான், நானும் சர்க்கார் கட்சியில் சேர்ந்து விட்டேன்; என்னைப்போல் பலர் கலந்து விட்டார் களென மனஞ்சேர்ந்து அவர்களும் மறைந்தார்கள்.

ஹிஸ்ஸார் முழுவதும் எங்கள் வசமாயிற்று. நான் கலகக்காரனிடமிருந்த ஆயுதங்களை யெல்லாம் பறித்து திரளான கூட்டங்களுக்குத் தலைவனாகி, சர்க்காரை அங்கு சாசு

வதுஞ் செய்ய துணை புரிந்ததினால், இனமாக 1200 ஏக்கர் நிலத்தையும் பெற்று, போலீஸிலே இன்ஸ்பெக்டர் உத்தியோகமும் பெற்றேன். சர்க்காருக்கு அவ்வுதவி செய்யுங் காலத்திலேயே நீ பிறந்தாய் என வீர சன்னியாசியான முன்ஷிராமனை தன்மகனுக்கு தந்தையான நானக்சந்தன் தன்னைப் பற்றி இங்ஙனம் கூறியுளார்.

விக்கிரம 1913-ம் வருடம் பங்குனி மாதம் கிருஷ்ண திரயோதசியிலே பிறந்த முன்ஷிராமன் தனது இளங் குழந் பருவத்தை பரேலியில், இப்பொழுது போலீஸ் இன்ஸ்பெக்டராயிருக்கும் தந்தையுடன் களிப்பிலும் விளையாட்டிலுங் கழித்தார். முன்ஷிராமின் பெரிய இரு சகோதரர்கள் படிப்பதற்கு தந்தை ஒரு மகம்மதிய மௌல்வியைத் திட்டஞ் செய்திருந்தார். ஆனால் சகோதரர்கள் கற்பிக்கப்பட்டும் கருத்திலாகாம லிருக்குங்கால் முன்ஷிராமன் யாவற்றையும் மனப்பாடஞ் செய்து விடுவார்.

பரேலியிலிருந்து தந்தை படாயு என்னும் தாலுக்காவிற்கு மாற்றப் பட்டார். முன்ஷிராமன் குழந்தையாயிருக்குங்கால் மிலிடெரி சலாம் செய்வதற்குக் கற்பிக்கப்பட்டிருந்தார். அவர் அச்சலாமொன்றை அங்குள்ள சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கெல்லாம் அளித்து காகிதம் பென்சில் முதலியவைகளைப் பெற்று எழுதுவதும் படிப்பதிலும் பிரியமுள்ளவராகி, தந்தை இவன் நன்றாய் கற்கிறான் எனச் சொல்லும்படி யாய்விட்டார்.

குழந்தைப்பருவத்திலே நடந்த சில சம்பவங்கள் பசுமரத்தாணி போல் இவர் மனதில் பதிந்துவிட்டன.

விக்கிரம, 1922-ம் வருஷத்தில் உத்தியோகத்தில் இன்னம் சற்று உயரிய பதவியைப் பெற்று நானக்சந்தர்

வாரணாசிக்கு மாற்றப்பட்டார். அங்கு வாடகைக்கு எடுத்த வீடு பெரியதாயிருந்ததால் வேறொரு பஞ்சாபி குடும்ப மொன்றையும் தம்முடன் வசிக்கச் செய்திருந்தார். ஆனால் அப்பஞ்சாபிக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்மணி யொருவள் பழைய வைதிகமாகும். காலையில் குழந்தைகளும் புறத்தில் சௌசம் செய்யவேண்டும், அப்பால் எக்குளிரிலும் குளிர்ந்த ஜலத்திலேயே ஸ்நானஞ் செய்வதவசியம். பழம் விளக்கைபரிசித்தாலும் ஐயோ! தீண்டல் தீண்டல் எனக்கூவி குளிக்கவும், வெளியில் சென்றால் ஸ்நானம், குழந்தைகள் வாயில் விரலை வைத்தாலும் ஸ்னானம் என படாடோபஞ் செய்து குழந்தைகளை அப்பெண்மணி வற்புறுத்தியதால் முன்ஷிராமனின் அன்னை அவர்களை வீட்டை விட்டு தனிமையாக்கி விட்டார். ஆனால் முன்ஷிராமனின் மனத்திலோ தீண்டாமை என்னும் பிசாசின் சொரூபம் இப்பொழுதே நன்றாய்ப் புலனாயிற்று.

இக்காலத்திலேயே குருமுகமாய் கற்பனையும் ஏற்பட்டது எனலாம். 1923-ம் விக்கிரம வருடம் யக்ஞோபவீத சமஸ்கார மாயிற்று. பூநூல் கலியாண மானவுடன் குருகுலத்திற்கு குழந்தைகளை அனுப்புவது வழக்கம். அவ் வழக்கங்களெல்லாம் இப்பொழுது மலையேறிவிட்டன. ஆனால் அவ் வழக்கங்களுக்குப் "திலாக பாசாங்கு காட்சிகள் புலனாவதைக் கண்டு, குழந்தையா யிருந்தும் முன்ஷிராமின் மனத்திலே 'என்னுடைய பூநூல் கலியாணத்திலே, நான் காசியி லிருந்தால், நான் காஷ்மீரத்திற்கு கற்கப் போகிறேன்' என நான் போவதற்கு யாதொரு விதமான ஏற்பாடும் செய்யாமலிருந்தும் நடுச் சபையிலே புகலச் செய்தார்கள். எனது சகோதரிகள் அருகிலில்லாம லிருந்தும், நடுத்தெருவில் செல்லும் இரு பெண்மணிகளை அழைத்து

என் சகோதரிகள் எனச்சொல்லி நீ போக வேண்டாமென தடுப்பது போல் தடுத்தார்கள். இதன் மர்மம் புரியவில்லையே என கலக்கம் தோன்றும். ஆனால் எவரிடம் உரைப்பது?

பிறகு ஒரு பண்டிதரின் மூலமாக முன்ஷீராமனுக்கும் மற்றவர்களுக்கும் ஹிந்தி கற்பிக்கப்பட்டது. குழந்தை, தந்தை தினந்தோறும் சிவபூஜை செய்வது கண்டு தானும் பாழடைந்துள்ள சிவன்கோவிலொன்றிலே சென்று லிங்கத்தைத் திருடி வீட்டில் நாட்டி சிவபூஜை புரியலானார். தந்தைக்கு துளசிதாஸ் இராமாயணத்திலே பிரிய மதிகம். குழந்தையும் அதை அதிகமாய்ச் செவியுற விரும்பினான். இக் காலத்தில் காசியிலே, மாயாவி நாஸ்திக சன்னியாசி யொருவர் வந்தார். அந்த மாயாவி சன்னியாசியின் மொழிகளை குழந்தை கேட்காமலிருக்க வேண்டுமென பெற்றோர்கள் பயந்தார்கள்.

வாரணாசியிலே 1½ வருடங் கழித்து நானக் சந்தர் பாந்தாவிற்கு மாற்றப் பட்டார். இந்த இளம் பருவத்திலே, காசியிலேயே முன்ஷீராமனுக்கு ஹிந்தி மொழியில் அபிமானம் அதிகரித்து விட்டது. பாந்தா சென்றதும், உருது மொழி கற்க நேர்ந்தது. ஆனால் ஹிந்தி பாஷையிலுள்ள ஆசை குறையவில்லை. அங்கு அடிக்கடி நோயில் விழுந்ததால் எந்த சிகிச்சையிலும் நோய் நீங்கவில்லை. கடைசியிலே புத்தூபக்தனிடஞ் செல்ல வேண்டுமென நண்பர்கள் கூறி விட்டார்கள்.

புத்தூபக்தன் ஒரு காலத்தில் கஜப் போக்கிரியாய் சூதாட்டத்தில் சக்கிரவர்த்தியா யிருந்தவன். துளசிதாஸ் ராமாயணத்தை ஒரு முறை செவியுற்று தன் தீயத் தொழில்களை எல்லாம் தொலைத்து, ராமாயணத்தை இரவெல்லாம்

பஜனை செய்து, வந்தவர்களுக்கெல்லாம் சரி சமமான ஆசன மளித்து எங்கும் உற்சாகத்தை அளிப்பவனுனன். நானக்சந்தரும் அங்கு சென்று கதை கேட்பது வழக்கம். நானக்சந்தும் எல்லா ஜனங்களுடனும் சமமாய் உட்கார்ந்தார். அப்பொழுது சில குற்றவாளிகள் அவர் சொல்வதைச் செவியுற்று தங்கள் குற்றங்களையும் ஒப்புக்கொள்வார்கள்.

இந்த புத்தூபக்தனின் மருந்தால் முன்ஷீராமன் நோய் தீர்ந்தது மன்னியில் ஹிந்தி ராமாயணத்தில் ஆசை அதிகரித்து ஹனுமாரை சனிவாரம் தோறும் உபாசிப்பதில் பிரியமுள்ளவனுனன். ராமாயணத்தால் எனக்கு இப்பொழுது உதயமான சோதி இன்னம் மறையவில்லை எனப் பிற்காலத்தில் கூறியுள்ளார்.

பாந்தாவி னருகிலே சித்திரக் கூடமென சிறிய பர்வதமொன்றுண்டு. அங்குள்ள பண்டாக்கள் இங்குதான் இலட்சுமணர் வில்லை வைத்தார்; அதனுல் பள்ளமாய்விட்டது என ஒன்றைக் காண்பித்து, இப்பள்ளம் பாதாளம் வரைச் செல்லுமென புகன்று ஜனங்களிடம் பணம் பறிப்பது வழக்கம். ஒரு ஐரோப்பியன், அங்கு சென்று இதைப் பரிசீலனை செய்து பார்ப்போம். இது 20 அடி ஆழஞ் சென்றுலும் உங்களுக்கு ரூ. 500 கொடுப்பேன். இல்லையேல் நீங்கள் எனக்கு அளிக்க வேண்டுமெனச் சொல்லி அங்ஙனம் ஆழமில்லை என்பதை நிரூபித்து அவர்களைப் பொய்யாக்கி வெட்கமுறச் செய்து ரூ 500ம் பெற்றுன். இதைக் குழந்தை நிஜமென அறிந்து, ஏன் இவர்கள் பொய் புகல வேண்டுமென மனச்சந்தேக முற்றுர்.

இக் சந்தேகம் மனத்தைச் சஞ்சல மாக்குங்கால் தந்

தையை மிர்சாபூருக்கு மாற்றி விட்டார்கள். இவர் கல்விக்கு மறுபடியும் கஷ்டம் நேர்ந்தது. இங்கு தந்தையுடன் ஊரெல்லாம் சுற்றித் திரிந்ததால், கல்வியை விட அனுபவத்திற்கு அதிக சந்தர்ப்பம் தோன்றியதெனலாம். மிர்சாப்பூரின் சமீபமே விந்தியாசல பர்வதமாகும். இவர் சென்ற சமயம் நவராத்திரி தினங்களாகும். அங்கு போலீஸ் ஸ்டேஷன் ஜன்னல் வழியாய் ஒரு வாம மார்க்கன் நிர்வாண வனிதையைப் பூஜை செய்வதைக்கண்டு மனக்கசப் படைந்தார்.

அங்கு பிராமணர்கள் தேவிக்கு ஆடு மாடு கோழிகளை பலி செய்து தங்கள் உதரத்திற்கு அவைகளை நிவேத்தியஞ் செய்து ஆனந்தமா யிருக்குங்கால் எனது தந்தைக்காக ஒருவன் சென்று சிம்டாவில் நெருப்பு எடுக்கச் சென்றவுடன் அவனைப்பார்த்து 'சர்க்காரே, நாங்கள் பொய் சொல்லுவதுண்டு, சூதாடுவதுண்டு, திருடுவதுண்டு, கஞ்சாக் குடிப்பதுண்டு, ஆனால் தர்மத்தை விடவில்லை. நீங்கள் தர்மத்தை விட்டு விட்டீர்களே; சிம்டாவிலே நெருப்பை எடுக்கலாமோ' என அவர்கள் கூறிய மொழிகள் குழந்தை முன்ஷீராமன் கருத்திலே கருங்கல் போலாய் விட்டது.

பிறகு 1928-ம் வருடம் நானக்சந்தர் பனாரிசிற்கு மாற்றப்பட்டார். அங்கு கொத்தவாலாக நியமானமானார். இங்கு இவர் செய்யாத துஷ்டத்தன மில்லை. ஆனால் கொத்தவால் பிள்ளை யென விட்டு விடுவார்கள். பாரசீகம் கற்க முயன்றார். ஆனால் காலங்களெல்லாம் திரிவதில் சென்று விடும். பாடசாலையில் சேர்க்கப்பட்டார். அங்கு பொழுதெல்லாம் பாழாக்குவார். காலையில் எழுந்து, கங்காஸ்நானம், குஸ்தி முதலிய தேகப்பயிற்சிகள், விசுவநாத தரிசனம், பிறகு வீடு. பாடசாலைக்குப் போகாமலு மிருந்துவிடுவார். ஆனால் இவைகளையோ தவறுவதில்லை.

இங்கு ஒருவருடமிருந்தார். பலியாவிற்குமாற்றப்பட்டார். பலியாவின் பாடசாலையில் சேர்ந்தார். அங்கு சில நண்பர்களுடன் கசரச் செய்வதில் திறமையுடனுனர். மகன் எந்த விஷயத்திலும் ஊக்கமுள்ளவனு யிருப்பதைக் கண்ட தந்தை அவன் கல்வியிலேயே ஊக்கஞ் செலுத்தலானுர்.

---

## அத்தியாயம் இரண்டு

### கல்விப் பயிற்சி

மகனுக்கு பலியாவில் இனி கற்க சாலையில்லை எனக் கண்டு அவனை வாரணுசியிலேயே தனிமையாகச் சென்று கற்பதற்கு ஏற்பாடு செய்தார். வி. 1930 ம் வருடம் பனரிஸ் குவின்ஸ் கலாசாலையில் முன்ஷீராமன் சேர்ந்தான். சேர்ந்த ஒரு வருஷம் வரை ஒழுங்காகப் படித்து வந்தான். காலை 4 மணிக்கு எழுந்து கங்கா நதியில் ஸ்நானம். கசரத் தேகப் பயிற்சிகள், காசி விசுவனுத தரிசனம், பிறகு வீடு சென்று படிப்பது, உணவு, அப்பால் கலாசாலை செல்லுவான். இதுவே அவன் தினசரி வாழ்க்கை. தேகப்பயிற்சியால் முன்ஷீராமனின் உடல் உறம் பெற்றிருந்ததால் பார்ப்பவருக்கு நகரத்துக் காலியைப்போல் தென்படுவார். இடுப்பிலே கத்தியுடன் வெளியில் செல்வதுண்டு. இக்காலத்திலேயே.காசி,கள்ளர்களின் குகை எனக் கண்டார்.தனது வன்மையால் பண்டிதற்கள் எனப்படும் பாவிகளிடமிருந்து பல மாணவர்களைக் காப்பாற்றினுர். பண்டிதர்களின் போக்கிரித்தனத்தைக் கண்டு சில சமயம் மனம் பதைத்திடுவார்.

இங்ஙனம் சுய அனுபவம் பெற்று வருங்கால் வசந்த பஞ்சமிக்காக கலாசாலையை சாற்றினுர்கள். முன்ஷீராமன் விடுமுறையைக் கழிக்க பலியா சென்றுர். அங்கு தந்தை

யின் நன்பனொருவன் முன்ஷீராமனைக் கண்டு 'நான் ஒரு தேவ தாசி பாட்டுக்கச்சேரி வைத்திருக்கேன், தாங்களும் வரவேண்டு' மென்றான். அதற்கு முன்ஷீராமன் மறுக்கவே 'நீ தந்தை தூங்கிய பிறகு வந்தால் ஒருவரும் அறியார்கள்' எனச் சொல்லி சென்றுவிட்டான். முன்ஷீராமனும் தந்தை யறியாமல் அங்கு சென்று களித்தார்.

விடுமுறை கழிந்தவுடன் "மறுபடியும் காசி சென்று விட்டார். பரீட்சை சமீபத்திலே தாயினிடமிருந்து 'அவசர மாய் புறப்பட்டு வரவும்' என்னும் தபாலைக்கண்டவுடன் பரீட் சைக்குஉட்காராமல் சென்றுவிட்டார். அதனால் என்டிரன்ஸ் வகுப்பில் மறுமுறையும் படிக்க வேண்டியதாயிற்று. வாழ்க் கையின் சுதந்திர அனுபவமின்மையால் வண்டியில் செல்லும் பொழுது தனது உடைகளை இழந்தார். தந்தை ஒன்று சொல்ல தான் வேறொன்றை நாடி சற்று பிறகு தெளிந்தார்.

மறுபடியும் காசிக்குப் படிக்கச் சென்றார். தனக்குக்கீழ் படித்தவர்களுடன் சேர்ந்து படிக்க வேண்டு மென்னும் வெட்கத்தை அடைந்து, கலாசாலையில் சேர்ந்தும் சரிவரச் செல்லாமையால், அங்கு தண்டனையை அடைந்து, அதை மறுக்க, கலாசாலையினின்று நீக்கப்பட்டார். பிறகு காலங் களை எல்லாம் நாவல்களைக் படிப்பதில் கழித்தார். இதை தந்தைக்கும் தெரிவிக்கவில்லை. விடுமுறை நாட்களெல்லாம் தவறாமல் வீடு சென்று நாவல்களை சந்திரிகையிலும் படித்து கண்களைக் கெடுத்துக்கொள்வார். மகன் படிக்கிறான் என நானக்சந்தர் மகிழ்வார்.

பிறகு விடுமுறை எனச் சொல்லி கழித்து மறுபடியும் காசி சென்று காலத்தை வீண் கழிப்பார். தந்தை ஏதோ காரியமாக காசிவந்ததும் விஷயங்களை அறிந்து முன்ஷிராம்

நீயுமா என்னுடன் பொய்யுரைக்கிறாய்? எனப் புகன்று அவனை மறுபடியும் கலாசாலையில் சேர்த்தார். இவ்வருஷம் முன்ஷிராமனின் தாய் தரணி நீங்கினாள். மகனும் யாதொரு இடையூறன்னியில் பரீட்சை தேறினார்.

மறுபடியும் காசியில் சேர்ந்து கற்குங்கால் தினந்தோறும் செல்லுவதுபோல் ஸ்ரீ விசுவநாதர் தரிசனத்திற்கு ஒரு நாள் மாலை சென்றவுடன் 'ரேவா நாட்டு ராணி சிவனை பூஜை செய்கின்றாள். நீங்கள் ஒருவரும் உள்ளே செல்லலாகாதென' இவ் விளங்காளையை உள்ளே விடாமல் தடுத்து விட்டார்கள். காசி விசுவநாதருக்குமா பட்சபாதம்? சமத்துவமாய் அவர் எவரையும் கருதவேண்டாமா? என்று மனதில் பெருங் கலக்கமாயிற்று. பிறகு கலாசாலை பிரின்ஸ்பாலான ரோமன் கத்தோலிப் பாதிரி லீபோக்கினிடஞ் சென்று சந்தேகங்களை எல்லாம் கேட்கலானார். இனி கிறிஸ்தவனாகப் போகிறேன் எனக் கூறி அவரிடம் ஞானஸ்நானம்பெறச் செல்லுங்கால் வேறு பாதிரியொருவன் கன்னிகை யொருவளோடு மோசமான நிலையிலிருப்பது கண்டு மனங்கசந்து திரும்பிவிட்டார். அக்காலத்தினின்று பூஜை முதலியவைகளில் நம்பிக்கையை ஒழித்துவிட்டார். விசுவநாத தரிசனம் பண்ணுவதையும் நிறுத்தினார். ஆனால் ஸ்நானம் முதலியவைகளை விடவில்லை.

---

## அத்தியாயம் மூன்று

### காசி வாழ்க்கை

(வி) 1932ம் வருஷம் க்வீன்ஸ் கலாசாலையில் சேர்ந்தார். பழைய நண்பர்களுமுண்டு. என்ட்ரன்ஸ் பரீட்சையில் தேறியவுடன் விடுமுறை நாட்களில் தந்தையின் நண்பனான நத்தூமல் என்பவர் முன்ஷிராமனுக்கு ஹுக்கா

உறிஞ்ச கற்பித்திருந்தார். அதுவுமன்னியில் அவன் காசி யிலே விதவை ஸ்திரி யொருவளிடம் வாசஞ் செய்து கொண்டிருந்தான். அவன் கருப்பு புட்டியை பூஜிப்பவனு வன். இத்துடன் வேறு காலி நண்பர்களும் கலந்தார்கள். ஞாயிறு தோறும் ஒன்று சேர்வார்கள். சதுரங்கம், நாவல் முதலியவைகள் அதிகரித்தன. தங்களுக்குள் கூட பாஷை யொன்யையும் ஏற்படுத்திக்கொண்டார்கள். இங்கிலீஷ் நாவல் களை முக்கியமாக ஸ்காட் நூல்களைப் படித்திருந்த படியால் தன்னை ஒரு சுயம் வீரனுகவும் நினைத்துக்கொள்வார். இங்கி லீஷ் நாவல்கள் அதிகமாய்ப் படித்ததினுல் ஆங்கிலத்தில் தேர்ச்சி பெற்ருர்.

காசியிலே பண்டிகை முதலியவைகள் வரும்பொழு தெல்லாம் கொண்டாட்டம். தந்தைக்கு பலியாவிலிருந்து மதுராவிற்கு மாற்றமாயிற்று. காசியிலிருந்து சில சாமான் களை முன்ஷிராமனிடம் அனுப்புவித்து, நீ உன் கலியாணத் திற்கு வந்து சேரவும் எனச்சொல்லி மதுராபுரியிலே சற்று தங்கிப்போகவும் என்ருர். மதுராபுரியிலே அவர் அங்ஙனம் சில நாட்கள் இருந்ததால் அங்கு நடந்த சம்பவத்தை நாம் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

"ஒன்று பிர்ம்மபோஜனம். நான்கு பிராமணர் போஜ னத்திற் கழைக்கப் பட்டார்கள். அவர்கள் காலையில் பங்கி யடித்திருந்தார்கள். கிருஷ்ண கோபிலீலை கானங்களுடன் நாட்டியமாடிக் கொண்டு வீடு வந்தார்கள். அவர்கள் காலைப் பரிசித்து என் தந்தை அர்க்கியமளித்து பூஜை செய்தார். 'போக விலாசமளிக்கவும்' என ஆக்ஞையாயிற்று. உடனே பாலும் பழமும் அளிக்கப்பட்டது. கையில் மிகுதியா யிருந்த பங்கை அரைத்து பாலுடன் சேர்த்துப் பருகினுர் கள். ஒரு குடம் பாலை ஒவ்வொருவரும் குடித்தார்கள்.

பிறகு மயக்கம். சற்று நேரமாய்விட்டது. அவர்களைத் தூக்கி ஆசனத்தில் அமர்த்தி தந்தை உபசரணை செய்து, உண்ணும் படி செய்தார். ஒவ்வொருவனும் $1\frac{1}{2}$ சேர் பால் ஆடை புசித்தான். கண்கள் திறந்தது. உடனே வேண்டுவதை எல்லாம் வினவ ஆரம்பித்து விட்டார்கள். நாலு சேர் லாடு, அத்துடன் பஜ்ஜி, பகோடா முப்பது, முப்பது பூரி, அப்புறம் ஹல்வா. கடைசியிலே பாலாடையால் பூர்ணாஹுதி செய்தார்கள். ஒரு ரூபாய் தட்சணையும் ஒவ்வொருவனும் பெற்றான். பிறகு நமஸ்காரம். அப்புறம் எங்களுக்குக் சத்தியநாசமும் வேண்டு மென்றார்கள். பிறகு பங் முதலியவைகள் அளிக்கப்பட்டது. இவர்கள் புசித்து வயிறு வெடித்தால் பிரும்மஹத்தி தோஷம் நமக்கு வருமே என தந்தை பயந்தார். பிறகு இவர்கள் விசிராமகாட் சென்றார் கள். மாலையில் நான் சென்றபொழுது குஸ்தி செய்து கொண்டிருந்தார்கள்" என்று முன்ஷிராமன் மொழிகளாலேயே அந்த பிர்ம்ம போஜனத்தைப் பற்றிக் கூறிவிட்டோம்.

மதுராபுரியின் கோசாயின் லீலைகளை அவரின் மொழிகளினின்றே மறுபடியும் அறிவோம்.

தென் நாட்டினின்று யாத்திரைக்காக இங்கு ஒரு டிப்டி கலெக்டர் வந்தார். அவர் மனைவியுடன் தன் பெண்ணையும் பிள்ளையொன்றையும் கூட்டி வந்தார். மகனுக்கு 7 வயது. பெண்மணிக்கு 15 வயதிருக்கலாம். இப்பெண்மணிக்கு ஆங்கிலம் தெரியும். நான் காசியில் இவர்களை ஒரு முறை கண்டிருந்தபடியால் எனக்கு அறிமுகமுண்டு. இவர்கள் மதுராபுரியிலே கோபால மந்திரத்திற்கு என்னுடன் வந்தார்கள். மாலை 5மணி. என்னுடன் போலீஸ் சேவகனொருவனிருந்தான். கர்ப்பக் கிரகத்திற்கு செல்ல முயன்றோம்.

ஆனால் கோவில் சேவகன் உள்ளே செல்லலாகாது; பெரியவர் ஒருவர் தரிசனம் புரிகிறார்; பிறகு செல்லலாம் என்றான். அவன் சொன்னதைச் செவியுறாமல் நான் உட்சென்றுவிட்டேன். கர்ப்ப கிரஹத்திலே பற்பல அறைகள். நமக்கு வழியும் மறந்துவிடும். ஐந்து நிமிஷம் உள்ளே சுற்றினோம். ஈன ஸ்வரமொன்று எங்கள் காதில் விழுந்தது. மூடியிருந்த கதவை உடைத்து உட்சென்றோம். இளம் பெண் ஒன்றை கோசாயி பிடித்திருப்பதைக் கண்டேன். அப்பெண் ஓட முயற்சிப்பதும் என் காட்சியிலாயிற்று. அங்கு ஒரு கிழ ஸ்திரி நின்றிருந்தாள் எங்களை நோக்கி, 'ஈச தரிசனத்தால் இது பயப்படுகின்றது' என எனக்குக் கூறினாள். அதற்குள் அந்தபெண்மணி, 'இம்மொழியை நீங்கள் நம்பவேண்டாம். அவன் பாதங்களை பூஜை செய்யச் சென்றேன். என்னைப் பிடித்திழுத்தான், நான் உடனே கதறினேன். என்னைப் பிதாவிடம் கூட்டிச் செல்லவும்' எனக் கதறினாள். நான் அவளை தந்தையினிடம் கூட்டிச் சென்று விஷயங்களை அறிவித்தேன். அவர் விக்கிரகாராதனை இனி செய்வதில்லை என விருதமாகி யாத்திரை செய்யாமல் நாடு திரும்பிவிட்டார்.

பிறகு முன்ஷிராமனும் மதுரை நீங்கி தல்வனம் சென்று விவாகஞ் செய்து கொண்டார். 'எனது மனைவியை விவாகஞ் செய்து பார்க்கவும் முடியவில்லை' என ஒரு சமயத்தில் சொல்லியுளார். பிறகு பரேலி, அப்பால் அலகாபாத் கலாசாலையில் சேர்ந்து அங்கும் கல்வியை சரியாய்ப் பெறவில்லை. அவ்வருஷத்திலும் பரீட்சையில் தேறவில்லை. கெட்ட சகவாசத்துடன் சேர்ந்து, மதுபான மருந்துவதும், விலை மாதர்களுடன் களிப்பதும் கானம் முதலியவைகளில் சாய்வதும், ஊர் சுற்றுவதும், வீண் விவகாரங்கள் செய்வதும், பகிரங்கமாய் எல்லாத் தீய ஒழுக்கங்களிலும்

தோய்ந்து மனிதர்கள் எத்துணை அதோகதியில் மூழ்க வேண்டுமோ அத்துணையிலும் மூழ்கியிருந்தார். ஆனால் திடீரென்று ஒவ்வொரு சமயம் ஞாபகமொன்று தோன்றி இந்த சகவாசத்திலிருந்து திடீரென்று பிரிந்து விடுவார்.

மது பானம் பருகுவதிலிருந்தும் சிற்றின்ப ஆசையினின்றும் முன்ஷிராமனின் மனது பிரிந்ததற்கு சுவாமி தயானந்தரின் நினைவே யாகும். மாயாவி என அழைக்கப்படும் இத் தயானந்த ரிடமிருந்து தனியாக வேண்டு மென்பதே அவர் தாய் வேண்டினாள். ஆனால் அந்த மாயாவியின் தரிசனத்தால் மகன் தெளிவடைந்து தரணியின் திலகம் போல் விளங்கப்போகிறான் என அவள் கனவிலும் நினைத்ததில்லை. தயானந்தரின் தரிசனம் அவர் மனதை எங்ஙனம் தூய்மையாக்கிய தென்பதை முன்ஷிராமனின் மொழிகளாலேயே கூறுவோம்.

விக்கிரம 1936-ம் வருடம் ஆவணி மாதம் சுவாமி தயானந்தர் பான்ஸ் பரேலியில் விஜயஞ் செய்து உபன்னியாசஞ் செய்தார். ஜனங்கள் அமைதியா யிருப்பதற்கு பாதுகாப்பளிக்கவும் என என் தந்தை கொத்தவாலுக்கு ஆக்ஞையாயிற்று. தந்தை பாதுகாப்புச் செய்து, அவர் மொழியான கங்கா அமுதத்தைப் பருகி துரிதமாய் வீடடைந்து என்னை 'நோக்கி மகன் முன்ஷிராமனே! பெரிய தண்டி சன்னியாசியான அறிஞரும், யோகி ராஜாவுமான ஒருவர் வந்துளார். உன் சந்தேகங்களை எல்லாம் அவர் நீக்கி விடுவார். என்னுடன் உபந்நியாசத்திற்கு நீயும் நாளை வரவும்' என அழைத்தார். வருகிறேன் என வாயினால் சொல்லி விட்டேன். வட மொழியே கற்றவர் என் சந்தேகத்தை எங்ஙனம் நீக்குவார் என மனதிலே எண்ணினேன். தந்தையுடன் மறு நாள் உபந்நியாசம் நடக்கும்

பொழுது சென்றேன். சூரிய மண்டலம் போலுள்ள அவர் முகத்தை கண்டதும் எனக்குச் சிரத்தை புலனாயிற்று. பாதிரிகளான ஸ்காட் முதலிய ஐரோப்பியர்கள் மகிழ்ச்சி யுடன் செவியுறுவதைக் கண்டும் எனக்கு இன்னம் சிரத்தை அதிகரித்து, நான் பத்து நிமிஷங்கள் செவியுறுவதற்குள் கேவலம் வட மொழி கற்றவர் இத்துணை யுக்திகளோடு எங்ஙனம் பேசுகிறார். அவர் நுட்பத்தைக் கண்டு அறிஞர் களுக்கும் வெட்கம் அளிக்கின்றதே என என் சித்தத்திலா யிற்று. பரமான் மாவின் புனித நாமமான ஓங்காரத்தைப பற்றியே உபந்நியாசம் நடந்தது. நான் முதன் முதலாய் அன்று அனுபவித்த ஆன்மசந்தோஷம் ஒரு பொழுதும் அழியாது. நாஸ்திகனாயிருந்த போதிலும் ரிஷிகளாலேயே ஆன்மா சந்தோஷிக்க முடியும்.

நாளையினின்று நகர மண்டபத்திலே உபந்நியாசம் நடை பெறும். சுவாமிகளும் அங்கு வர வேண்டு மென வேண்டிக் கொண்டதற்கு 'வண்டியை அனுப்பி வையுங்கள். நான் அங்கு வந்து சேர்வேன்' என பதிலுரைத்தார்.

ஆனால் மறுதினம் குறிப்பிட்ட காலத்தில் சுவாமி தயானந்தர் இன்னம் வரவில்லையே எனக் காத்திருந்தனர். ஆனால் தயானந்தர் அரை மணி நேரம் தாமதித்து அவசர மாய் சபையை அடைந்து அவர்கள் வாக்குறுதி செய்தது போல் வண்டியை யனுப்ப வில்லை, நான் நடந்து வந்தேன். அதனால் தாமதம். காலத்தின் மதிப்பை எப்பொழுது நமது ஜனங்கள் அறியப் போகிறார்களோ என சுவாமிகள் கூறியது, ஆங்கிலம் கற்காதவரும் இதன் மகிமையை எங்ஙனம் அறிந்தார் என மனதில் நினைத்தேன். தயானந் தர் நமஸ்தே, போப், புராணிகர், ஜைனர், குரானிகர், கிரா னிகர் முதலியவைகளைப் பற்றி பேசும் பொழுதெல்லாம்

நான் ஆனந்தாமுதத்தைக் கொள்ளையடித்தேன். எனது தந்தையும் உபந்நியாசங்களை யெல்லாம் சிரத்தையுடன் செவியுற்றார். ஆனால் மூர்த்தி பூஜை முதலியவைகளைக் கண்டனஞ் செய்ய ஆரம்பித்தவுடன் எனது தந்தை உபந் யாசத்திற்கு வருவதில்லை. ஸ்காட் முதலிய ஐரோப்பிய பாதிரிகளும் அவர் தர்க்கத்தால் திணறுவதைக் கண்டு திகைத்தேன். ஒவ்வொரு உபந்நியாசத்தையும் தவறாமல் செவியுற்று அவருக்கு முதன்மையாகவும் கடைசியாகவும் வந்தன மளிப்பவன் நானே.

தினந்தோறும் சுவாமிகள் காலை $3\frac{1}{2}$ மணிக்கு எழுந் திருந்து கிராமம் நீங்கி, கானகம் சென்று, சாந்தநிலையை யடைந்து யோகத்திலமர்ந்து தெளிந்ததும் 6 மணிக்கே கிராமம் திரும்புவார். அவர் எங்கு சொல்லுகிறார் என நான் பின் தொடர்ந்த பொழுது அவருடன் செல்ல நான் ஓடவேண்டிய தாயிற்று.

சுவாமிகள் இந்துக்களின் அசம்பாவித புராணங்களைப் பற்றி கண்டனஞ் செய்யும் பொழுதெல்லாம், வெள்ளைப் பாதிரிகளும், ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களும் ஆனந்த நடனமாடுவார்கள். ஆனால் ஒரு தினம் பைபிலிலுள்ள லீலை களை எல்லாம் எடுத்து உரைக்கும் பொழுது ஐரோப்பியர் களின் முகமெல்லாம் சிவந்து கோபாவேசமானதை நான் இன்னும் மறக்கவில்லை. மறுதினம் உபந்நியாசத்தை ஏற்பாடு செய்தவர் சுவாமிகள் பேசுவதற்கு முன் எழுந்து ஏதோ சொல்ல முயன்றார். நாவெழவில்லை. சுவாமிகள் உற்று நோக் கினார். வாய் திறந்தான். மொழி வரவில்லை.

நீ உன்னுடைய காலத்தை வீணாக்காதே. காலத்தை

விட பெரும் பொக்கிஷம் பூவுலகிலில்லை. நீ துரிதமாகவும் என்றார்.

நடு நடுங்கினன். மகாராஜவே கண்டனஞ் செய்யா விட்டால் என்னே? ஆங்கிலேயர்களை கசந்து கொள்வதால் இலாபமில்லை என வாய் உளறினன்.

சுவாமிகள் சிரித்தார். இதற்காகவோ இந்நடுக்கம். சுவாமிகள் கண்டனஞ் செய்கிறார், உபந்யாசத்தை நிறுத்தி விடுவேன். ஜாக்கிரதையா யிருக்கட்டும் என கலெக்டர் சொல்லி இருக்கலாம், இதைச் சொல்ல நீ ஏன் நடுங்க வேண்டும்?

அதற்குள் ஒரு புராணிக நண்பர் சுவாமி ஒரு அவதார புருஷரே. சித்தத்திலிருப்பதை எங்ஙனம் விளக்கிச் சொல்லுகிறார்!

அன்று ஆத்மாவைப் பற்றிய உபந்நியாசம். அவர் சொல்லிய சொற்களை எல்லாம் நான் இன்னம் மறக்கவில்லை.

சத்தியத்தை சொல்லவேண்டாம். கலெக்டர் கோபங் கொள்வார். கமிஷனர் களிப் பாகார். கவர்னர் கலகத்தை அளிப்பார் என என்னை பயமுறுத்த வேண்டாம். சத்தியத்தைச் சோல்வதில் சக்கிரவர்த்தியும் இடையூறு அளித்தால், நான் அவனையும் இலட்சியஞ் செய்யப் போவதில்லை. இவ்வான்மா நித்தியம். சஸ்திரங்கள் இதை சிதைக்காது. ஜலம் இதை நனைக்காது. கனல் இதை எரிக்காது. காற்று இதை உலரச் செய்யாது. இவ்வான்மா அமுதனுகும் எனச் சொல்லி, இந்த உடலோ அநித்தியம். அநித்திய உடலை நம்பி இதைக்காப்பாற்ற அதர்மஞ் செய்து பலனில்லை. இதை எவனும் அழிக்கலாம் என கர்ஜனை செய்து நான்குபக்கங்களை உற்று நோக்கி என்னுடைய ஆன்

மாவை அழிக்க விரும்பும் ஒரு சூர வீர புருஷனை எனக்குக் காண்பிக்கவும் எனச் சிங்கநாதஞ் செய்து, அத்தகைய வீரன் தோன்றும் வரை நான் சத்தியத்தையே நாடுவேன் என நுவன்ற மாத்திரத்தில் எங்கும் நிசப்தம்.

அன்று உபந்நியாசம் நடைப்பெற்ற வுடன் சபையிலே ஸ்காட் பாதிரி இல்லாததைக் கண்டு அவர் மாதா கோவிலுக்குச் சென்றார். அங்கு பாதிரி அவரை வரவேற்று ஒரு உபந்நியாசம் செய்ய வேண்டுமென அவர் விரும்பியதால் அங்கு பெரும் உபதேச மொன்று அருளினார்.

ஒரு நாள் சுவாமியுடன் வெகு பிரிய முடனுகி அவர் உபந்யாசங்களை யெல்லாம் நடைபெறச் செய்த கிருகஸ்தன் வேசிகளுடன் சகவாசம் வைத்திருப்பதைக் கண்டு தயானந்தர் அவனை நோக்கி :—

நீ எந்த சாதி என்றார்.

நீங்களோ குணங்களுக் கேற்றவாறு ஜாதிகள் என உரைக்கிறீர்கள்.

உன்னை ஜன்மத்தில் எந்த ஜாதி என அழைக்கிறார்கள்?

நான் க்ஷத்திரியன்.

க்ஷத்திரியனுக்கும் வேசிக்கும் ஒரு மகன் பிறந்தால் அவனை எங்ஙன மழைப்பது ?

கிரகஸ்தன் தலைகுனிந்து விட்டான்.

கிரகஸ்தனே ! எனக்கு எவர் தாட்சியண்யமும் அவசியமில்லை. நான் சத்தியத்தையே சொல்வேன் என்றார்.

பிறகு கிரகஸ்தனும் விலைமகள் சகவாசத்தை விட்டு விட்டான்.

அவர் உபதேசம் என் மனதைக் கலக்கிவிட்டது. புது உலகத்தில் பாய்ந்தேன். அவர் நுண்ணிய வாதங்களெல்

லாம் நேர்மை என நான் கண்டபோதிலும், என்னுடைய நாஸ்திக நினைவு இன்னும் நீங்கவில்லை.

ஈசன் உண்டோ என அவருடன் தர்க்கஞ் செய்தேன். ஐந்து நிமிஷத்திலே எனக்கு பதிலளிக்க முடியவில்லை.

உங்கள் தர்க்க வன்மையோ என்னைத் திகைக்கச் செய்து விட்டது. நான் மௌனமானேன். ஈசனிலே என் மனதோ இணங்கவில்லை. நீங்கள் நிரூபணஞ் செய்வீர்களோ என மறுபடியும் விவாதஞ் செய்ய முயன்றேன். மறுபடியும் பதிலளிக்க பலமற்று மயங்கிவிட்டேன். சுவாமிகளே! உங்களிடம் பதிலளிக்க என்னால் முடியவில்லை. ஈசனுண்டா என மறுபடியும் வினவினேன்.

குழந்தையே! நீ வினவினுய், நான் பதிலளித்தேன். இதெல்லாம் யுக்தி மொழிகள். ஈசனிலே உனக்கு நம்பிக்கையாகும் வண்ணஞ் செய்வேன் என எப்பொழுது உன்னிடம் பிரதிக்ஞை செய்தேன். அவனருள் வரும் வரை அவனுதயமாகாது எனச்சொல்லி கடோபநிஷத்தினின்று அவனை மொழி, அறிவு, செவியினுலும் அறியமுடியாது என்னும் அமுத மொழிகளைக் கூறினுர்.

அது அப்பொழுது பரிபூர்ண சாந்தமளிக்கவில்லையாயினும், என்னுடைய சித்தத்திலே பெரிய அதிர்ச்சி தோன்றி விட்டது என முன்ஷீராம் சொல்லியுள்ளார்.

இதற்குப் பிறகு முன்ஷிராமன் தன்னுடைய கெட்ட வழக்கங்களை எல்லாம் விடவில்லை யாயினும், மனதிலே சற்று மாறுதலை அடைந்தார்.

இச் சந்தர்ப்பத்தில் தான் தனிமையாய் தர்ம பத்தினியுடன் வாழ நேர்ந்ததால், மனைவியின் அள்ளில்லா அன்பு அவருக்கு பெரும் மாறுதலை அளித்துவிட்டது. ஒரு சமயம்

பரேலியில் நண்பனொருவரின் தூண்டுதலால் அதிக மது பானஞ் செய்து வெகு நேரங்கழித்து தனது வீட்டை அடைந்தார். அப்பொழுது அவர் மனைவி விழித்திருந்து மதுபான மயக்கத்தில் புருஷன் தவிக்கிறார் என மனமுருகி இரவெல்லாம் அருகில் உட்கார்ந்து உபசரணை செய்த வண்ணமாகவே இருட்பொழுதெல்லாம் கழித்தாள்.

ஐயோ நான் செய்த பிழைகளுக்கு என் மனைவி எத்துணை கஷ்டப் படுகிறாள் என மனதிலே ஒரு எழுச்சியை அடைந்தார்.

மற்றொரு முறை மதுபானம் விற்பவன் முன்ஷிராமன் வெகுநாள் வரை பொருள் அளிக்காததைக் கண்டு, இனி பணம் கொடுக்கவில்லையேல் நான் கோர்ட்டிற்குச் செல்லுவேன் என பயமுறுத்தினான்.

கையிலோ பொருளில்லை. தந்தைக்கு எழுதவோ வெட்கம். மனம் மாறி முகம் வெளுத்தது. அவர் மனைவியான சிவதேவி நீங்கள் ஏன் விசனமுடனுக வேண்டும்? பொருள் கஷ்ட மிருந்தால் என் பொன் வளையல்களை எடுத்துச் செல்லவும் என அவர் கையில் அளித்து விட்டார்.

வளையல்களை விற்று மதுபானம் விற்பவனுக்குத் தன் கடனைத் தீர்த்தார்.

இந்த இரண்டு சம்பவங்கள் அவர் சிந்தனையிலே பெரும் மாறுதலை யுண்டாக்க உதவியாயிருந்தன.

---

## அத்தியாயம் நாலு

### மதுபான வாழ்க்கை.

முன்ஷிராமன் நன்ருய்ப் படிப்பதில்லே. காலத்தை எல்லாம் வீணுக்குகின்ருன். மதுபானமும், சிற்றின்பமும் அவனைப் பற்றி விட்டது. இனி அவன் கற்கப்போவதில்லே, அவனை எங்ஙனமாவது எதாவது சர்க்கார் உத்தியோகத்தில் அமர்த்தவேண்டும் என தந்தை தீர்மானித்து தன்னுடன் அன்புடனிருந்த கமிஷனர் எட்வேர்டிடம் சென்று உதவி புரிய வேண்டுமென விரும்பினுர்.

அவர் முன்ஷிராமனை அழைத்து நீ தாசில்தார் பரிட்சைக்குத் தயார் செய்து கொள்ளவும் எனக்கூறி, நிரந்தர மற்றுக் காலியாயிருந்த ஒரு தாசில்தார் உத்தியோகமொன்றில் அவரை நியமித்தார்.

தாசில்தாரா யிருக்குங் காலத்தில் ஒரு ஐரோப்பிய தளகர்த்தர் சில வெள்ளை சோல்ஜர்களுடன் இவர் எல்லேயிலிருந்த கிராமத்திற்கு ஏதோ காரணமாக வந்ததால், முன்ஷிராமனும் அங்கு செல்லவேண்டியதாயிற்று.

முன்ஷிராமன் அந்த தளகர்த்தன் அவ்வெள்ளை சோல்ஜர்களோடு அங்கு நடைபெற்றிருந்த சந்தையில் விலே கொடுக்காமல் சந்தை வியாபாரிகளிடமிருந்த சாமான்களே பலவந்தமாய்ப் பிடுங்குவதை முன்ஷிராமன் கண்டு 'கிராமத்து ஜனங்களே, இன்று சந்தை வேண்டாம், நீங்கள் வீடு செல்லவும்' என ஆக்ஞாபித்துச் சந்தையைக் கலேத்துவிட்டார். வெள்ளை தளகர்த்தனுக்குக் கோபமேலிட்டது.

தாசில்தாரே ! நீ இங்ஙனம் செய்தால் உனக்கு விபத்தாக முடியும் என பயமுறுத்தினுன். 'அக்கரையில்லே' எனு இவர் அவனேயும் கவனிக்காமல் திரும்பிவிட்டார்.

பிறகு கலெக்டர், கமிஷனரிடம் போக வேண்டியதாயிற்று. நான் எதற்காக மன்னிப்பு எடுத்துக்கொள்ள வேண்டுமெனச் சொல்லி எனக்கு இனி இந்த சர்க்கார் உத்தியோகம் வேண்டாமென இராஜிநாமா செய்துவிட்டார்.

மறுபடியும் வீட்டை அடைந்து என்ன செய்வது என யோசனையில் ஆழ்ந்திருந்தார். தந்தை மறுபடியும் ஏதாவது பெரிய சர்க்கார் உத்தியோகத்தில் அமர்த்த வேண்டுமென முயற்சி செய்யலானார். ஆனால் முன்ஷிராமன் 'நான் சர்க்கார் தாசனாகப் போவதில்லை' என நிச்சயமாகக் கூறிவிட்டார். உடனே பிளீடர் பரீட்சைக்குப் படிக்கவும் என தந்தை விரும்பியதால் விக்கிரம 1937 ம் வருஷம் லாகூர் சென்று சட்டக் கல்லூரியில் சேர்ந்தார். சேர்ந்த சிறிய காலம் வரை சட்ட சம்பந்தமாய் நூல்களைப் படித்தபோதிலும், பிறகு பழைய ஞாபகம் மேலிட்டு, சகோதரக் கூட்டத்தோடு சேர்ந்து மதுபானம் முதலியவைகளில் பிரியமாகி கலாசாலைக்கும் அதிகமாகப் போவதில்லை. கலாசாலையில் ஒரு வருடத்தில் குறிப்பிட்ட நாட்கள் செல்லாதபடியால், அவ் வருஷம் சட்ட பரீட்சைக்கு அநுப்பப்படவில்லை.

அதுவுமன்னியில் நண்பன் ஒருவன் தூண்டுதலினால் மதுபானக் கடையொன்று ஸ்தாபித்து ரூ. 500 வரை நஷ்டமாயிற்று. அதை தந்தைக்கு அறிவித்தபடியால், மகன் உண்மையைக் கூறிவிட்டான் என மகிழ்ச்சியாகி இனி அங்ஙனம் செய்யவேண்டாம் என எச்சரிக்கை செய்து விட்டு விட்டார். மறுபடியும் பிளீடர் பரீட்சைக்குப் போக முயற்சி செய்புங்கால் மதுபானம், விலை மாதர்களின் சேர்க்கை இவைகளில் வீழ்ந்து அவ்வருடமும் தோல்வியைப் பெற்றார்.

அப்பால் அடுத்த வருடம் பரீட்சைக்குச் சென்று

மூக்தார் என்னும் பிளீடர் பரீட்சையில் ஜயம் பெற்று தன் மாமனர் நகரமான ஜலந்தரிலே சிறிய வக்கீலானர். தந்தையும் இப்பொழுது பென்ஷன் பெற்று சுக ஜீவனம் செய்து வந்தார். வக்கீல் தொழிலில் முதல் மாதமே இவருக்கு ரூ. 200 கிடைத்தபடியால் அதை அங்ஙனமே தந்தைக்கு அனுப்புவித்தார். தந்தை சந்தோஷமாகி "நீயும் கிரகஸ்தனய் விட்டாய், உனக்கும் ஒரு பெண் பிறந்து விட்டது, நீ சம்பாதிக்கும் பொருளை நீயே வைத்துக்கொள்ளவும்" என பதில் எழுதிவிட்டார்.

முன்ஷிராமனின் பெரிய சகோதரன் போலீசில் தாணுகாரரா யிருந்தான். அங்கு ஏதோ இலஞ்சம் வாங்கி விட்டதாகக் குற்றஞ் சாட்டப்பட்டு ஏதோ நடவடிக்கைகள் நடந்து கொண்டிருந்தது. அங்கு முன்ஷிராமன் சென்று கோர்ட்டு மூலமாய் நடவடிக்கைகள் எடுத்து குற்றவாளி இல்லை என நிரூபணஞ் செய்து விடுதலை அடையும்படி செய்தார். உத்தியோகத்தில் மறுபடியும் அமர்ந்தான், ஆனல் முன்ஷிராமனின் வேண்டுகோளுக் கிணங்கி அதைப் பிறகு இராஜீனமா செய்துவிட்டான்.

வக்கீல் தொழில் ஆரம்பித்தவுடன் அவருக்கு உதவியாய் ஒரு மகம்மதிய குமஸ்தா இருந்தான். அவனுக்குச் சம்பளம் சொற்பமே யாயினும், ஏராளமாக முன்ஷிராமனின் பெயரைச் சொல்லி இனம் முதலியவைகள் பெறுவதுடன், மிக்க பொருள்களை பல நண்பர்களிட மிருந்து கடன் வாங்கி அவருக்குக் கெட்ட பெயர் எங்கும் நிலவும் வண்ணஞ் செய்து விட்டான். முன்ஷிராமன் இதை அறிந்து அவனை உடனே நீக்கிவிட்டார். இங்ஙனம் ஒருவருடம் காலந் தள்ளினர்.

அடுத்த வருடம் பெரிய வக்கீல் பரீட்சைக்குப் போக வேண்டுமென விரும்பினார். அதற்காக லாகூர் சென்றார். அங்கும் காலி நண்பர்கள் கூடி விட்டார்கள். தினந் தோறும் மதுபானமும் இறைச்சி உணவேயாகும். மது பானம் பருகும் பொழுதெல்லாம் மனத்திலே சிறிய நடுக்கம் இருந்தபோதிலும், ஒரு இரவு நடந்த சம்பவம் மதுபான த்தினின்று நிரந்தரமாய் அவரை நீங்கும்படி செய்துவிட்ட தை அவர் மொழியினின்றே அறிவோம். பெரிய வக்கீல் ஒருவர் வீட்டிலே அரும் விருந்தொன்று நடை பெற்றது. யாவருக்கும் மதுபானம் அளிக்கப் பட்டது. உணவிற்குப் பிறகு எல்லோரும் வீடு திரும்பினார்கள். முன்ஷிராமனும் வேறு ஒரு நண்பனுமே போகாமல் சற்று தாமதித்தார்கள். ஏனெனில் முன்ஷிராமனின் வீட்டின் சமீபத்திலுள்ள இந் நண்பன் சற்று மயக்கத்திலிருந்தான். இவனை வீட்டில் சேர்ப்பதென் கடமை என முன்ஷிராமன் மனத்திலாய் அவனைக் கூட்டிச் செல்லலானார். அவன் இங்குமங்கும் வீழ்ந்து வரலானான். அவன் தேகமெல்லாம் நடுக்கம். வாய் உளறல், உடை நீங்குவதையும் அவன் உணரவில்லை; நா விலோ விபரீத மொழிகள். என்னை நடுத்தெருவிலே விட்டுவிட்டு அவன் ஒரு தேவதாசி வீட்டில் நுழைந்துவிட் டான். எனக்கோ உட்சென்று அவனை இழுத்துக்கொண்டு வெளியில் வரவோ வெட்கம். ஆனால் என்ன செய்வது, உடனே சென்று அவனைப் பிடித்து மெதுவாய் அவன் வீட் டில் சேர்த்து விட்டேன்.

நான் உடனே இங்கு இறங்கி இருந்த நண்பன் வீட்டிற்குச் சென்றவுடன் அங்கு திறந்த மதுபான புட்டி யொன்று தயாராக இருப்பதைக் கண்டேன். நண்பனும் நானும் உடனே மதுபானம் பருகினோம். எனது நண்பன்

குடித்துவிட்டு உட்சென்முன். நான் மதுபானத்தை லோட்டாவிலே விட்டு மறுபடியும் பருக எடுத்தேன். உடனே ஒரு ஈனசுவரம் என் காதிலேவிழுந்தது. உள்ளேசென்றதும் விபரீதமாய் ஒன்றைப் பார்த்தேன். எனது நண்பன் ஒரு இளம் யுவதியை பலாத்காரஞ் செய்வதைக் கண்டேன். எனது தர்மபத்தினி சிவதேவி திணறுவது போல் தோன்றிற்று. உடனே மதுபான மிருந்த நண்பனை உதைத்துத் தள்ளினேன். இளம் பெண்ணும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேறு வீடு சென்று விட்டாள். நான் மறுபடியும் வெளியில் வந்து உட்கார்ந்ததும், மதுபானத்தால் இதுவரை விளைந்த தீமைகளெல்லாம் என் முன்னுயிற்று. மிகுதியாயுள்ள இந்த பானத்தைக் குடித்து விட்டு இனி குடிக்கப் போவதில்லைஎன விருதம் செய்து கொள்ள வேண்டுமென நினைத்துகண்ணுடி டம்ளரில், புட்டியிலே மிகுதியாயுள்ள பிராந்தியை ஊற்றிக்கையிலெடுத்தேன். உடனே கௌபீனம் தரித்த சுவாமி தயாநந்தரின் விசால மூர்த்தி விபூதியுடன் விளங்கி, கையில் தண்டமுடன் என்னை நோக்கி கண்களால் பார்ப்பது போல நான் வடிவமொன்றைக் கண்டேன். இன்னும் பரமாத்மாவில் விசுவாச மில்லையோ என அவர் வினவுவதுபோல் என் செவிகளில் விழுந்தது. நன்முய் உற்று நோக்கினேன் ; ஒன்றுமே புலப்படவில்லை. நெஞ்சோ துடித்தது. கிளாஸ் டம்ளரையும், பிராந்தியுடன் சுவரில் வீசி எறிந்தேன். சுக்குத் தூளாயிற்று. மனத்தில் ஆன்மச் சுடர் கொழுந்து விட்டெரிய ஆரம்பித்தது. கை கால்களைக் கழுவி மனச் சிந்தனையி லானேன். உடனே உறக்கம். அப்பால் காலையில் எழுந்திருந்து ஸ்நானம் முதலியவைகளை முடித்துக்கொண்டு இனி மதுபானம் பருகுவதில்லை என விரதம் மேற்கொண்டு ஸ்டேஷன் சென்றுவிட்டேன்.

# அத்தியாயம் ஐந்து

## ஆர்ய சமாஜியாவது.

அப்பால் எனது நகரம் சென்று விட்டேன். பிறகு இனி லாகூர் சென்று கிரமமாய் பெரிய சட்டப் பரீட்சைக்குப் போக வேண்டுமென எண்ணி முன்ஷிராமன் மறுபடியும் லாகூரை அடைந்தார். காலையில் சற்று உலாவுவது, பிரம்ம சமாஜம், ஆரிய சமாஜம் வாராந்தர சபையில் அடிக்கடி செல்லுவது, குணமுள்ள நண்பர்களை நாடுவது, இவைகளே அவர் தினசரி வேலையாய் விட்டது. பழய எண்ணங்களையும் விட்டு விட்டார். பிரம்ம சமாஜ நூல்களைப் பெற்று படிக்கலானார். சந்தேகங்கள் தோன்றினால் நண்பர்களுடன் வாதஞ் செய்து உண்மையைக் காண முயல்வார். புனர் ஜன்மத்தைப்பற்றி ஒரு முறை பெரும் சந்தேகமாகி விட்டது. பிரம்ம சமாஜிகளின் விடைகள் அவருக்குத் திருப்தி யளிக்கவில்லை. ஆரிய சமாஜம் என்ன சொல்வதென்பதை அறிய சத்தியார்த்தப் பிரகாசம் என்னும் நூலை வாங்க விரும்பினார். ஆனால் எங்கும் கிடைக்காமல், ஒரு நாள் முழுவதும் ஒரே மூச்சாய் அதற்காகத் திரிந்து, பிறகு அதைப் பெற்றார். வால சந்திரதாசன் முன்ஷிராமனின் நெருங்கிய நண்பன். அவர் ஒரு பெரிய ஆரிய சமாஜியாகும். முன்ஷிராமன் சத்தியார்த்தப் பிரகாசத்தைப் படித்து அவனுடன் ஒரு ஞாயிறு காலையில் சமாஜத்திற்கு விஜயஞ் செய்திருப்பதைக் கண்டு, சந்தோஷத்துடனாகி, சமாஜத்தின் முதன்மை புருஷரான லாலசாஹிம்ஸ் தாசினிடம் சென்று முன்ஷிராமன் ஆரிய சமாஜத்தில் சேர்ந்துவிட்டாரென மகிழ்ச்சியுடன் மொழிந்தார். உடனே லாலசாஹிம்ஸ் தாஸ் பிரசன்னமாகி என்னருகில் வந்து உட்காரவும்

என முன்ஷிராமனை வேண்டிக்கொண்டார். அப்பொழுது இருமகம்மதியர்கள் ஈசனைப் பற்றி ஏதோ கானஞ் செய்து கொண்டிருந்தார்கள். அது முடிந்ததும் ஒரு உபன்னியாச மாயிற்று. உபந்நியாச முடிவில் முன்ஷிராமன் சபையின் அங்கத்தினராய் விட்டார் என தெரிவித்தார். அப்பொழுது வேறொரு நண்பன் திடீரென எழுந்து இனி முன்ஷிராமன் பேசுவார் எனப் புகன்று உட்கார்ந்து விட்டார். முன்ஷிராமன் இதை எதிர்பார்க்க வில்லை. இனிப் பேசியே தீர வேண்டுமென எண்ணி அடியிற் கண்ட சில மொழிகளைப் புகன்றார் :—

நாம் சொல்வதிலும், செய்வதிலும் வேற்றுமை யன்னியில் ஒன்றாயிருக்க வேண்டும். தன்னுடைய சித்தாந்தம் போல் செயலில் செல்லாதவன் சொல்வதற்கு அருகனாகான். வாடகை உபதேசிகளால் யாதொரு பயனு மில்லை. தன்னை மறந்த தியாகி சமாஜத்திற்கு வேண்டு மென்றார்.

இதைச் செவியுற்ற வுடன் லாலாசாஹிம்ஸ்தாசன் ஆர்ய சமாஜத்தில் இவன் ஒரு புதிய உணர்வைப் புலனாக்குவான். ஒன்று ஆர்யசமாஜம் பெருமைபுடனாகும். இல்லையேல் பாழடைந்து விடும் எனப்புகன்றார்.

அப்பால் சமாஜிகளான பக்தராமன், முகுந்தராமன், இராமச்சந்திரன் இவர்கள் முன்ஷிராமனோடு பரஸ்பரம் நெருங்கிய நண்பர்களானார்கள். இவர்கள் ஒரு தனி வீட்டைப் பிடித்து எல்லோரும் ஒன்றாகவே வாசஞ் செய்தார்கள். அவர்களில் முன்ஷிராமன் சட்டப் பரீட்சைக்குப் படிப்பது போக, மிகுதியான காலங்களிலெல்லாம் சமாஜ விஷயத்தைப்பற்றியே சிந்தனை செய்வார். நடுவழியிலும், நடுநிசியிலும் நண்பர்களிடமும், சத்துருக்களிடமும் இங்கு

மங்கும் எங்கும் சமாஜத்தை எங்ஙனம் அபிவிருத்தி செய்வ தென்பதே அவா சிந்தனையாகும்.

இங்ஙனம் பரஸ்பரம் முறை ஒன்றாக இருந்ததால், வாரந் தோறும் நகரத்தின் எந்த பாகத்திலாவது சென்று சமாஜத்தின் உட்கருத்துகளைப்பற்றி பிரசாரம் செய்ய வேண்டுமென நிச்சயமாகி அங்ஙனமே செய்யலானார்கள்.

பக்தராமனென்பவர், தனது மூத்த சகோதரனை ஜலந்தரிலிருக்கும் தேவராஜனுக்கு முன்ஷிராமன் ஆரிய சமாஜியாய் விட்டான் என அறிவித்தார். அவர் முன்ஷி ராமனை நன்றாய் அறிவார் முன்ஷிராமன் ஆரிய சமாஜியாய் விட்டதால், ஜலந்தர் ஆரியசமாஜ தலைமைப் பதவியை அவ ருக்கே அளிப்பேன் என தான் தலைமைப் பதவியினின்று விலகி முன்ஷிராமனுக்கு அப்பதவியை அளித்து விட்டார். முன்ஷிராமனும் வெகு சிந்தனையிலாகி சாந்தமாய் அப்பொ றுப்பை ஏற்று தான் அதற்குதகுதியுள்ளவனாக வேண்டுமென எண்ணி சத்தியார்த்தப் பிரகாசத்தை இன்னம் சிரத்தை யுடன் படிக்கலானார். பத்தாவது அத்தியாயத்தைப் படித்தவுடன் எதை புசிக்கலாகாது என்பதில் சந்தேக மாயிற்று.

மாம்சம் நீங்கல்.—ஒரு தினம் எப்பொழுதும் போல் உலாவுவதற்குச் சென்று கொண்டிருந்தார். லாகூரிலுள்ள அனார்கல்லியினருகில் மாமிசத் துண்டுகளை கூடையொன் றிலே நிறைத்து தூக்கிச் சென்று கொண்டிருக்கும் ஒரு வனைக் கண்டார். வெகு கஷ்டமுடன் கலக்க மடைந்துள்ள கூலியின் முகமும் மாம்சத்தின் கோரமான பார்வையும் மனத்திலே பெரும் யோசனை யொன்றைப் புலனாக்கிவிட் டது. சாந்தமான சித்தத்திலே சஞ்சலம் தோன்றியது. வீடு

சென்றவுடன் உடனே வழக்கம்போல் சத்தியார்த்தப் பிர காசத்தைப் படித்தார். பத்தாவது அத்தியாயம்.

புசிப்பது புசிக்கத் தகுதியற்றது. காலையில் தான் கண்ட மாம்சம். இந்தச் சிந்தனையிலே புசிப்பதற்குச் சென் றார். எப்பொழுதும் போல் எல்லா உணவுகளுடன் மாம்சம் சேர்ந்திருந்தது. மாம்சத்தைக் கண்டார். மனது திகிலடைந் தது. தின்னலாம் தின்னலாகாது என்னும் யோசனையில் தோய்ந்தார். உடனே மாம்சத் துண்டைப் பற்றி சுவரில் எறிந்தார். ஈயா எறும்பா என நண்பர்கள் உடனே வினவி னார்கள். ஈயுமில்லை எறும்புமில்லை. என் இலையில் மாம்சம் இருப்பதை நான் சகியேன். மாம்சம் புசிப்பது மகா பாத கம் என மொழிந்தவுடன் அவர்கள் வெட்கமுடனானார்கள். இத் தினத்தினின்று மாம்சம் புசிப்பதை முன்ஷிராமன் விட்டு விட்டார்.

அப்பால் ஹோலி பண்டிகை விடுமுறை நாட்களுக்கு ஜலந்தர் சென்றதும் அங்குள்ள நண்பர்களெல்லாம் இவ ரைக் குதூகலமாய் வரவேற்றார்கள். உடனே ஆரிய சமா ஜத்திலே ஒரு உபந்யாசம். இளம் விவாகத்தின் கொடுமை என்பதே அந்த உபந்யாசத்தின் விஷயம். இவ்வுபந்யாச த்தைச் செவியுற்றதும், இளங் குழந்தைகளுக்கு விவாகம் செய்ய எண்ணியிருந்த நண்பர்கள் விவாகஞ் செய்வதை நிறுத்தி விட்டார்கள்.

விடுமுறை கழிந்தவுடன் மறுபடியும் லாகூர் சென்றார். பிரம்ம சமாஜம் ஆரிய சமாஜத்தின் நூல்களைப் படிப்ப துடன் பல சட்ட நூல்களையும் படிக்க லானார். ஏனெனில் ஒரு தினமாவது தலைமை நியாயாதிபதியாய் வரவேண்டு மென்பதே அவர் நினைவு.

முன்ஷிராமன் லாகூர் வந்து சேர்ந்தவுடன் தந்தை வாத நோயின் விபத்திலிருப்பதாய் அறிந்தார். உடனே அவரைக் காணச் சென்றார். அங்கு இவரை ஏதோ சங்கற்பம் செய்ய வேண்டும் என பிராமணன் ஒருவனை அழைத்து முன்ஷீராமனை செய்யவும் என விரும்பினர்.

சங்கற்பம் என்பது சித்தத்தின் ஒரு நிலையாகும். புறக் கிரியைகளுக்கும் அதற்கும் சம்பந்த மில்லை. நான் செய்ய மாட்டேன் என மறுத்துவிட்டார்.

முன்ஷீராமனே நீ ஹனுமார் கோவிலுக்குச் சென்று பூஜை செய்து வரவும் என மரு முறை விரும்பினர்.

உங்கள் மகனை வஞ்சகனுயிருக்க நீங்கள் விரும்புகிறீர்களா?

ஏன்?

நான் கோவிலிலுள்ள கற்களையே ஈசன் என உபாசிக்க மறுக்கிறேன்.

சரி உன்னிஷ்டம் போலிருக்கவும் என விட்டு விட்டு, முன்ஷிராமனே. நீ ஆரிய சமாஜியாய் விட்டாய் என நான் அறிந்தேன். பிராமணனிடம் உனக்கு விசுவாச மில்லையோ என்றார்.

எனக்கு பிராமணனிடம் விசுவாசமுண்டு. சாதியிலே பிறந்தவர்களெல்லாம் பிராமணரில்லை. நற்குணம் வாய்ந்தவனுல் அவனை நாடுவதில் எனக்கு ஆட்சேபணை இல்லை என்றார்.

முன்ஷிராமன் இங்ஙனம் மொழிவதைக் கண்டு உன்னை இதற்காகவோ சர்க்கார் தாசனுகக் கூடாதென சட்டப்

பரீட்சைக்குப் படிக்க வைத்தேன் என துக்கமுடனாகி மனம் சற்று கலங்கினார். ஆனால் அப்பால் சாந்தமடைந்தார்.

சில மாதங்கள் சென்ற பிறகு நானக் சந்தர், முன்ஷி ராமன் தன் கிராமத்தில் விட்டுவிட்டுப் போன சில ஆரிய நூல்களை முதன்மையாக பஞ்சயக்ஞ மகா விதி, வேத பாஷ்ய முகவுரை முதலிய நூல்களை ஒரு பண்டிதர் மூல மாகப் படித்து ஆரிய சமாஜம் நாஸ்திகம் இல்லை என அறிந்தார். சரி, நானும் இனி வைதிக சந்தியா வந்தனம் செய்கிறேன் என ஆரம்பித்து ஐயோ! என் வாழ் நாள்க ளெல்லாம் வீணாய் விட்டதே, இனி இவ்வாரிய அமுதத்தை கொள்ளை கொண்டு போக என்னிடம் வன்மை இல்லையே என விசன முற்றார். முன்ஷீராமனையும் அடிக்கடி உற்சாகப் படுத்தி ஆரிய தர்மம், சத்தியத்தையே செம்மையாய் காட்டு கின்றது என சீலமுடன் எவரிடமும் சொல்வது கடமை எனக் கண்டார்.

முன்ஷீராமன் மும்முறை பெரிய சட்டப் பரீட்சை யில் ஜயம் அடைவேனெனச் சிந்தையிலிருக்குங்கால் சர்வ கலாசாலை ரிஜிஸ்டராரான லார் பேண்டு என்னும் வெள்ளை யர் மாணவர்களிடம் ஏராளமாய் பொருள் பெற்று, 'தனக்கு கைக்கூலி கொடுத்தவர்களுக்கெல்லாம் சட்டப் பரீட்சையில் ஜெயம் பெறுவார்' என்றான். அதற்கு முன்ஷிராமன் 'நான் பரீட்சையில் நன்றாகவே எழுதியிருக்கிறேன்! எனக்கு ஜயம் தோன்றுவது நிச்சயம், உங்கள் கருணை அவசியமில்லை' எனச் சொல்லிவிட்டு நீ மறைமுகமாய் பொருள் பெற்று, யோக்கியதை யற்றவர்களையும் ஜயம் பெறச் செய்கிறாய். என் விஷயத்தில் பொருள் அளிக்க வில்லை என நீ என்னை தோல்வி அடையச் செய்வாயானால்

நீ செய்யும் செயல்களை எல்லாம் பத்திரிகைகளில் பகிரங்கஞ் செய்து விடுவேன் என ரிஜிஸ்ட்ராருக்கு ஒரு கடிதம் எழுதினர். இந்த முறை பரீட்சையில் முன்ஷிராமன் தேறி விட்டார்.

மறுபடியும் ஜலந்தர் சென்று நியாய வாதஞ் செய்யலானர். அவர், கட்சிக்காரர்களுக்காகவும் பொய் சொல்ல விரும்புவதில்லை ; பொய்யுரைத்தால் அவர்களுக்காக வாதிப்பது மில்லை. தான் பிளீடர் எனத் தெரிவதற்கு வீட்டிலே தனது பெயர் பலகை பதிக்க ஒன்று எழுதிவர தனது குமாஸ்தாவிற்குக் கட்டளை செய்தார். அவன் பெரிய வக்கீல் எனப் பலகையில் எழுதி, அதனுல் முன்ஷிராமன் மகிழ்ச்சி அடைவார் என மதித்தான். ஆனுல் முன்ஷிராமன் அதை நோக்கி, இப்பலகையை நான் விரும்ப வில்லை. நான் பெரிய வக்கீல் இல்லை எனத் திருப்பி அனுப்பி விட்டார். அதற்குப் பிறகு முன்ஷிராமனிடம் பொய் புகழுரைக்க விரும்புவதில்லை.

மறு சமயம் ஜலந்தரில் பெரிய விருந்தொன்று நடைபெற்றது. அங்கு முன்ஷிராமனின் நெருங்கிய நண்பர்கள் அவரை மதுபானம் செய்ய வேண்டுமென எல்லா வகையிலும் வற்புறுத்தினர்கள். ஆனுல் முன்ஷிராமனின் வெறுப்பைக்கண்டு உபத்திரவஞ் செய்யாமல் விட்டு விட்டார்கள். இது ஒரு பெரிய பரிசோதனை காலமாயிருந்தது.

**தந்தை பிரிவு**—தந்தைக்கு மறுபடியும் வாதநோய் அதிகரித்து விட்டது. படுத்த படுக்கையிலே இருந்தார். நாட்டு வைத்தியன் ஒருவன் அங்கு வந்தான். அற்புதம் வாய்ந்தவன் எனப் புலனுக்க நெருப்பும் என்னைச் சுடாதென ஒரு வித்தை காண்பித்து, பெரியவன் எனப் பகிரங்கம்

செய்துகொண்டு விட்டான். தந்தையும் அவன் திறமையுள்ளவன் என கர்ச்சித்தார். ஆனால் முன்ஷிராமன் இந்த 'நெருப்பை நீ பரிசிக்கவும்' என அவனைப்பிரார்த்தித்ததும் அவன் பயந்து தன் உண்மையை உரைத்துவிட்டான். தந்தை மகனைக் கண்டு களிப்புடனாகி நீ ஏன் ஆரிய சமாஜியானாய் என நான் வருந்தியதுண்டு. ஆனால் நீ ஆரிய சமாஜியானதே எனக்கு ஆனந்தத்தை விளைவிக்கின்றது. நமது குலத்தை நீயே ஓங்கச் செய்வாய் என மகிழ்ந்தார். சில காலம் என்னுடைய வற்புறுத்தலுக் கிணங்கி இங்கிலீஷ் வைத்தியஞ் செய்து கொண்டார். அப்பால் யூனானி சிகிச்சை செய்து கொண்டார். முன்ஷிராமன் இம் மருந்தில் மாமிச ரசம் இல்லை யெனச் சொன்னால் நான் இம் மருந்தைப் பருகுவேன் என்பார். அவன் ஒருவனே என்னைத் திருப்தி செய்வதற்கும் போய் புகலான் என்பார். என்ன சிகிச்சை செய்தும் அவர் வாத நோயினின்று நீங்காமல் வி. 1944-ம் வருஷம் ஆடி மாதம் 12 வது தினத்தில் புவி நீங்கினர். என் தந்தை 30 வருடகாலம் ஓடி ஆடி உழைத்தார். ஆனால் பென்ஷன் பெற்றவுடன் சும்மாயிருந்ததால் சரீரம் சிதைந்தது.

தேகப் பயிற்சி செய்து வந்திருப்பாரேயானால் அவர் இறந்திருக்கமாட்டார். நாமாவது எச்சரிக்கையா யிருக்க வேண்டுமென முன்ஷிராமன் அடிக்கடி மொழிந்து கொள்வதுண்டு. தந்தை தரணி நீங்கியவுடன் வைதீக சம்ஸ்காரங்கள் செய்து சகோதரர்களை அழைத்து தந்தையின் பொருள்களை உங்களிஷ்டம்போல் தேவைகளை யெல்லாம் எடுத்துக் கொள்ளவும்; மிகுதியான வைகளை நீங்கள் விரும்பினால் எனக்கு அளிக்கவும் எனப்புகன்று, அவர்களிஷ்டம்போல் உற்சாகமாய் தனிமையுடனானர்.

# அத்தியாயம் ஆறு

## ஆரியசமாஜப் பிரசாரம்

முன்ஷிராமன் பரீட்சையில் ஜயமடைந்திருந்தபோதிலும், ரிஜிஸ்டிரானரைப்பற்றிய விஷயங்கள் எங்ஙனமோ வெளியாகி அந்த வருஷம் தேறியவர்களும் மறு பரீட்சையில் உட்கார வேண்டுமென நிபந்தனையாய் விட்டது. பிறகு மறு பரீட்சையி லுட்கார்ந்து தேறிவிட்டார். ஆனால் அம் மகிழ்ச்சியை அனுபவிக்க தந்தையுமில்லை.

ஜலந்தர் ஆரிய சமாஜத்தில் பெரிய விவாதங்கள் நடைபெறச் செய்வார். ஒரு சமயம் பெரிய அறிஞர் எதிர் தர்க்கத்திற்கு ஆஜராயிருந்தபடியால் முன்ஷிராமன் லாகூர் ஆரிய சமாஜத்திற்கு எழுதி விவாதஞ்செய்ய எவரையாவது அனுப்ப வேண்டுமென விரும்பினர். அவர்கள் செவி சாய்க்கவில்லை.

உடனே முன்ஷிராமன் எழுந்திருந்து தானே விவாதம் செய்து ஜயமடைந்தார். தன் கையே தனக்குதவியாக வேண்டும். இனி அன்னியர்களின் உதவியை நாடவே கூடாதெனக் கருதினர்.

ஆரிய சமாஜிகள் ஜயித்துவிட்டார்கள் என்பதை அறிந்து புராணிகர்கள் சிறந்த ஐந்து பண்டிதர்களை நியமித்து ஆரிய சமாஜத்தை தூஷிக்கலானார்கள். ஆனால் முன்ஷிராமனின் நண்பர்களே அங்கு சென்று ஐந்து பண்டிதர்களை நோக்கி, "நீங்கள் கள்ளங் கபடமாய்ச் செய்யும் புன்மைகளை யெல்லாம் நாங்கள் அறிவோம். ஒருவருமறியார்கள் என எண்ணிச் செய்யும் உங்கள் குறைகளினின்று

நீங்கள் கழிந்தாலொழிய உங்களிடம் நாங்கள் பேசத் தயாராயில்லை" என்றவுடன், அவர்கள் ஓடிவிட்டார்கள்.

ஸனாதன தர்மிகளின் கூட்டமொன்று நடைபெற்றது. ஆரிய சமாஜிகளைப்பற்றி இலேசாய்ப் பேசினார்கள். முன் ஷிராமன் எழுந்து பதிலளித்துப் பேசுங்கால், அவர்கள் வெட்கமடைந்து தலைகுனிந்து இடமறியாமல் மறைந்து விட்டார்கள்.

ஆரிய சமாஜத்தைப் பிரசாரஞ்செய்ய வாரந்தோறும் ஜனக்கூட்டமான இடங்களில் உபந்நியாசஞ் செய்வது மாத்திரமன்னியில், எல்லா இந்துக்களின் விசேஷ நாட்களி லும் பிரபலமான பிரசாரஞ் செய்வார்.

ஆரிய சமாஜத்திற்குப் பொருளில்லை எனக்கருதி வீடு தோறும் கலயமொன்று வைத்து ஒருபிடி அரிசியாவது தினந்தோறும் கிரகஸ்தர்களை அளிக்கும்படி செய்து அவை களையெல்லாம் வாரந்தோறும் ஒன்று சேர்த்து பொருள் சேகரிப்பார். இவன் எவனோ படித்தவன், பிச்சைக்காகப் பாடிக்கொண்டு நடுத்தெருவில் செல்லுகிறான். வாயினால் வினவுவதில்லை. கிடைத்ததையும் தனக்கு பயன் செய்து கொள்வதில்லை. விசித்திர பிச்சைக்காரன் இவன், என முன்ஷிராமன் தெருவில் ஆரிய சமாஜ பஜனையை கூட்டிச் செல்லும் பொழுதெல்லாம், வயோதிகர்கள் உரைப்பது வழக்கம்.

ஆரிய சமாஜத்திலே இங்ஙனம் அடிக்கடி உபந்நி யாசஞ் செய்ததால் பெயரும் பிரக்யாதியாகி அதனால் வக் கீல் தொழிலில் வருமானமும் அதிகரித்தது.

ஆனால் கொடூரமாய்க் கட்சிக்காரர்களிடமும் சத்தி யமே உரைக்க திட்டஞ் செய்ததால் நாளடைவில் மாதம்

ரூ. 1000-வருமானத்தினின்றும் ரூபா 100-ரூ. 150 ஆகி விட்டது.

பொருள் குறைந்தபோதிலும் அக்கரை இல்லை. சத்தியமே வேண்டுமென மனதில் திருப்தியானார்.

ஜலந்தர் ஆரிய சமாஜ வருஷோற்சவத்தைப் பெரும் வைபவமாகக் கொண்டாடி எங்கும் சத்திய யுகம் நிலவ வேண்டுமென ஆர்வமாகி காலையில் பஜனை கோஷ்டியுடன் புறப்பட்டு ஈசோபாசனையில் எல்லோரும் இணைவதற்குத் துணைபுரியவும் என தெள்ளிய அமுத மொழிகளுடன் கானஞ் செய்துகொண்டு போவார்.

---

## அத்தியாயம் ஏழு.

### குருகுல எண்ணம்

முன்ஷிராமனுக்கு சில குழந்தைகளும் பிறந்துவிட்டது. முதற் குழந்தையை கிறிஸ்தவப் பாடசாலைக்கு அனுப்பிவந்தார். அக் குழந்தையான வேத குமாரி என்னும்பெண் பாடசாலையில் கிறிஸ்துவத் துதி செய்வதொன்றையே கற்பிக்கப்பட்டிருப்பதைக் கண்டு நமது ஹிந்து குழந்தைகளை நமது நன்மைகளை அறிவதற்குமுன் அந்நிய நாட்டு புன்மைகளை பற்றுகிறதென தனது நண்பர்களுக்குப் பகிரங்கஞ் செய்து தனிப்பெண் பாடசாலை ஒன்று ஏற்படுத்தவேண்டுமென நெருங்கிய நல்லார்களைக் கொண்டு சிறிய பொருளுடனே ஒரு கன்னியாப்பாடசாலையை ஏற்படுத்தினார். இது தான் இப்பொழுது ஜலந்தர் கன்னியாலயம் எனப்படுவது.

பிறகு பாடசாலைக்குப் பொருள் வேண்டும், சமாஜப்

பிரசாரமும் பெருமையாக வேண்டுமென எண்ணி சதர்ம பிரசார் என்னும் உருதுவாரப் பத்திரிகை யொன்று ஆரம் பித்தார். உருது பாஷையிலேயே அப்பத்திரிகை வெகு தினங்கள் தோன்றியபோதிலும் கடைசியில் அதை ஹிந்தி பத்திரிகையாக்கி விட்டார். அதனால் ஹிந்தி பிரசாரம் பஞ்சாப் முழுவதும் தழைத்தோங்கிற்று.

வக்கீல் தொழிலில் மிகுதியான எல்லாக்காலங்களையும் சமாஜம் முன்னேறுவதற்கான எல்லாச்செயல்களிலும் ஈடு பட்டார். சமாஜிகளாயுள்ள ஒவ்வொரு அங்கத்தினருடன் சகோதரர்போல் நடந்தார், ஒவ்வொருவரும் முன்ஷிராமனை எனது ஆப்தநண்பன் எனக் கூறுவார்கள். இக்காலத்தி லிருந்த குருதத்தன் என்னும் இளைஞனைக் கண்டால் அவ ருக்குப் பிரியமதிகம். அவன் எம். எ. பரீசை தேறி வெகு மாதங்கள் வரை நாஸ்திகனு யிருந்தான். சுவாமி தயானந்தருடன் சம்பாஷணை செய்து ஆஸ்திகனுனன். வடமொழியை வெகு தினம் வரை கற்காமல் பிறகு தயா னந்தர் அமுதத்தைப் பருகவேண்டுமென வடமொழியில் ஒரு வருடத்தில் பெரும் பாண்டித்திய மடைந்தான். அவன் அல்லும் பகலும் ஆரியசமாஜத்தின் அபிவிருத்திக்காக உழை த்து வந்தான். அவன் செய்யும் உபந்யாசங்களைச் செவி யுற பெரும் ஐரோப்பியர்கள் எல்லாம் பிரசன்னமாவார்கள். தயானந்த சித்தாந்தத்தை மோட்சமூலருடன் தர்க்கஞ் செய்து ஸ்தாபனஞ் செய்தான். மோட்சமூலர் பதில் அளிக்கச் சக்தியற்று குருதத்தர் கூறியதையே கடைசியில் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. இந்த குருதத்தன் இறந்தான். முன்ஷிராமன் விசனமடைந்து 'ஆரிய சூரியன்' மறைந்ததே எனச் சற்று துக்கமடைந்தார். இன்னம் பல நெருங்கிய நண்பர்களும் இறந்தார்கள். 1891-வருடம்

அவர் மனைவியும் காலஞ் சென்றார். இவைகளெல்லாம் அவர் மனதில் துக்கத்தை அதிகரித்து விட்டது. இனி விவாகம் செய்துகொள்ளப் போவதில்லை, வைதீக புருடர்கள் ஒரு விவாகத்திற்கு அதிகமாய்ச் செய்தல் கூடாது என்னும் சித்தாந்தத்தைச் சிறப்பிக்க மறு விவாகமும் செய்து கொள்ளவில்லை. கிரகஸ்தாசிரமத்தி லிருப்பது சமாஜத் தொண்டு செய்வதற்கும் இடையூறு யிருக்கின்றதென அவர் அடிக்கடி எண்ணுவதுண்டு.

ஆரிய சமாஜத்திலே மாமிசம் புசிக்கும் விஷயமாகவும், கல்வியின் நியமத்திலும் அடிக்கடி சச்சரவு தோன்றுவதுண்டு. ஹன்ஸராஜர் மாமிசம் புசிப்பவர். கலாசாலையிலுள்ள எல்லா மாணவர்களும் மாமிசம் புசிப்பதற்கு சந்தர்ப்ப மளித்து வந்தார். இது முன்ஷிராமனுக்குப் பிரியமில்லை. மாமிசம் புசிக்காம லிருப்பதே நன்மை என்றார். ஆனால் கலாசாலை ஹன்சராஜரின் தலைமையில் நடைபெற்றிருந்ததால் இவர் சொல்வதை ஒருவரும் செவி கொடுக்கவில்லை.

ஆரிய சமாஜிகளில் உபதேசிகளை நியமிக்க ஒரு பாடசாலை ஏற்படுத்த வேண்டுமென நினைத்தார். அதைச்செய்ய வேண்டுமென எத்தனை முறை பிரார்த்தித்தும் பஞ்சாப் பிரதிநிதி சபை இணங்கவில்லை.

அப்பால் மனம் பதைத்தது. நாம் மனப்பூர்வமாய் உழைக்க நமது கோரிக்கைகளை நாடியும் ஆரிய நண்பர்கள் இணங்குவது இல்லை. தயானந்தரின் ஞாபகார்த்தமாயுள்ள கலாசாலையின் நோக்கமென்ன ? இக் கலாசாலையில் வைதீகப் பிரசாரத்திற்கேற்ற போதனையும் உற்சாகமும் அளிக்கப்படவில்லையாதலால், ஆரிய சமாஜிகளின் எல்லாப் பணத்

தையும் இக்கலாசாலையில் செலவழிப்பது வீண் ? இதைச் சீர்திருத்தி வடமொழியும், ஹிந்தியும் அதிகமாய்க் கற்பிக்கப்படவேண்டுமென எவ்வளவோ முயன்றார். ஆனால் கலாசாலை அதிகாரிகள் இதை கவனிக்கவில்லை. மாமிசப் பிரசினை மறுபடியும் தோன்றிவிட்டது. கடைசியில் உஷ்ணம் அதிகரித்து இருகட்சிகளாய்விட்டது. முன்ஷிராமன் இனி இக்கட்சியிருந்து பயனில்லை. நாம் தனிமையாகி தயானந்தரின் தெள்ளமுதத்தை தரணி எங்கும் பாயச் செய்யவேண்டும். வைதீக தர்மப் பிரசாரத்திற்கு வருடந்தோறும் இளைஞர்கள் முன்வர வேண்டும் என்னும் நோக்கத்துடன் இனி தனிமையாய் வேலைசெய்ய வேண்டுமென உறுதி கொண்டார்.

---

## அத்தியாயம் எட்டு

### குருகுலம் ஏன் வேண்டும் ?

மனோவன்மையுடன் தேகவன்மை வேண்டும். அந்தப் பெருக்க, காட்டிலேயே ஓடி ஆடி நீந்தச்சந்தர்ப்ப மிருக்குமென்க் கானக சாலைகளை ஆதியில் குணமாக்கினார்கள். காட்டிலே, செடி புல் பூண்டு மிருகம் பட்சிகளையும் புத்தகங்களாகக் கருத வேண்டு மென்பதே புராதன ஆரியர்களின் கருத்து.

குழந்தைகள் கற்குங் காலத்தில் ஆண்கள் வேருகவும் பெண்கள் தனிமையாகவும் கற்பதே குணத்தை அளிக்கும். ஆண்கள் ஞாபகமாவதும் பெண்கள் புலன்களைப் பெறுவதும் வாழ்க்கையின் வேற்றுமையான காலங்களிலாவதால் ஒன்று சேர்ந்து கற்பதில் குணக் கேட்டை விளைவிக்கும்.

ஒரு குலத்திலேயுள்ள குழந்தைகளுக் கெல்லாம் பிரும்மசாரி எனப்பெயர். பிரும்மம் என்றால் பெரியது. அப்பெரும் பொருளை நாடுபவர்கள் பிரும்மசாரிகளாவர். குருகுலத்திலே எல்லாப்பிரும்மசாரிகளும் ஒன்றே. அங்கு அரசனுக்கும் ஆண்டிக்கும் வேற்றுமை இல்லை. சாதி வித்தியாச மெல்லாம் அங்கு அழிய வேண்டும். நான் மன்னனின் மகன், ஏழை மகன் என்பதை ஒருவன் அங்கு மறந்து விடுவான். சமூகத்தின் நிலையமே குருகுல மாவதால் அங்கு யாவரும் சமத்துவமே. அறிவினால் ஏற்றத் தாழ்வு அங்கு புலனாகுமே யொழிய பொன் பொருள் ஒருவனைப் பெரியவனாக்காது. பல வருடங்கள் குழந்தைகள் சமத்துவமாய் வாழ்வதால் பெரியவர்களானால் சகோதரத் துவம் வளர்ந்தோங்கும். சின்னஞ் சிறு சண்டைகள் தோன்றாது. கிருஷ்ணன் மன்னனாயிருக்குங் காலத்தில் தன் மாணவ நண்பனான எளிய சுதாமனை எங்ஙனம் நல்வரவு கூறினானோ, அங்ஙனமே குரு குலத்தால் இக் காலத்திலும் நடைபெறலாம்.

அதுவுமன்னியில் குருகுலத்தில் ஆசாரியனிடம் மாணவன் நெருங்கிப் பழக சந்தர்ப்பமேற்படுவதால் ஒவ்வொரு மாணவனின் குறைகளையும் நன்றாய் அறிந்து குருநாதன், பிழைகளைத் திருத்த முடியும்.

குருகுலத்தில் அறிவானது, உண்டு உல்லாசமாயிருப் பதற்காகவே கற்பிக்கப் படுவதில்லை. மற்றவர்களை ஏமாற்று வதற்கும் அல்லது சர்க்கார் நிலையங்களில் தாசர்களாவதற் கும் கற்பிக்கப்படுவதில்லை. தாய் பாஷையைக் கொலை செய்யும் நவீன ஸ்கூல்கள் போல் குருகுலங்கள் கசாப்புக் களங்கலாகாது.

புராதன நூல்களெல்லாம் மூடர் புராணம் எனப்

புகலும் நவீன கற்பனைகள் நிலவாது. பாரத மக்களின் புராதன பெரியோர்களெல்லாம் பேடிகள் எனவும், புத்தி யற்றவர்கள் எனவும் குழந்தைகளுக்கு கற்பிக்கமாட்டார் கள். பாரத மக்கள் ஒற்றுமை யுடனுகார்கள்; அவர் களுக்கு புத்தி இல்லையென பாரபட்சமான சிட்சைகள் எப் பொழுதும் அங்கு அனுமதிப்பதில்லை. இத்தகைய கல்விச் சாலையே அவசியமென முன்ஷிராமன் எண்ணினர்.

கல்வியைப் பற்றியும் குருகுலத்தைப் பற்றியும் ஸ்ரீ தயானந்தர் அடியிற் கண்டவாறு கூறுவது போல் நமது குருகுலங்களை ஸ்தாபனஞ் செய்ய வேண்டும்.

சிறந்த கல்வியால், செம்மையான குணத்தால், சீல மான ஒழுக்கத்தால், சாந்த சுபாவத்தால், குழந்தைகளைக் குணக்குன்று போல் செய்வது, பெற்ருேர், ஆசாரியர், உற வினர்களின் முதற் கடமையாகும்.

பொன் ஆபரணங்கள் அணிவது ஆன்மாவை ஒரு பொழுதும் அழகு பெறச் செய்யாது. அதனுல் அகங்கார மும் அதம குணங்களுமே அபிவிருத்தி யடையும். கள்ளர் பயமும் காலன் சேர்க்கையும் ஆபரணத்தால் துரிதமாக லாம். ஆபரமணிந்து கொலைபுரியப்பட்ட குழந்தைகளோ கணக்கில்லை.

கல்வியிலே கனிந்து நற்குணம் பொருந்தி, நன் மையை நாடி புன்மைகளி னின்றும் பிரிந்து, அறியா மையை அழித்து அன்னியர்களின் ஆனந்தத்தையே நாடி, பொருளை நோக்காமல் கல்வியைக் கற்பிப்பவர்களே சிறந்த புருடர்களாவர்.

ஆண், பெண்களும் எட்டாவது வயதில் உபநயனஞ் செய்யப்பட்டு அவரவர்கள் குருகுலங்களுக்கு அனுப்பப்

படவேண்டும். இழி குணமுள்ள குருநாதரிடம் குழந்தைகளை ஒரு பொழுதும் அனுப்பலாகாது. தர்ம சிந்தனையும் பரோபகார முள்ளவர்களே குருநாதர்க ளாவதற்கு அருகராவர். குருகுலங்கள் தனிமையான இடத்தில் ஸ்தாபித மாவதே சிறந்தது. சிறுமி குருகுலங்கள் சிறுவர் குருகுலங்களினின்று குறைந்தது மூன்று மைலாவது இருப்பது நிபந்தனை. சிறுவர் குருகுலத்தில் வேலைக்காரர்களுள் ஆண்களும், பெண்கள் குருகுலத்தில் பெண்களுமே இருப்பது பெருமை. 5 வயது ஆண் குழந்தை பெண் குருகுலத்திலும், 5 வயது பெண் குழந்தை ஆண் குருகுலத்திலும் செல்லலாகாது. குருகுலங்களி லிருக்கும் பிரம்மசாரிகள் இவ்வெண் இன்பங்களினின்று விலகவேண்டும்.

காமக் கண்களுடன் காண்பது. காயப்பரிசம் செய்வது. தேக சம்பந்தம் நாடுவது, அன்யோன்யமாய்ப்பேசுவது. ஆண் பெண் விளையாடுவது, பரஸ்பரம் பிரிய நட்பு, சிற்றின்ப நூல்கள் படிப்பது, சீலம் சிறப்பற்ற சிந்தனைகள். குருநாதர்கள் சிறுவர்கள் இவ் வெண் இன்பங்களினின்றும் விலக முயற்சி செய்து குழந்தைகளை தேகம், மனம், ஆன்மா வன்மையாவதற்கேற்ற செயல்களைச்செய்யச் செய்வதே சிறப்பை அளிக்கும். நகரத்திலிருந்து குருகுலம் குறைந்தது 5 மைலிருப்பதே சிறந்தது. உணவு, உடை முதலியவைகளில் வேற்றுமை என்பது கூடாது. அரசனுயினும் ஆண்டிமகனுயினும் சரி யாவரும் ஒருவர் என்றே அறியவும். குழந்தைகள் அடிக்கடி பெற்றோர்களைப் பார்ப்பதும் அவர்கள் கடிதம் எழுதுவதையும் கண்டித்து, உலக எண்ணத்தில் புத்தி செல்லாத வண்ணம் பார்த்து, ஓய்வு நேரங்களையும் குருநாதர்கள் நன்றாய் கவனித்து உத்தம

புருஷர்களாக வேண்டுமென ஆசாரியன் சதாகாலமும் சிந்தனையிலாக வேண்டும்.

இவை தான் குருகுலத்தைப்பற்றி நான் எண்ணுவது. இக் குருகுலங்களே வேண்டுமென நமது தயானந்தர் கூறியுளார். புராதன் காலங்களில் கல்வி கற்று பெருமை அடைந்தது இத்தகைய குருகுல கற்பனையிலேயாகும். தயானந்த கலாசாலை எனப்படுவது உண்மையான கல்வியாகாது. ஆரிய சமாஜம் இனி ஆரிய வழியிலேயே கற்பிக்க முயலவேண்டுவ தவசியம். தயானந்த இங்கிலீஷ் கலாசாலை அதிகாரிகளுக்கு குருகுலத்தின் மேன்மையை வற்புறுத்தியும் அவர்கள் கவனிக்கவில்லை யாதலால், இனி நாம் தனியாகத் திட்டஞ் செய்ய வேண்டுமென முன்ஷி ராமன் ஓர் தீர்மானம் கொண்டு நிறைவேற்றினர்.

---

## அத்தியாயம் ஒன்பது

### குருகுலத்தின் மேன்மை

பழைய பாரத நாட்டிலே புலனை குருகுலங்களே குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்க சரியான நிலையம் என எண்ணினர்; பூ மண்டலம் முழுமையும் இக் குருகுல கல்வியே துணமாகவேண்டும். கூறப்போகில் குழந்தையின் கல்வி அன்னையின் கர்ப்பத்தில் உதித்த உடனே ஆரம்பமாகும். பற்பல சம்ஸ்காரங்களைச் செய்து, புற சாதனங்கள் புலனுக்கி அதனல் குழந்தையின் உடல், உள்ளம், உயிர் செம்மையாகச் செய்வது சிறப்பை அளிக்கும். குழந்தைக்கு முதல் குருநாதன் பெற்றெடுத்த தாயாதும். கர்ப்பமாயிருக்குங் காலத்தில் அன்னையின் ஒவ்வொரு நினைவும் குழந்தையின் குணத்தை மேன்மையாகவோ தாழ்மை

யாகவோ செய்துவிடும். அன்னைக்குப் பிறகு தந்தையே குழந்தைக் குணமுடனாக துணையளிப்பார். குருகுலம் என்பது இவர்களுக்குப் பிறகு ஆசாரியானால் அளிக்கப்படும் கல்விப் பயிற்சிக்கே குருகுலம் எனக் கூறுவது.

ஆதிகாலத்தில் இக்கல்வியின் ஆரம்ப நிலையை உபநயனம் என்னும் பூநூல் தரிக்கும் சம்ஸ்காரத்தால் ஆரம்பிப்பார்கள். உபநயனம் என்றால் தன்னிடமே தான் செல்வது. இந்த சம்ஸ்கார காலத்திற்கு குழந்தைகளைக் காப்பாற்றும் பொறுப்பு ஆசாரியனையே சேர்ந்தது.

குருகுலம் என்றால் இரவும் பகலும் சதா காலமும் குருநாதனிடம் வசிப்பது என்பதாகும். குருகுலத்தில் குழந்தைகள் சென்றதும் அவர்கள் குருநாதனின் மக்கட்களே. அதாவது குருவின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். வேதத்தில் குருநாதனை அன்னைக்குச் சமானமாய்க் கூறும். அன்னை குழந்தையை கர்ப்பத்தில் காப்பாற்றுவது போல் 'நானும் குழந்தையை என்கர்ப்பத்தி லிருப்பதாகக் கருதுவேன் என உபநயன சம்ஸ்காரத்தில் அவர் உரைக்கவேண்டும். அதுவே குருநாதரின் கடமை.

குருநாதன் எங்ஙன மிருக்கவேண்டும்? கேவலம் பொருள் சம்பாதிப்பதற்காக ஆசான் ஆகலாகாது. சம்பளத்திற்காக சேவகம் செய்யும் வேலை எனவும் சிந்திக்கலாகாது. பெருமை, புகழுக்காகவும் இவ்வேலையில் அமரலாகாது. இதனால் ஒருவன் பட்டினியிருந்து தன்னையே சித்திரவதை செய்துக்கொண்டு தரணி தளர வேண்டுமென்பதில்லை. அவனின் அத்தியாவசியமான வாழ்க்கைக்கு எத்துணை பொருள் அவசியமோ அப்பொருளையே பெற்றும் குழந்தைகளை தவிர்த்து வேறு எங்கும் கவனஞ் செலுத்தாமல் சிறி

யோர் செம்மையாகும் செயல் ஒன்றிலேயே சாய வேண்டும்.

குருகுலத்தைக் காப்பாற்றுவது ஜன சமூகத்தின் கடமையாகும். குருநாதன் தனிப்பட்ட எம்மனிதனுக்கும் ஊழியனு யிருக்கலாகாது.

குழந்தைகளுடன் சமத்துவமாய் வேற்றுமை யென்பதை கனவிலும் கருதாமல் எல்லாக் குழந்தைகளையும் முன்னேறச் செய்வது என் கடமை என எல்லாக் காலத்திலு முழைக்க வேண்டும்.

இதைவிட பெரிய தொண்டு வேறில்லை. நாட்டில் நடமாடும் பொக்கிஷங்களே குழந்தைகள். வருங்கால தேசத்தின் வாழ்வும் வீழ்ச்சியும் இக் குழந்தைகளின் கல்விக்கேற்ற வாறாகும். பழைய பெருமைகளெல்லாம் பாழாகாமலிருக்க வேண்டுமானல் குழந்தைகளை கவனிப்பதில் கண்ணுங் கருத்துமாயிருக்க வேண்டும்.

நகரங்களினின்று குருகுலங்கள் தனிமையாயிருக்க வேண்டும். பெரிய இயந்திரசாலைகளும், சத்தமிடும் ஆலயங்களின் சமீப மிருந்தால் சாந்தமாய் கல்வி கற்க இயலாது. அடர்ந்த வனம் ஒடும் நதியினருகே இருந்தால் கல்வி கற்பதற்கு சாதகமாயிருக்கிறதென ரிஷிகள் கூறி யுள்ளார்கள். வனஸ்பதிகளும் நமது மனத்தை மேன்மைபெறச் செய்யும் என்னும் உண்மையை மறக்கலாகாது.

குழந்தைகளைப் பெற்றோர்களிடமிருந்து பொறுப்பை வகிக்குங்கால் நிலம், நீர், கனல் மழைவண்மையையும் பற்றி குருநாதன் கூறுவான். அதன் நோக்கம் குழந்தை பிரகிருதியின் இக்குணங்களிலிருந்து ஆரோக்கியம் பெறவேண்டுமென்பதே கானக வாழ்க்கையிலேயே இவ்வின்பங்களை

எல்லாம் பெறலாம். இவ்வின்பங்களை பெற்ருலொழிய, திடமான சரீரத்தை அடைவது கஷ்டம். குழந்தைகள் சிறு வயதில் திடமுடன் ஆகவில்லையேல் வாழ் நாட்க ளெல்லாம் கஷ்டம் நேரிடும். பிறகு நோய்க் களஞ்சியமா வார்கள். இந் நோக்கத்தை உத்தேசித்துத் தான் கானகத் திலே குருகுலம் வேண்டு மென்பது.

நகரத்திலே கலாசாலைகள் கூடாது. எண்ணிக்கை யற்ற குணங்கெட்டவர்களின் சகவாசத்தால் கெடுவது ஒரு புறமிருக்க, நகரத்தின் ஜனநெருக்க, துர்க்கந்த அசுசியால் அவர்கள் துரிதமாய் நோய்க் கிரையாவார்கள். தேகம் தொலைந்து, மனம் அழிந்த பிறகு, கல்வியிஞலாகும் பய னென்னே? குழந்தைகளின் கல்வி சீரழிந்தால் தேசமும் தொலைந்து விடும். தேசத்திற்கு பிற்காலத்தில் பெரு மையை யளிக்கும் குழந்தைகளை நகரமென்னும் நரகத் தில் நிலவச் செய்து அவரை நாசஞ் செய்யலாமோ?

சூரியோதயத்தை அற்புதமாய்க் கண்டு அஸ்தமத்தை ஆனந்தமுடன் களித்து இயற்கை தேவியின் இன்பத்திலே தினந்தோறும் தோயாமலிருந்தால் திடமான நோக்கமும் தூயமான நினைவும் எங்கிருந்து புலனுகும்? அதுவுமன்னி யில் ஈசன் சந்நிதானத்தில் நான் சிறியவன் என்னும் உணர்வை வேறு எந்த நிலையத்தில் அனுபவிப்பான்?

ஈசோபாசனை செய்வதற்கு ஆதிகாலத்தில் மலையின் உச்சியிலும் நதி யோரத்திலும் வனஸ்பதி கூட்டங்களில் சென்று ஆனந்தமாய் பிராணுயாமஞ் செய்து, தேக சுத்தி யாகி மனதை மகாப்பிரபுவினிடஞ் செலுத்தி பெரும் வன் மையைப் பெறுவார்கள். நகரத்திலே வசித்தால் புனித மாய் எங்கு சென்று பரனை உபாசிக்க முடியும்?

காட்டிலே வளர்ந்தால் மரஞ் செடிகளைப்போல் இயல்பாய் கள்ளங்கபட மன்னியில் வளர்வார்கள். நகரத்தில் வசித்தால் பொய் புகலவும், பித்தலாட்டஞ் செய்யவும், கோணவாயும் குறும்புத்தனமாய் வளர்வார்கள்.

---

## அத்தியாயம் பத்து

### குருகுல ஸ்தாபனம்

குருகுலத்தை ஸ்தாபனம் செய்ய வேண்டுமென ஆரிய பிரதிநிதி சபையில் தீர்மானம் ஏக மனதுடன் நிறைவேற்றி வைத்தார். அதுவுமன்னியில் 'சமதர்ம பிரசாரகன்' என்னும் தனது பத்திரிகையில் இதைப் பற்றி பெரிய கிளர்ச்சி யொன்று செய்தார். எங்கும் குதூகலம். சில உண்மையான நண்பர்கள் ஆமோதித்தார்கள். ஆனால் காரியத்தை நிறைவேற்ற ஒருவரும் தோன்றவில்லை. கையிலும் பொருளில்லை. இனி கிளர்ச்சியை செய்து விட்டு நாம் சும்மா யிருப்பதில் பயனில்லை. எங்ஙனமாவது குறைந்தது ரூ. 30,000 இல்லையேல் இச்செயல் செம்மையாகாது என எண்ணி ரூ. 30,000 ஒன்று திரட்டாமல் நான் வீட்டிற்குத் திரும்பி வரப்போவதில்லை என பகிரங்கமாய் சங்கற்பம் செய்து பாரத நாடெங்கும் குருகுல மகிமையை யுரைத்து முப்பதினாயிரம் ரூபாயையும் துரிதமாய்ச் சேர்த்துவிட்டார். குருகுலம், குருகுலம் எனக் கனவு கண்டு ஆகாயக்கோட்டையைக் கட்டுகிறன் எனக் கூறியவர்களெல்லாம் திகைத்து விட்டார்கள்.

பொருள் கிடைத்து விட்டது. இனி குருகுலத்தை நடத்துபவர் எவர் என எங்கும் தேடினார். ஒருவரும் உடல், மனத்தை, அளிப்பவரில்லை. நான் இதற்குத் தியாகஞ்

செய்யவில்லையேல் எவர்தான் இதை கவனிப்பார் என முன்ஷிராமன் மதித்து நானே இதை நிர்வாகஞ்செய்வேன் நானே கானகஞ் சென்று இளைஞர்களுடன் வசித்து இதைப் பரிபூர்ணமாய்ச் செய்துவிடுவேன், வானப் பிரஸ்தாசிரமத்தையும் கைக்கொள்வேன் என நண்பர்களுடன் உரைத்தவுடன், சிலர் தாமும் தியாகஞ் செய்ய வருவதாய் வாக்களித்தார்கள்.

பொருளுண்டு. நிர்வாகிகளும் நியமனமாய்விட்டது. இனி சிறுவர்கள்? சிறு வயது குழந்தைகளை அனுப்பி 25 வயதுவரை கானகத்திலே தனிமையாய் விட்டுவிட எவர் தான் விரும்புவார்? குழந்தைகளை குருநாதரிடம் ஒப்பு வித்து விடுவதற் கேற்ற வீரமுள்ள பெற்றோர்கள் ஒருவரும் காணவில்லை.

இக் கலாசாலையில் கற்றால் வாழ் நாட்களெல்லாம் வீணாகி விடுமே என ஆரியர்களும் அஞ்சினார்கள். உடனே முன்ஷிராமன் தன் இளங்குழந்தைகளாகிய ஹரிச்சந்திரன், இந்திர சந்திரனை, இக் குருகுலத்தின் முதற் பிள்ளைகள் என எங்கும் அறிவித்தார். முன்ஷிராமன் தனது மக்கட்களையே அனுப்புங்கால் நமக்கேன் குறை என நண்பர்களெல்லாம் கருதி அவர்கள் சிறுவர்களையும் அனுப்பி வைத்தார்கள்.

இனி இடம் வேண்டும். கானகமே அவசியம், நதியின் கரை நன்மையை விளைவிக்குமென ஊரெல்லாம் சுற்றினார்.

ஹரித்துவாரஞ் சென்றார். வனதேவதை வன்மையுடன் விளங்கி, பூமலர்களால் புன்னகை புரிந்து, கங்கையினால் இரம்மியமாகி, செடிகொடிகளால் சித்தம் கவர்ந்து, இதைக் காட்டிலும் அருமையான நிலையம் நீ காணமாட்

டாய் என முன்ஷிராமனிடம் மொழிவது போலிருந்தது. இந்த இடத்திலேயே குருகுலத்தை ஸ்தாபனஞ்செய்ய வேண்டும் எனக் கருதுங்கால் அமளசிங்கன் என்னும் ஜமீன் தார் ஒருவன் காங்கிரி கிராமத்திலே நீ கண்ட வனப் பிர தேசம் என்னுடையதாகும். நான் உன்னுடைய சர்வகலா சாலைக்கு இதை இலவசமாய் அளிக்கின்றேன் என முன்ஷி ராமனிடம் அளித்துவிட்டார். முன்ஷிராமனுக்கு இதை விட வேறு மகிழ்ச்சி இல்லை. எல்லா பிரம்மசாரிகளுடன் துரிதமாய் இக்கானகப் பிரதேசத்தை முன்ஷிராமன் அடைந்தார்.

1902ம் வருஷம் மார்ச்சு மாதம் 20ந் தேதி குருகுலம் ஸ்தாபனமாயிற்று. தனக்குச் சொந்தமான எல்லா சொத் துக்களையும் பொருளையும் தானஞ் செய்து வேறு நினைவிலே மனம் நாட்டமாகாதவாறு தன்னை நிலையாக்கிக் கொண்டார். சிறிய குடிசையிலே தன் இரு குழந்தைகளுடன் கலா சாலையை ஆரம்பித்தார். சில நாட்சென்று வேறு குழந்தை களும் அங்கு வந்தார்கள். பல நண்பர்கள் அடிக்கடி வந்து உபசாரஞ் செய்த போதிலும் முன்ஷிராமன் ஒருவரே அங்கு நிரந்தரமாய் வாசஞ் செய்துகொண்டு வந்தார். நற் காரியத்திலே இவரின் விடா முயற்சியையும் பிடிவாத குணத்தையுங் கண்டு மகாத்மா என்னும் மகா ஜன பட் டத்தையும் ஆரியர்கள் அளித்தார்கள். இந்த கண்ணிய மான செல்வப் பெயரை முதன் முதலில் பாராத நாட்டில் பெற்ற பாக்கியம் முன்ஷிராமனுக்கே யாகும். வக்கீல் தொழி லினின்று சமூக ஊழியத்திற்காகவும், பாரத மக்கட்களின் சிட்சைக்காகவும், தன்னையே தியாகஞ் செய்த முன்ஷிராம னுக்கு எங்ஙனம் கண்ணிய மளிக்க வேண்டுமென மகாசனங்களுக்குப் புரியவில்லை. அதனால் அவர் சொல்லும்

ஒவ்வொரு மொழியையும் தேவ மொழி போல் கருதி, தங்களுக்கு நம்பிக்கை இல்லாம லிருந்தபோதிலும், சத்தியமென நடக்கலானார்கள். முன்ஷிராமன் குருகுலத்தில் கற்பிக்கப் போகும் அடியிற்கண்ட கல்வியின் திட்டத்தைக் கண்டு எங்கும் குதூகலம் :—

(1) வேதம், அதன் அங்கங்கள், உபாங்கங்கள் முதலிய சத்திய சாஸ்திரங்கள்.

(2) வடமொழியும் அதன் சாஹித்தியமும்.

(3) இங்கிலீஷ் பாஷையும் அதன் இலக்கியமும்.

(4) எல்லா கற்பனையும் தாய் பாஷை மூலமாகவே கற்பிக்கப்படும்.

(5) தேகப்பயிற்சி, பிராணாயாமம், சந்தியோபாசனை முதலிய பிரும்மசரிய கர்மங்கள்.

(6) பொருள் சம்பாதிப்பதற்கேற்ற கற்பனைகள்.

(7) ஆயுர்வேதம் முதலிய வைத்திய சிட்சை.

உற்சாகத்தை அழித்து, உயிரை நீக்கி, நோக்கமன்னியிலாக்கி, ஆதரவன்னியில் தன்னைத் தானாகவே தூக்கிலிட்டு ஒருவன் தொலைந்து போக சாதகமளிக்க வேண்டுமானால் அவனிடஞ் சென்று, உன் பாட்டன் முப்பாட்டன் எல்லாம் மூர்க்கர்கள், உங்கள் புராண சாஸ்திரங்கள் எல்லாம் கட்டுக்கதைகள், பேடிகளே உங்கள் பெரியார்கள், உங்களுக்கு பாஷையில்லை மொழியுமில்லை என உரைத்திடவும். இக்கற்பனைகளே நாட்டி விருப்பதைக் கண்டு, நாமோ நமது மாணாக்கர்களுக்கு பழைய சாஸ்திரங்களின் உண்மையை விளக்க கற்க வேண்டுமென ஒழிந்த நேரங்களி லெல்லாம் கற்று, மாணவர்களை மேன்மையாக்கும் சதாகால முயற்சியி லானார்.

நாட்டிலேயுள்ள எந்த கலாசாலைகளிலும் தாய் பாஷை யில் கற்பிக்கப் படுவதில்லை. தாய் பாஷையில் கற்பிக்கப் படுவதே அசாத்தியம் என ஜனங்கள் எண்ணினார்கள். அவர் புதியதாய் ஆரம்பித்த கலாசாலைக்கேற்ற நூல்களு மில்லை. முன்ஷிராமன் என்ன செய்வது என ஏங்காமல் குருகுலத்திற்காகத் தனி நூல்களை எழுதி, பல வெள்ளை நூல்களை அனுவாதம் செய்து தன்னந்தனியாய் தமது மாணுக்கர்களுக்கு எனவே பிரசுரஞ் செய்தார்.

குழந்தைப் பருவத்தை எல்லாம் என்னிடம் அளித்து விட்டால், காளைப் பருவம் கிழட்டு நிலையிலும், ஒருவனை உனக்குத் தாசனுகச் செய்து விடுவேன். நாட்டின் குழந் தைகளை எல்லாம் என்னிடம் கற்பிக்கப்பட்டால் எதிர் காலத்தில் நீ செய்யப்போகும் யதேச்சாதிகாரத்திற் கெல் லாம் தலையாட்டும் தம்பிரான்களை நான் சிருட்டித்து விடு வேன்; நீ அவர்களை என்ன வேண்டுமானுலும் செய்ய லாம் என பிரஞ்சு பாதிரி யொருவர் ஒரு கொடுங்கோல் மன்னரிடம்கூறியதுபோல் குழந்தைகளினிடமே வருங்கால வாழ்க்கை என்பதை அறிந்து சகத் பிரசித்தியான தயா னந்தர் தனது சத்தியார்த்தப் பிரகாசத்தில் கடவுளைப்பற்றி முதன்மையாய்ச் சொல்லியவுடன், குழந்தைகளைப் பற்றியே இரண்டாவது அத்தியாயத்தில் கூறியுளார்

முன்ஷிராமன் இதையே மனத்திலாக்கி, ஈசோபாசனை செய்யுங்காலத்திலும் குழந்தைகளுடன் சேர்ந்து செய் வார்.

நமக்கு நாமே உதவி செய்து கொள்ள சக்தி இல்லை யேல் நாம் இருந்தும் பயனில்லை. மற்றவர்கள் உதவியை நாடினுல் அவர்கள் சொல்வது போல் நடக்க வேண்டும்.

அவர்கள் எண்ணத்திற்கு அடிமையாக வேண்டுமென எண்ணி சர்க்காரிடமிருந்து எத்தகைய காரணத்தின் நிமித்தமும் பொருள் பெறக்கூடாது என நிபந்தனையை குருகுல நியமங்களில் ஒன்றாய்ச் செய்தார். சர்க்காரிடம் பொருள் பெற்றால் அவர்கள் திட்டத்திற்குட்பட வேண்டும், அதனால் சர்க்கார் தாசனாகவும் ஆய்விடுவோம் என அஞ்சி, எனக்கு அப்பொருளே வேண்டாமென அஞ்சாமல் ஒருமுறை சர்க்காருக்கும் அறிவித்து விட்டார்.

ஐக்கிய மாகாண கவர்னராயிருந்த சர். ஜேம்ஸ் மேஸ்டன் கலாசாலையைக் காண ஒருமுறை வந்தபொழுது நீர் இஷ்டம் வைத்தால் உங்களுக்கு வேண்டிய பொருளை என் சர்க்காரும் அளிக்கும் எனக் கூறியவுடன் உமக்கு வந்தனம் என மகிழ்ச்சியுடன் மறுத்தார்.

குருகுலத்தில் ஒருமுறை பொருள் கஷ்டம் ஏற்பட்டு விட்டது. முன்ஷிராமன் நான் ஒரு வேளை புசித்தே காலந் தள்ளுவேன் என்றார். உடனே மற்ற ஆசிரியர்களெல்லாம் பரஸ்பரம் போட்டியுடனாகி எனக்கு மாதம் ரூ. 20, 15 போதுமென திருப்தியாகி தங்கள் மாதச் சம்பளங்களைக் குறைத்துக் கொண்டார்கள்.

ஆரிய சமாஜிகளிலே இங்ஙனம் இரு கட்சிகளாகி குருகுல கட்சி என ஒரு கட்சியும் காலேஜ் கட்சி எனவும் பிரிந்து, அவரவர்கள் தனிமையாயிருந்து வேலை செய்து வருங்கால் சத்துருக்களு மதிக மானார்கள். புராண பொய்ப் புரட்டுக்களை கண்டனஞ் செய்ததால்,ஸனாதனிகள் சந்தர்ப்ப மெல்லாம் நாடி ஆரிய சமாஜத்தை அவதூறு செய்வது சகஜமாய்விட்டது. சீர்திருத்தக்காரர்களும் சமயம் வாய்த்த பொழுதெல்லாம் இலேசாய்ப் பேசினார்கள். கிறிஸ்தவ

பாதிரிகள் இனி நம்மிஷ்டம் போல் பஞ்சமர்களை ஞானஸ்ஞானம் பெறும்படிச் செய்ய இயலாது. ஒரு வேளை செய்த போதிலும், மறுபடியும் ஆரிய சமாஜிகள் தலையிட்டு இந்துக்களை சுத்திசெய்து விடுவார்கள் எனக் கலங்கி சர்க்கார் பெரிய உத்தியோகஸ்தர்களிடம் மறை முகமாய் ஆரிய சமாஜத்தை சுடர்விட்டெரியும் நெருப்பு எனக் கூறினார்கள்.

ஆனால் அவதூறு செய்தவர்களில் முதல் பாக்கியம் பெற்றவர் தேவ சமாஜத்தை ஸ்தாபித்த அக்கினி ஹோத்திரி என்பவராகும். ஈசனில்லை எனச் சொல்லி தான் ஒருவனே குரு பகவான் என விசித்திர சித்தாந்தத்தை பிரசாரஞ் செய்தவராகும்.

அக்கினி ஹோத்திரி ரூ. 150 சம்பளத்தில் சர்க்கார் உத்தியோகத்திலிருந்தவர். அதை விட்டகன்று சில வருடங்கள் பிரம்ம சமாஜத்திற்கு உழைத்து வந்தார். பிறகே தான் தலைவனாக விரும்பி தேவ சமாஜத்தை ஸ்தாபித்தார்.

---

## அத்தியாயம் பதினொன்று.

### குருகுல மகிமை.

அவர் முதல் மனைவி இறந்தவுடன் வங்காள விதவையொருவளை மணந்தார். அவளும் ஒரு மகளைப் பெற்ற பின் மரித்தவுடன், தன்னிடம் கற்றுவந்த 16 வயது மங்கை ஒருவளை மணந்தார்.

40 வயதுள்ள அவர் 16 வயது மங்கையை மணந்ததும் ஊர் ஜனங்களெல்லாம் கண்டு வியந்து எவனோ ஒருவன், ஆச்சாரியன் 40 வயது. கற்கும் 16 வயது கன்னிகை

யை மணந்தான். சத்தியமே நீ செத்து விட்டாயோ. ஐயோ! ஐயோ!! ஐயையோ!!! என விளம்பரங்கள் எல்லா வீட்டுச் சுவர்களிலும் ஒட்டி விட்டான். அக்கினி ஹோத்திரி இதைக்கண்டு ஆரிய சமாஜிகள் தான் இவ் விளம்பரம் செய்திருக்க வேண்டுமென எண்ணி, ஆரிய சமாஜத்தை தூஷிப்பதே விருதமென நினைத்து விட்டார்.

நாட்டிலே இராஜீயக் கிளர்ச்சியும் அதிகரித்தது. ஆரிய சமாஜமே இதற்குக் காரணம் என எங்கும் புகார். சத்தியார்த்தப் பிரகாசம் இராஜத்துரோகமான நூல். ஆரிய சமாஜிகள் தேச சுதந்திரத்திற்காக ஆரியமத வேஷம் தரிப் பவர்கள். அவர்களுக்கு ஈசனைப்பற்றி அக்கரை இல்லை. தேசத்திலே புரட்சியைப் புலனுக்குவதே அவர்கள் நோக்க மேன சர்க்கார் தயவை நாடுபவர்கள் எல்லாம் சோல்ல ஆரம்பித்து விட்டார்கள்.

சர். வாலண்டைன் ஷிரால், தன்னுடைய 'சீலமற்ற இந்திய அசாந்தம்' என்னும் நூலிலே ஆரிய சமாஜம் மதம் என்னும் வேஷத்தால் இராஜத்துரோகம் செய்யும் சஙஞ் சியம் எனக்கூறினர்.

இந்தக் கிளர்ச்சி எல்லாம் குருகுலத்திற்கு பெரும் விபத்தை விளைவித்தது.

ஆரியர்கள் நற்குணம் வாய்ந்தவர்களானல் ஒருவரும் அறியாமலுள்ள நடுக்காட்டிலே கலாசாலையை ஏன் நிர் மாணஞ் செய்ய வேண்டும்?

மாணவர்களுக்குத் தேகப்பயிற்சியும், அச்சமற்ற வாழ்க் கையும், கசரத்து, குச்சிப் பயிற்சி, ஒட்டம், நீந்தல், குதிரை சவாரி, முதலியவைகள் ஏன் வேண்டும்?

அபரிமித எளியவாழ்க்கையும், கஷ்டநிலையும் ஏன்

வற்புறுத்தப் படவேண்டும்? ஆரிய சமாஜிகளெல்லாம், 'குட் மார்னிங்' எனக்கூறுமல் ஏன் 'நமஸ்தே' என்று கூறி தாய் பாஷையில் மொழிந்து சுதேச வஸ்திரமணிந்து சுயநல மற்ற தியாகிகளாய் இருக்கவேண்டும்? சோழியன் சிண்டு சும்மாய் ஆடாது என சனங்களும் பாதிரிகளும் இங்ஙனம் பிரசாரஞ்செய்ததால் குருகுலத்தில் முன்ஷிராமன், ஒற்றர் களால் கவனிக்கப் பட்டது ஒருபுறமிருக்க, எல்லையில்லா சஞ்சலத்தையும், கலக்கத்தையும் பெற்ருர்.

ஆரிய சமாஜத்தின் முதன்மையான ஷியாம்ஜி கிருஷ்ண வர்மா, லாலா லஜபதி ராயர், பாய் பரமானந்தர் இவர்கள் பெரும் பிரக்யாதிபெற்ற தேசபக்தர்களாய், அரசாங்கத்தின் சிறைச்சாலை விருந்தினர்களானதால் ஆரிய சமாஜம் ராஜீய மதமே என சர்க்காரும் ஒருவாறு நிச்சயஞ் செய்து, குருகுலம் கல்வி என்னும் பெயரால் அரசாங்கத்தை க்கவிழ்க்க குழந்தைகளுக்குப் பயிற்சி அளிக்கும் நிலையம் என, பல வெள்ளை ஒற்றர்களையும் அனுப்பி இராப் பகலெல் லாம் உற்று நோக்கினுர்கள்.

ஆனுல் முன்ஷிராமன் அஞ்சா நெஞ்சுடன், தான் ஆரம்பித்த வேலையை விடப் போவதில்லை என தீரமுடன் தன் திட்டம்போல் கலாசாலையை நடத்திவந்தார்.

ஸர் ஜேம்ஸ் மேஸ்டன் ஐக்கியமாகாண கவர்னரா யிருந்த காலத்தில் தாமே நேரில் சென்று பார்ப்போம் என ஒரு முறை இரு முறை அங்கு சென்ருர். அப்போது அங்கு காலையில் குழந்தைகள் எழுந்து குளிர்ந்த ஜலத்தில் மூழ்கி, ஒன்று சேர்ந்து சந்தியோபாசனை செய்து, சுவர மான மொழிகளால் மந்திரங்கள் மொழிந்து, சற்றுப் பால் பருகி, தந்தையுடன் பழகுவது போல் குருநாதர்களிடம்

பயிற்சி பெற்று, பரஸ்பரம் பிரியமுடன் விளையாடி, சுகத்திலே யாவரும் சிரித்து, துக்கத்திலே தாயைப்போல் ஒருவருக் கொருவர் உதவி செய்து, எளிய வாழ்க்கையிலே செல்வச் சிந்தனையோடு நாளெல்லாம் ஆனந்தமாய்க் கழித்து, உறங்குவதற்கு முன்னும் உலக நாயகனை உபாசித்து, ஒப்பில்லா மாணிக்கம்போல் கள்ளங்கபடமற்ற குழந்தைகளைக் கண்டு, நான் தவறுதலாய் நினைத்துவிட்டேன், மனித வாழ்க்கையின் பெரும் நோக்கத்தையே பரமதுணையாய்ப் பற்றியுள்ள இக்கலாசாலையை நான் இனி மறவேன் எனச் சொல்லி ஆனந்தமுடனாகி முன்ஷிராமனை தழுவிக் கொண்டார்.

முன்ஷிராமன் அன்புடன் அளித்த, தேயிலை பானமில்லை காபியும் இங்கு சூன்யம், இத் துளசிக் கஷாயத்தைப் மறுபடியும் பருகி அக்காலத்தில் வைசிராயா யிருந்த லார்டு செம்ஸ்போர்டையும் மறுமுறை இக்கலாசாலைக்குக் கூட்டி வந்தார்.

என் கலாசாலையில் வருபவர்களுக்கு ஒரு நிபந்தனையுண்டு. அவர்கள் பூட்ஸ் காலுடன் உள்ளே வரலாகாது நீங்கள் மரப் பாதரட்சையை அணியவும் என செம்ஸ் போர்டை நோக்கிக் கூறியதிலிருந்து குருகுல நியமங்கள் எத்துணை கடினமாயிருந்தது என்பதைக் காண்பிக்கும்.

அதுவு மன்னியில் 'வைசிராய் அவர்களே! நீங்கள் இங்கு வரவேண்டுமானல், குதிரைப் பட்டாளம், படை அணிவகுப்பு முதலிய படாடோபங்கள் எனது குருகுல நியமத்திற்கு விரோதமானதாகையால், நீங்கள் சாதாரண மனிதரைப் போல் இங்கு வரவேண்டும் என அவர் கூறியதிலிருந்து, எத்துணை சிறிய வாழ்க்கை பெரும் நோக்கத்திற்குஅவசிய மென்பதைப் புலனக்கினர்.

கங்கை நதியினோரம், கதிரவன் கீழே சாயுங்கால், காடு மலைகள் கலக்கமாகி மறையும் பொழுது சுகந்த புகை சுவர மொழியுடன் வாசனையளித்து, வீர வேத முழக்கம் விளங்குங்கால், காஷாய மணிந்து, ஆஜானபாஹுவாய் ஆறடி கழியோடு, கம்பீரக் கண்ணுடன் கைவல்யமொழி கூறி, என்னைக் கவர்ந்து செல்லும் முன்ஷிராமன் என் மனதைக் கொள்ளை கொண்டுபோய் நூற்றுக்கணக்கான வருடங்களின் முன், காலிலி கடலோரம் செம்படவர்களைக் கூட்டிச்சென்று, அமுதமொழி பொழிந்து, அகிலத்தை அதிரச் செய்த முட்புதர் கிரீடம் தரித்த கிறிஸ்தவரிடம் சேர்த்து விட்டான்.

குருகுலத்தை நினைக்கும் பொழுதெல்லாம் முன்ஷிராமனே இயேசுநாதர் என இங்ஙனம் என் மனத்திலாகின்றது என மந்திரியாயுள்ள ராம்சே மாக்டோனல்டு தமது குருகுல யாத்திரையைப்பற்றிக் கூறியுளார். மகாத்மா காந்தி அவர்கள் தென் இந்தியாவிற்கு ஆபிரிக்காவினின்று திரும்பியதும் என் மக்கட்களை அனுப்புவதற்குத் தகுந்த நிலையம் குருகுலமே என தேவதாஸ் காந்தி முதலியவர்களை அங்கு அனுப்புவித்து உண்மையில் தேசியம் கமழும் கலாசாலை என இக் குருகுலத்தைப் பற்றி கூறியுள்ளார்.

இந்தியாவிலுள்ள கலாசாலைகளைச் சீர்திருத்த நியமனம் பெற்ற சர் சாட்லர் அவர்கள் தாய் பாஷையிலேயே கற்பிப்பது சாத்தியமாகும் என அனுபவ பூர்வமாய் நான் குருகுலத்திலேயே கண்டேன் எனக் கூறியுள்ளார்.

பைரன் பிலிப்ஸ் என்னும் ஒரு வெள்ளை யாத்திரிகர் நான் நவீன பாரதத்தில் நேசிப்பது குருகுலமொன்றே. ஆதியில் சிருஷ்டித்த ஏடன் சுவர்க்கமேன நினைக்கிறேன்.

மூர் என்பவரால் கனவு கண்ட உடோபியாவும் இந்த குருகுலமே என இக்கலாசாலையைப் பற்றிக் கூறி இருப்பது யாவரும் அறிந்த விஷயம். குருகுலத்தினின்றி கிளம்பும் பிள்ளைகளில் சதாம்சத்தில் எழுபது இளைஞர்கள் தேசத்திற்காக உழைப்பவர்கள்.

நாட்டிலே தோன்றும் வடமொழி நூல்கள், ஹிந்தி சாஸ்திர நூல்களில் முதன்மையாய் விளங்குவதெல்லாம், குருகுல மாணவர்களின் கல்வி. தன் கையே தனக்குதவி, என் கஷ்டத்திலும் தாசனுகமாட்டேன், தேசத்தோண்டு புரிவதே என் தர்மம் என எங்கு தெளிவாகின்றதோ அங்கு குருகுல உணர்வு என எண்ணவும். இப்பெருமை நாடெல்லாம் நிலவி குருகுலத்திற்கு லட்சக்கணக்கான பொருள்கிடைத்து நிரந்தரமான நிலையம் பெற்றவுடன் முன்ஷிராமன் இனி நாம் குருகுலத்தைவிட்டு விடலாம், ஒழுங்காய் நடைபெற்று வரும். இனி சமூகத்திற்கு ஊழியஞ் செய்ய வேண்டும். இனி நாட்டிற்கு தாசனுக வேண்டும் என்னும் எண்ணமுடனுகி, இனி சன்னியாச மடைந்தால் எப்பற்றன்னியிலும் அவன் பணி செய்யலாம், அதுவே என் கடன் என சுமார் 1916-ம் வருடம் கருதலானுர்.

---

## அத்தியாயம் பன்னிரண்டு

### காசி வாழ்க்கை.

துறவி வாழ்க்கையைப் பெற்றுல் மகாசனங்களுக்கு உழைக்கலாம். நமது சனங்கள் மத சம்பந்தமான குருட்டு நம்பிக்கைகளால் நிறைந்துளார்கள். நமது பெரும் ஸ்தலங்களும் அநீதி நிலையங்களா யிருக்கின்ற

தென முன்ஷிராமன் சிந்திப்பது சகஜம். காசியானது ஹிந்துக்களின் புனித புண்ணிய க்ஷேத்திரமாம். நடுத் தெருவிலே காணும் சிறிய கற்களெல்லாம் மகாதேவர்களாம். தந்தை யில்லாத மக்களும், கொம்புள்ள காளைகளும், கபட சன்னியாசிகளும், உயர்ந்த படிகளும் உங்களைக் காசி கொல்லவில்லையேல் இரவெல்லாம் விலைமகள் குடிசையில் கழித்து இளம்வனிதை வாயினின்றும் மதுபானம் பருகி, சிற்றின்பங்களில் சாய்ந்து பகற் காலத்தில் பண்டிதர், புரோகிதன், பிர்ம்மஞானி என படாடோபஞ் செய்யும் மனிதர்கள் உங்களைப் பாழாக்கி விடுவது நிச்சயம். மதம் என்னும் பெயரால் பாமரர்கள் கொள்ளை யடிக்கப்படுகிறார்கள்.

நான் அன்று பார்த்த இக்காட்சி இன்னம் என் மனத்தை விட்டுப் பிரிய வில்லை. காலை 4 மணி கங்கா நதியினோரம் மாணவனா யிருக்குங்கால் சென்றேன். மனித சஞ்சாரமில்லாத குகைபோலுள்ள கரையினோரம் வந்தவுடன், பெரும் கஷ்டத்திலிருக்கும் ஒரு பெண் மணி 'ஐயோ ஐயோ' என்று கதறுவது என் செவியில் விழுந்தது. இங்கு மங்கும் நோக்கினேன். இருளிலே ஒன்றையும் காணவில்லை. பிறகு அருகிலுள்ள பள்ளமான ஒரு இடத்தைக் கண்டதும் புவியில் படுத்த வண்ணமாய் இருகைகளையும் முன் செலுத்தி, தலை தூக்கி இந்தப்படுபாவி என் கால்களை பிடித்திழுக்கிறான் என் கற்பைக் காப்பாற்றுபவரில்லையோ என சத்த மிடுவதை நோக்கி நான் சென்று அவள் கைகளைப் பிடித்து, மகாபாதகனின் வலையினின்றும் வெகு கஷ்டத்துடன் விடுவித்தேன். குண்டோதரன் போலுள்ள அந்த மகா பாவி துறவி வேஷமணிந்தவனாவன். இந்நடுங்கும் பெண்

ணுடன் கிழவியொருவள் நிற்பதைக் கண்டேன். நண்ப னின் மனைவி. அவன் சட்டப் பரீக்ஷைக்குப் படிக்கிறான் மனைவியை பார்க்கவும் சாவகாசமில்லை. தேவிக்கு துரித மாய் மகன் வேண்டும் என்ற ஆசையினால் அக்கிழவி வெகு தூரத்தில் நின்று கொண்டு, பழம் பால் முதலி யவைகளுடன் நீ பெரியாரை பூஜை செய்து விட்டு வரவும் என அனுப்புவித்தாள். இது தான் அப்பெண் என்னிடம் புகன்றாள். பிறகு அவர்களை அனுப்பித்து விட்டு, போலீஸ்காரன் உதவியுடன் அத்துறவியை அடித் தோட்டினேன். ஆனால் சில நாட்களில் அவன் அவதூத சன்னியாசியாகி ஆண் பெண்கள் அவனை வெகு மரி யாதைகளுடன் கங்கையினோரம் பூசை செய்யப்படுவதைக் கண்டேன்.

இவ்வநியாயங்கள் இன்னம் நடைபெறுகின்றன. ஜனங்கள் இவ்வுண்மையை அறியவில்லையே. இந்தப் படு பாவிகளால் உண்மையான சத்திய புருஷர்களுக்கும் கஷ்டம் ஏற்படுகின்றதே?

நான் சிறுவனா யிருக்கும்பொழுது திரிவேணியிலே கண்ட ஒரு பெரியார் தரிசனம் இன்னம் என் மனத்தை விட்டுச் செல்லவில்லை. நான் அன்று கண்ட மகாத்மா பகலில் தென்படுவதில்லை. நடு நிசியிலேயே அவரைக் காண முடியும். ஒரு இரவு பத்து மணிக்கு அவர் ஆசிர மத்தை அணுகினேன். திறந்த வெளியில் கௌபீனத் துடன் பெரியார் வீற்றிருக்கிறார். விடியற்காலை மூன்று மணிவரை யோகத்தில் இணைந்திருந்தபடியால் கண்களை விழிக்கவில்லை. கண்களை திறப்பார் என நான் துரிதமாவ தற்குள் பெருஞ் சிங்கத்தின் கர்ஜனை என் காதில் விழுந்து நான் நடுக்கமடைந்தேன். கானக ராஜனையும் கண்டேன்.

அவன் துறவியினிடஞ் செல்லுவதை நோக்கி திகைத்தேன். சிங்கராஜன் செல்வாக்குடன் சென்று மிருதுவாய் அதன் கால்களால் அவரை எழுப்புவதைக் கண்டேன். மகாத்மா கண்களை விழித்தார். குழந்தையே எல்லாம் ஆனந்தமே. நீ திரும்பிப் போகவும் என சிங்க ராஜனைத் தட்டிக் கொடுத்தார். சிங்க ராஜன் உடனே தன் தலையை மகாத்மாவின் பாதங்களில் வைத்து வணங்கி திரும்பிச்சென்று விட்டான். நான் திகைத்து மகாத்மாவினிடஞ் சென்று நமஸ்காரம் புரிந்தேன். பெரியாரே! நான் இத்தகைய காட்சியை இதுவரையுங் கண்டதில்லையே மிருகேந்திரனையும் நீங்கள் மேன்மையாக்கி விட்டது எங்ஙனம் என எனக்குப் புரியவில்லை.

குழந்தையே! எவனோ வேடன் ஒருவன் துப்பாக்கியினால் இதன் காலை நோக்கிச் சுட்டு விட்டான். சிங்கம் கண்ணீருடன் என்னை அணுகிற்று. நான் மிருதுவாய் அதன் காலைப்பற்றி அந்த சிறிய ரவையை எடுத்தெறிந்து, காயத்தை சுத்தஞ் செய்து குழந்தையே! நீ போய்விடவும் எனச் சொல்லிவிட்டேன். பிறகு சில நாட்களில் சிங்கம் கஷ்டத்தினின்று நீங்கி பூர்ண சுகமாய் விட்டது. அப்பால் தினந்தோறும் யோகத்தினின்று எழுந்திருக்கும் சமயத்தில் என்னை அணுகி பரிசித்து வணங்கிவிட்டுச் சென்று விடுவது அதன் கடமையாய் விட்டது. அகிம்சையின் அற்புதத்தை நோக்கினையோ. அது ஒரு நாளும் வீணாகப் போவதில்லை. இப் பெரியாரை நினைக்கும்பொழுதெல்லாம் முன்னர் நினைவினலான படுபாவிகளும் என் மனத்திலாகின்றன. இப்பாதகர்களை புவியினின்று ஒழிக்க வேண்டும். அதற்கேற்ற வீரம் எனக்கு அவசியமாகும். ஆனல் என்னிடம் வீரமில்லாம

வில்லை, அவ்வீரத்தை எல்லாம் அனுவசியமாகச் செலவு செய்துவிட்டேன்.

காசியிலே நானொரு காலியைப் போல் வேஷமணிந்து செல்ல வேண்டுமேன ஒரு இரவு போக்கிரி உடைகளை எல்லாம் அணிந்துக்கோண்டு கையில் சிறிய கத்தியுடன் ஊரேல்லாம் சுற்றினேன். ஒரு விவாக ஊர்வலமொன்று அப்பொழுது நடைபெற்றது. சில போக்கிரிகள் அங்கு நிலவி வழிப் போக்கர்களை அனுவசியமாக மறித்து சில பெண்மணிகளையும் உபத்திரவஞ் செய்வதைக் கண்டு என் கத்தியினால் நானும் ஆவேசமடைந்து பல துஷ்டர் களைக் குத்திவிட்டு நான் ஒருவரும் அறியாமல் வீடு திரும்பி விட்டேன். பலர் பிடிபட்டனர். நான் தப்பி விட்டேன். நான் துஷ்டர்களைத் தண்டித்தது நியாயமே யாயினும் திருட்டுத் தனமாய் செய்தது உசிதமில்லை. அந்த வீரத்துடன் இனி பகிரங்கமாய் அநியாயத்தை ஒழிப்பதில் ஈடுபட வேண்டும். நம்மைப் போல் நல்லெண் ணங்களுடன் இன்னம் பலர் சீரற்ற வழிகளில் சிறிய நோக்கங்களுக்கு உழைக்கலாம். சங்கராமசிங்கனை நான் இன்னம் மறக்க வில்லை.

சங்கராமசிங்கன் காசியிலே வசித்தவன், இவன் ஒரு விவசாயி. சாதாரணமாய் வாழ்க்கையை நடத்துபவன் சங்கராமசிங்கன் வெளியில் சென்றிருக்குங்கால் போலீஸ் காரர்கள் அவன் வீட்டை நாடி அவன் மனைவியின் கற்பை அழிக்க முயன்றார்கள். இராஜபுத்திரன் வீடு அடைந்து விஷயங்கள் அறிந்து பெரிய உத்தியோகஸ்தர்களிடம் முறையிட்டான். ஆனால் அவர்களும் இதற்கு உளவு என்பதை அறிந்தான். சரி, இனி மனைவியை இச் சதா கால நிந்தனையினின்று நீக்க மறைத்துள்ள கத்தியால்

நிரபராத வனிதைக்குச் சாந்தமளித்து காடு சென்று விட்டான். கத்தி சுற்றுவதில் நிபுணன். துப்பாக்கியிலே திறமை வாய்ந்த ஹாதீம் சிங்கனின் நண்பனுய் விட்டான். ஜெனரல் சங்கராம சிங்கன், காப்டன் ஹாதீம் சிங்கமுடன் சுமார் இருபது முப்பது சிப்பாய்களுக்குத் தலைவர்களாய் விட்டான்.

சங்கராம சிங்கன் தேசபக்தன் என்னும் பெயரையும் பெற்று விட்டான். பிரபுக்களைக் கொள்ளையடிப்பது ஏழைகளைக் காப்பாற்றுவதே அவன் கடமையாய் விட்டது. கானகத்தில் அவன் அனுபவிக்காத ஆனந்தமில்லை. அவன் இஷ்டம் வைத்த பொழுதெல்லாம் கானகத்தில் கானமும், நடனமும், நடைபெறும். காசி, ஜொனபூர், ஆஜ்மீரில் தேசபக்த சங்கராம சிங்கனின் செயல்கள் சிறப்பாயிற்று. சங்கராம சிங்கன் ஏதாவது ஒரு கிராமத்தில் இருப்பதாகத் தெரிந்தவுடன் போலீஸ் சூபரிண்டெண்டெண்டு 15 சேவகர்களோடு அவனைக் கண்டு பிடிக்க வந்துவிடுவார்கள். போலீஸ் சூபரிண்டெண்டண்ட் துரையவர்கள் இரு சேவர்களுடன் தனிமையாக அவனைப் பிடிக்க இங்குமங்கும் சுற்றுவதுண்டு. ஒருமுறை துரையின் இரு சேவகர்களைக் கீழே தள்ளி, சூபிரிண்டெண்டை குதிரையினின்று கீழே உதைத்துத் தள்ளி, பிஸ்டோலைக் காண்பித்து, கையிலிருந்த கடியாரம் பொருள் முதலியவைகளை எல்லாம் பெற்று 'சங்கராமசிங்கனைப் பற்றவேண்டுமானல் நீ இன்னம் சாக்கிரதையாய் வரவேண்டுமெனக் கூறி' சங்கராம சிங்கன் மறைந்து விட்டான். துரை நடுக்க மடைந்து விடுதலையாகி தனது பங்களாவை அடைந்தார்.

காசியிலே சங்கராமசிங்கன் செயல்கள் சார்க்காருக்கு

சஞ்சலத்தை யளித்துவிட்டது. சங்கராம சிங்கனைப் பிடிப்பவர்களுக்கு ஏராளமான வெகுமதி என்றார்கள். எங்கும் விளம்பரம்.

நான் காசியினருகிலேயே யுளேன். சந்திரகிரகணத்திற்குக் கங்கையில் ஸ்னானஞ் செய்ய வருவேன் வீரனாயிருந்தால் என்னைப் பற்றலாம் என விளம்பரங்களில் சங்கராம சிங்கனின் கையெழுத்திட்டு பதிலளிக்கப்பட்டிருந்தது.

காசிமா நகரம். சந்திரகிரகணம், கணக்கில்லாத போலீஸ் சேவகர்கள். யாரோ ஒரு நாட்டான் கம்பளியினால் தன்னைமறைத்துக் கொண்டு ஸ்னானஞ் செய்து விட்டுத் துரிதமானான். சங்கராம சிங்கன் என கர்ச்சனை. கத்தியொன்று மின்னிற்று. கூட்டங் கலைந்தது. 'ஓடுகிறான். பிடிக்கவும், அங்கு பாய்கிறான்' எனக் கூக்குரல். ஆனால் குதிரையோ மறைந்து விட்டது. ஒரே வினாடியில், வெளி ஜில்லாக்களிலிருந்து வந்திருந்த போலீஸ்காரர்களின் உதவியால் ஊரிலுள்ள எல்லா பெரிய சாலைகளின் முடிவில் காவலாய் விட்டது. சில தினங்கள் சங்கராம சிங்கன் நதியின் சலத்திலேயே நாலைந்து நாட்கள் கழித்து 5, 6 நண்பர்களுடன் உணவிற்காக வெளிக் கிளம்பினான். சங்கராம சிங்கன் ஒரு சக்கிலியன் வீட்டில் நுழைந்து விட்டான். வீட்டிற்கு நெருப்பு வைத்து விட்டார்கள். சுடர் விட்டெரிய ஆரம்பித்தது.

பகதூர் சங்கராம சிங்கன் வெளியில் கிளம்பினான். அவன் ஜலத்திலேயே இருந்ததால் அவன் துப்பாக்கி பயனன்னியிலாய் விட்டது. போலீஸ்காரர்கள் சுட்டார்கள். சங்கராம சிங்கன் துப்பாக்கியை கழிபோல் கருதி

எல்லாப் போலீஸ்காரர்களேயும் அடிக்க முயன்ருன். பற்பல போலீஸ்காரர்கள் அவனைச் சுட்டபடியால் 30 ரவைகள் வரை அவன் தேகத்தில் பாய்ந்து கீழே விழுந்து விட்டான். உடனே போலீஸ்காரர்களும் பிடித்து விட்டார்கள். "இத்துணை போலீஸ்காரர்கள் அநேகத் துப்பாக்கிகளைக் கொண்டு என்னைப்பிடித்தது ஒரு அதிசயமில்லை. ஒரே கத்தியை என்னிடம் அளிக்கவும். நீங்கள் இருபது ஆட்களிருந்தபோதிலும் நான் பார்த்துக்கொள்வேன்" எனக்கூறி சிறிது நேரத்திற் கெல்லாம் புவி பிரிந்தான்.

இத்தகைய் வீரர்கள் இன்னம் இல்லாமலில்லை. ஆனல் அவர்கள் வீரத்தை நல்வழியில் உபயோகப் படுத்துவதற்கு நாம் இனி முயற்சி செய்யவேண்டும். துறவி வாழ்க்கையே அதற்கு உதவியளித்து இக்காசிமா நகரத்தைப் புனிதமாக்கி இப்பாஷாண்டிகளேப் பாழாக்கி, இந்து சமூகத்தை சீர்திருத்தி, இச்சனங்களை நல்வழியில் திருப்பி, சின்னுபின்னமாகும் வீரத்தை தலையோங்கச் செய்து, உண்மையான பெரியார்களேயும் புனித பணிகளேயும் பெருமையாக்குவதற்கு சாதகமாயிருக்குமென, 1917-ம் வருடம் சன்னியாசம் பெற்ருர்.

---

## அத்தியாயம் பதின்மூன்று

### பஞ்சமர் முன்னேற்றம்—காங்கிரசும் தீண்டாமையும்.

சுவாமிகள் துறவியானதற்கு வேறு காரணமுண்டு. இதுவரை ஆரிய சமாஜத்திற்காக உழைத்தோம்; இனி இந்துக்களுக்கும் பாரதமக்களுக்கும் உழைக்க வேண்டுமேன்பதே அவர் துணிபு. ஆர்ய சமாஜத்தில் தோன்றிய சிறிய சண்டைகளேயும் அனுவசியக் கண்டனங்களேயும்

அவர் விரும்பவில்லை. விதண்டா வாதங்களும், குதர்க்கங்களும் அவர் மனத்தைக் கலக்கிற்று. எத்தனை முயற்சி செய்தும் அதிகப் பயனில்லாமலாகவே இனி தன்னந் தனிமையாயிருந்து கொண்டு எல்லா சனங்களையும் சமமாக நினைத்து ஊழியஞ் செய்ய வேண்டு மென்பதே அவர் எண்ணம்.

ஆரியசமாஜத்தில் அவருக்குப் போய் நம்பிக்கை இல்லை. ஜலந்தர் பக்கத்திலுள்ள பில்லூரிலே ஆரிய சமாஜமொன்று இருந்தது. இங்குள்ள ஆரியசமாஜ அங்கத்தினர்கள் குடிகாரர்களாகவும் விபசாரர்களாகவு மிருந்தார்கள். பில்லூரிலே ஆரிய சமாஜ அதிபதிகள் ஒழுக்கமற்றிருப்பதால் சமாஜத்திற்கும் அது கெட்ட பெயரை அளிக்கும் என அங்கிருந்த தாசீல்தார் சையத் அப்துல் ஹுசேன் உண்மையாய் வருத்தமுற்று முன்ஷிராமனிடம், (இனி சந்நியாசிப் பெயரான சிரத்தானந்தர் என அழைப்போம்) கூறினார்.

சிரத்தானந்தர் மகம்மதிய தாசீல்தாருக்கு வந்தனமளித்து, அங்குள்ள ஆரிய சமாஜத்தை புனருத்தாரணஞ் செய்து பழைய அதிபதிகளை எல்லாம் துரத்தினர். குணங்களில்லையேல் அவன் ஆரியனாகமாட்டான் என்பதே அவர் சித்தம்.

எங்கு வீரம், உண்மை, புலனாகின்றதோ அங்குதான் ஆரிய சமாஜம் என அறியவும். ஆரியர்கள் என்றால் கேவலம் சகலவிதமான சத்திய வித்தைகள், சத்தியத்தால் செம்மையாகும் பொருள்களுக் கெல்லாம் முதற் காரணமாயுள்ளவர் பரமன் சச்சிதானந்த ஸ்வரூபர், சர்வேசுவரர், சர்வவியாபகர், சர்வாந்தர்யாமி, சிருட்டி

கர்த்தா, அனந்தர், அநாதி, நிகரற்றவர், நிலையாயுள்ளவர், நிர்ப்பயன், நீதிமான், நித்தியன் நிர்விகாரர், நிராகாரர், புனிதர், தயாபரனுவர்; அவர் ஒருவரையே உபாசிக்க வேண்டும் என மற்றவர்களுக்கு உபதேசஞ் செய்து வாசா கைங்கரியத்திலே நின்று விடுவது ஆர்யத்துவ மாகாது. பூவுலகிலுள்ள ஒவ்வொரு மனிதனும் புவியின் பழஞ் சரிதைகளை எல்லாம் கண்டு, உண்மையான சூட்ச மங்களை அறிந்து வெட்டி வேதாந்தங்கள் செய்யாமல், ஏதாவது செயலிலேயே ஈடுபட வேண்டுமென்று அவர் மனப்பூர்வமாய் நினைத்தார். தர்க்கத்தாலும் ஞானத் தாலும் அவரைக் காண்பது அறிது. தரணி தலையோங்கத் தொண்டு புரிபவனுக்கு அவ்வருள் சுரக்கும் என ஸ்ரீ. தயானந்தர் மொழி அவர் மனத்தை விட்டு நீங்கவில்லை யாதலால் சன்னியாசா சிரமத்தில் அதற்கேற்ற சந்தர்ப்பம் கிடைத்து விட்டது என மன மசிழ்ச்சி அடைந்தார்.

அத்தகைய ஊழியஞ் செய்ய ஈசனிடம் அவர் பொன் வேண்டும், பொருள் அவசியம், என விரும்பாமல் 'ஈசா; நான் எடுக்கும் எந்த செயலையும் சிரத்தையுடன் செய்வதற்கேற்ற சக்தியைக் அளிக்கவும். அதற்கு சதா கால உற்சாகமளிக்க நான் சிரத்தை என்னும் நாமத் தையே தரிப்பேன். சகத்திலே எனக்கு வேறு இன்ப மில்லை. நான் எதையும் நாடவில்லை. சிரத்தை யொன் றிலே எனக்குச் சந்தோஷமிருக்குமானுல் நான் சதாகால சிரத்தானந்தனுவேன் என குதூகலமாகி பெரும் செயல் களில் இறங்கினுர்.

பாட்டியாலா சமஸ்தானத்தில் ஆரியர்களை மறைமுக மாகவும் நேராகவும் சர்க்கார் உபத்திரவஞ் செய்ய ஆரம் பித்தார்கள். ஆரியர்களுக்கு தன்னந்தனி நிலையங்கள்

அவசியமில்லையென சர்க்கார், சமாஜத்தின் நிலங்களை ஜப்தி செய்து, ஆரிய சமாஜிகளை உபத்திரவஞ் செய்தார்கள். சிரத்தானந்தர் உடனே ஆரியர்களுக்கு பாரத புத்திரர்கள் என்னும் ஹோதாவில் ஒத்தாசை செய்து பெருங் கிளர்ச்சியைப் புலனுக்கி பாட்டியாலா சமஸ்தானத்திற்கு புத்தியைக் கற்பித்து அக்கோடுமைகளை யெல்லாம் கழிக்கச் செய்தார்.

தோல்பூரில் மற்றொரு சம்பவம் நடைபெற்றது. ஆரியசமாஜ மந்திரத்தினருகில் ஒரு அசுசி நிலையத்தை ஸ்தாபிக்க மகம்மதிய மந்திரி யொருவர் ஏற்பாடு செய்யுங்கால் தேவாலயத்தினருகில் மல மூத்திர மனை கூடாது என ஆரிய சமாஜிகள் ஆட்சேபித்தார்கள். ஆனல் மந்திரி செவி சாய்க்கவில்லை. சிரத்தானந்தர் தானே அங்கு சென்று உண்ணுவிருத மேடுத்தார். பாரத நாடெங்கும் கலவரமாய் விட்டது. பல பக்கங்களினின்று ஆரியப் பெரியோர்களேல்லாம் ஒன்று சேர மந்திரிக்கு மதி மலர்ந்தது. பிறகு ஆரியர்களின் விருப்பத்திற் கிணங்கினன்.

கடவாலத்தில் பெரிய பஞ்சமொன்று தோன்றியது. ஏழைமக்கட்கள் உண்ண உணவன்னியில் ஈ எறும்பைப் போல் மரித்தார்கள். ஏழை படும் துயரத்தைச் செவியுற்று 'இனி சாஹித்திய வேலையிலிரங்கி சாந்தமாயிருக்கலாம் என எண்ணிய சிரத்தானந்தர்' பஞ்சப்பிர தேசங்களில் சுற்றி பொருள் சேகரித்து அன்னதானஞ் செய்து பல சீவன்களை பாதுகாத்தார்.

இத்துறவியாசிரமத்தில் பஞ்சமர்களுக்கு உதவி செய்ய வேண்டுமென்பதே அவர் எண்ணம். ஆனல் பஞ்சமர்களை யெல்லாம் ஆரிய சமாஜிகளாக்க வேண்டு

மென் அவர் கருதவில்லை. இந்துக்கள் அவர்களை சகோதரர்போல் எண்ண வேண்டுமென்பதே அவர் உத்தேசம். ஈசனைப்பற்றி அவரவர்கள் என்ன நினைத்தபோதிலும் சமூக விஷயங்களில் ஏற்றத் தாழ்வு கூடாதென்றே அவர் மனப்பூர்வமா யுழைத்தார்.

தீண்டாமை என்பது இந்து சமூகத்திற்கு பெரும் பங்கத்தை விளைவிக்கின்றது. பாரத நாடே அதனுல் தவிக்கின்றது. சுயராஜ்யம் வேண்டு மென்றல் தீண்டாமை என்னும் பிசாசு இருக்கின்றதே எனச்சொல்லி நமது வாயை அடைக்கிறார்கள். ஆறிலே ஒரு பங்கு மனிதர்களை நாம் அமிழ்த்திருக்கும் வரை, அன்னியரின் ஆதிக்கத்தை அவதூறு செய்வது நியாயமாகாது. பஞ்சமர்களின் முன்னேற்றத்திற்கு வேலை செய்யாதவரை தேசீயம் தலையோங்குவது பகற்கனவே யாகும்.

தீண்டாதவர்கள் எவர்கள்? ஆகாயத்திலிருந்து குதித்தவர்களா? அல்லது நரகத்தினின்று தோன்றியவர்களா? ஆகாயத்திலிருந்து குதித்தவர்களா யிருந்தால் மேன்மை பதவியிலிருப்பார்கள். உற்றுநோக்கின் பெரிய சாதிகள் எனப்புகலப் படுபவர்களின் கோத்திரத்திலேயே தீண்டாதவர்களும் தோன்றியவர்கள் எனத் தெளிவாகும். பிரும்ம, க்ஷத்திரிய வைசியர்கள் தோன்றிய இடத்திலிருந்தே தீண்டாதவர்களும் தோன்றிருக்கிறார்கள். குணக்கேட்டினுல் ஒரு வேளை கீழே தாழ்ந்திருந்தால் குணத்தை மறுபடியும் பெறுவார்களே யானுல் அவர்கள் உயர் நிலையை அடைவதற்கு ஆட்சேபணை என்னே? இந்துக்கள் பல நூற்றுண்டுகளாக இவ் வுண்மையை அறியவில்லை. ஸ்ரீ சைதன்யர், கபீர், நானக்கன், தாது, குருகோவிந்தன் முதலியவர்கள் இவ்வக்கிரம

நிலைமையை இந்துக்களுக்கு அறிவித்தார்கள். ஸ்ரீ தயானந்த சரஸ்வதியான பால பிரும்மசாரியும் சங்கநாதஞ் செய்து, இந்துக்களே! உயர்வு தாழ்வு என்பது குணங்களினுலே யாகும் என அழுத்தமாய் கர்ச்சனை செய்தார். ஆயிரக் கணக்கான இந்துக்கள் வேறு மதஞ் செல்லுவது இத் தீண்டாமை என்னும் கொடுமையினுலே யாகும். கருப்பன் குடுமியை வைத்துக்கொண்டு இராம நாமஞ் சொல்லி வீட்டிற்கு வந்தால் உதைத்துத் தள்ளுவீர்கள். கிணற்றிலிருந்து நீர் எடுக்கவும் விடுவதில்லை. ஆனுல் அவன் சலம் பரிசஞ் செய்து சிலுவை தரித்து பீடர் நாமம் தரித்தால் அவனை மரியாதை செய்து வரவேர்க்கிறீர்கள். அப்பொழுது அவன் உங்கள் கிணற்றிலிருந்து நீரையும் எடுக்கலாம். என்ன நீதியோ? 6½ கோடி பஞ்சம மக்கட்கள் பிரிட்டிஷ் இராஜாங்கத்தின் நங்கூரம் என பூத்டக்கர் புகன்றுளார். தீண்டாமை இருக்கும் வரை அவர்கள் இந்துக்களுடன் ஒன்று சேரப் போவதில்லை என நினைத்துக் கொண்டு தான் தீரமாய் இங்ஙனம் புகன்றுளார். நீங்கள் இந்த தீண்டாதவர்களுடன் சகஜமாய் நடப்ப தன்னியில் அவர்களுக்கு எல்லா சவுகரியங்களை யுமளித்து எல்லா நிலைகளிலும் சகோதரர்கள் போல் அவர்களிட மிருப்பேன் என நீங்கள் சபதஞ் செய்து கொள்ளவும், இல்லையேல் அவர்கள் சத்துருக்களாகி நாளடைவில் இந்த சமூகத்தை இருந்த இடம் தெரியாமல் செய்து விடுவார்கள் என பகிரங்கஞ் செய்து முதன் முதலாக அது மதப் பிரசினை என்பது ஒருபுறமிருக்க, தேசத்திற்கே அது இழிவை விளைவிக்குமென காங்கிரஸ் மகாநாட்டில் கர்ஜனை செய்தார். தேசீய மகாநாட்டில் சிரத்தானந்தர் சேர்ந்ததற்கு முக்கியமான காரணம் தீண்டாமையை எங்ஙனமாவது தொலைத்

துப் பஞ்சமர்களை முன்னேற்ற வேண்டுமென்பதே. அமிர்த சரஸ் காங்கிரசிற்குப் பிறகு கல்கத்தா காங்கிரஸில் (1920) பல நண்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி மறுபடியும் உழைக்கலானார். பஞ்சமர்களை முன்னேற்றுவதற்கு ஏதாவது காங்கிரஸ் செய்ய வேண்டுமென ஒரு தீர்மானம் விஷயாலோசனை கமிட்டியில் அங்கு கொண்டுவர விரும்பினார். ஆனால் காங்கிரஸ் தலைவர்கள் மகாத்மா காந்தி முதலிய பல தலைவர்கள் அது அவ்வளவு பெரிய பிரச்னை இல்லை எனத் தள்ளிவிட்டார்கள். மகாத்மா தீண்டாமைப் பிசாசின் கோரமான வடிவத்தை அறியவில்லை. ஆனால் சென்னைக்கு மகாத்மா காந்தி ஒரு சமயம் விஜயஞ் செய்தகாலத்தில் அவர் தலைமை வகித்த மகா நாடுகளிலே பல வினாக்கள் கேட்கப்பட்டு கலவரம் நடந்த படியால், காந்தி அவர்கள் உண்மையை அறிந்து சிரத்தானந்தரே! நீர் கல்கத்தாவில் கூறியது உண்மையே என்பதைப் புலனாக்குவதற்கு நாகபுரி மகாநாட்டிலே தீண்டாமையைத் தொலைப்பதும் ஒரு தேசீய அவசிய நிர்மாணவேலையேயாகும் என கர்ச்சனை செய்தார். தேக அசௌக்கியமாயிருந்தபடியால் சிரத்தானந்தர் நாகபுரி காங்கிரசிலே அதிகம் உழைக்க முடியாமலாய்விட்டது. காங்கிரஸ் மொழிகளாலேயே ஊழியங்களை நிறைவேற்ற விரும்புகிறதெனக்கண்டு 1921ம் வருடம் தலித்தோத்தார சபை என்னும் சங்கத்தைப் பஞ்சமர்களின் முன்னேற்றத்திற்காகவே சிரத்தானந்தர் ஸ்தாபித்தார்.

மகாத்மா காந்தி காங்கிரசில் சேர்ந்துள்ள படியால் நிச்சியமாக காங்கிரஸ் மனப்பூர்வமாக இந்த வேலையையும் செய்யும் என எண்ணினார். ஆனால் அவர் இருந்தும் காங்கிரஸ் பஞ்சமர்களுக்கு வேலை செய்யாததைக் கண்டு

1921ம் வருடம் செப்டம்பர் மாதம் ஒன்பதாந்தேதி மகாத்மா காந்தி அவர்களுக்கு காரிய கமிட்டி ஏதாவது பஞ்சமர்களின் முன்னேற்றத்திற்கு பொருள் உதவி செய்ய வேண்டுமென அடியிற் கண்டவாறு எழுதினர்.

உள்நாட்டு காங்கிரஸ் கமிட்டியின் மூலமாய் பஞ்சமர்களின் முன்னேற்றத்திற்கு பொருளுதவிக்காக காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கு கடிதம் எழுதுவேன் என தந்தி யொன்று கொடுத்திருந்தேன். நான் டில்லியை அடைந்து நோக்குங்கால் இங்குள்ள காங்கிரசின் முலமாக பஞ்சமர்களின் முன்னேற்றத்திற்கு வேலை செய்வது முடியாதென்பதை அறிந்தேன். டில்லி, ஆக்ராவிலுள்ள பஞ்சமர்கள், இந்துக்கள், மகம்மதியர்கள் சகஜமாய் நீர் எடுக்கும் கிணற்றிலிருந்து, நாங்களும் நீர் எடுப்பதற்கு வசதி அளிக்கவும் என விரும்புகிருர்கள். உள் நாட்டு காங்கிரஸ் சபை செய்ய விரும்பவில்லை. இச்சந்தர்பத்தில் காங்கிரசின் காரிய சபைக்கு பொருளுதவிக்காக விண்ணப்பஞ் செய்ய எனக்கு இஷ்டமில்லை.

இதற்காக பெரிய கிளர்ச்சி செய்ய வேண்டுமெனவும் விரும்பினர். சர்க்கார் அடக்கு முறை தாண்டவமாகவே மகாத்மா அவர்களும் தவச் சாலை சென்றபடியால் சுவாமிகள் காங்கிரஸ் துணையைக் கொண்டு பஞ்சமர் முன்னேற்றமான எச் செயலும் செய்ய முடியவில்லை.

தென்னிந்தியா பஞ்சமர்களுக்கும் ஏதாவது செய்ய வேண்டுமென நான் மனப் பூர்வமாய் விரும்புகிறேன். பாரத நாடு முழுவதும் பல சபைகளை ஸ்தாபித்து வகுப்பு வாத மதவெறி நோக்க மன்னியில், பல பிரசாரகர்களை நியமனஞ்செய்து வேண்டுமானல் பழைய குடுக்கைகளை

யும் ஒன்று சேர்த்து செய்யலாமென நான் வேறு விஷயங் களிலும் புத்தி செலுத்தாமல் இதற்காக காங்கிரசிலும் சேர்ந்து உழைக்க முயன்றேன்.

ஆனால் உங்கள் சேலம் தமிழ் நாட்டு வாசி மாய மாய் பல மொழிகளை மொழிந்து, தந்திரமாய் சில தீர்மானங்களைக் கொண்டு வந்து, கடைசியிலே கோடி ரூபாய் வரை சேர்ந்துள்ள காங்கிரஸ் பணத்தில் காலணாவும் கொடுக்க முடியவில்லை என்பதை கனிந்த மொழி யுடன் கூறிவிட்டார் என சுவாமிகள் தன் சென்னை நண் பர் ஒருவரிடம் கூறியது அக்காலத்திலிருந்த காங்கிரஸ் சபை பஞ்சமர்களை முன்னேற்றுவதற்கு எத்தனை உப காரமா யிருந்ததென்பதைக் காண்பிக்கும்.

காங்கிரஸ் திட்டத்தில் தீண்டாமையைத் தொலைப் பதே முதன்மையான திட்டமென இருந்தது. (ய. இ. 25 மே. 1921) ஆனால் இப்பொழுது (ஜ. 1922) பஞ்சமர் களின் முன்னேற்றத்தை மூலையிலே தள்ளிவிட்டார்கள். காதிக்காக ஏராளமாய்ப் பொருள் செலவு செய்து அங் கங்கு கிளை ஸ்தாபனங்கள் தோன்றியுள. ஆனால் பஞ்ச மர்களின் முன்னேற்றத்திற்கு உண்மையாய் பொருள் செலவு செய்யப்படவில்லை. 6 கோடி மக்கள் நமக்கு விரோதமாக எழுப்பப்பட்டால் காதி ஒன்றே நமக்கு வெற்றியை யளித்து விடாது. பஞ்சமர்களெல்லாம் ஏழைகள். அவர்களுக்கு ஏதாவது நாம் உதவி செய்தா லொழிய எத்துணை காதிக்காக உழைத்த போதிலும் அவர்கள் நயமான சீமைத்துணியே வாங்குகிறார்கள். ஆத லால் பஞ்சமர்களின் முன்னேற்றத்தைக் கருதி இத்தீர் மானத்தை காங்கிரஸ் செய்வது நன்மை.

காங்கிரஸ் ஐந்து லட்ச ரூபாயை அளித்து பஞ்சமர்

களின் முன்னேற்றத்திற்கு சிரத்தானந்தர், சரோஜினி நாயுடு, தேசபாண்டே, முதலியவர்களை காரியக்கமிட்டியாக நியமிக்கின்றது.

ஆனால் ரூ. 200000 போதுமென தீர்மானித்தார்கள். நான் அதை ஒப்புக் கொள்ளவில்லை.

உடனே காங்கிரஸ் கமிட்டியின் கூட்டமொன்று கூடி இந்த வேலைக்கு ஒரு லட்சம் இப்பொழுதே அளித்து விடுவதென்றும், மிகுதியான பொருளைப் பிறகு அளிப்பது எனவும் கடைசித் தீர்மானமாயிற்று.

ஆனால் தமிழர் ஒருவர் எழுந்து பொருள் எவ்வளவு என நாம் குறிப்பிட வேண்டுவ தவசியமில்லை எனவும், கையிலிருக்கும் பொருளுக் கேற்றவாறு பொருள் அளிக்கப்படும் எனவும் திருத்தி வேறு தீர்மான மொன்று கொண்டு வந்தார்.

எத்துணை பொருள் இப்பொழுது இருக்கின்றது என நான் கேட்டதும் எங்கும் கலவர மாயிற்று. தலைவர் என்னை அழைத்து இரகசியமாய் நம்மிடம் இப்பொழுது பணமே இல்லை. சொன்னால் வெட்கக் கேடு. நீர் சாந்தமாயிரும்; உங்களுக்கு எங்ஙனமாவது பஞ்சமர் முன்னேற்றத்திற்குப் பொருள் அளிக்கப்படும் என்றார். அவர் மொழியைச் செவியுற்று நான் சாந்தமாய் விட்டேன்.

ஆனால் அலகபாத் இண்டிபெண்டெண்ட் பத்திரிகைக்கு ரூ. 25000மும், உர்து பத்திரிகை ஒன்றுக்கு ரூ. 10000, அளித்திருப்பதை அறிந்து மறுபடியும் ஆரம்பச் செலவிற்கேனும் ஏதாவது தொகை வேண்டுமென எழுதினேன். வெகு நாள் வரை பதில் இல்லை. கடைசியில் காங்கிரஸ் காலணாவு மளிக்கவில்லை. 1922-1923ம் வருடம் காங்

கிரஸ் அத்துணை ஊக்கமாய் பஞ்சமர் முன்னேற்றத்தி லிருந்தது என்பதை மேற்கண்ட சுவாமியின் மொழிகளி னின்று அறியலாம்.

---

## அத்தியாயம் பதினைன்கு.

### புராதன இந்துக்கள்—சாதிபேதங்கள்.

பஞ்சமர்களின் முன்னேற்றத்திற்காக எல்லாவழி களிலும் இங்ஙனம் ஊழியஞ் செய்து கொண்டு, புராதன இந்துக்களின் புனிதமான வாழ்க்கையைப்பற்றி எங்கும் பகிரங்கஞ் செய்தார்.

இப்பரதக் கண்டத்திற்கு ஆர்ய வர்த்தமேனப்பெயர். பூவுலகிலுள்ள சனங்களேல்லாம் புராதனத்தில் நிர்வாண மாய் காடுகளில் சுற்றி அலையுங் காலத்திலும் இந்நாடு பெரிய நாகரிக நிலையிலிருந்தது. ஆதிகாலத்தில் ஆரியர்கள் அடைந்த நாகரீகத்தை ஐரோப்பியர்கள் பெறவில்லை. புராதன நாகரிகம் செல்லாத நாடில்லை. பாரசீகம், சீனு, ஜப்பான், இங்கிலாந்து முதலிய நாடுகளிலும் ஆரியர் குடி யேறியிருந்தார்கள். அமெரிக்காவையும் கண்டு பிடித்திருந் ததாக சில சாசனங்களிலிருந்து அறிகிறேம். அலெக் சாந்தர் காலம் வரை பாரதநாடு புவியிலே பெருமையுட னிருந்தது. அப்பால் கலவரங்கள் அதிகரித்து புத்த பகவான் தோன்றி தர்ம பரிபாலனம் செய்தார். மறுபடியும் இருநாறுண்டுகள் வரை மலர்ந்தது. புத்த மதத்தின் பெயரால் நாஸ்திகம் பிறகு தோன்றி, விதண்டாவாத ஆஸ்தி கமும் விளங்கி எங்கும் கலவரம் அதிகரித்தது. வேதத்தில் சொல்லிய அரச அமைப்பும் மறைந்து அரசாங்கமும் விப ரீதமாயிற்று.

"நாடேல்லாம் மகாஜனங்களுக்குச் சொந்தம். அரச னில்லாத சில நாடுகளையும் நான் இந்தியாவில் கண்டேன். அச்சிறிய நகரங்களில் நான் குடியாட்சியைக் கண்டேன்" என அலெக்சாந்தருடன் தொடர்ந்த ஒரு அறிஞர் எழுதி யுளார். தேசத்தை ஜனங்கள் பெயராலேயே அழைத் தார்கள். ஆனால் வெளி நாடுகளினின்று அடிக்கடி தோன்றும் படை யெடுப்புக்களால் விபத்துக்கள் அதிகமாகி சில வன்மை யுள்ளவர் ஒன்று சேர்ந்து எதிர்த்து, ஜயம் பெற்று ஜனங்களையும் எதிர்க்கும் சக்தியுடனானார்கள். பல வருடங்களுக்குப் பிறகு அவர்கள் சுவாதீன மன்னர்களாக மாறி, ஈசனிடமிருந்தே தாங்கள் அதிகாரத்தைப் பெற்ற தாக பகிரங்கஞ் செய்தார்கள். ஜனங்களிடமும் அப் பொழுது கல்வி குறைவாயிருந்ததால் இராஜீய விஷயத்தில் கலந்து கொள்ள முடியவில்லை. "நராணாம் நராதிபம்" மனிதர்களுக்குள் நானே அதிபதியாவன். மனிதர்களில் என் உணர்வே மனிதர்களின் அதிகாரியாகும் என்னும் பொருளுள்ள ஸ்ரீ. கிருஷ்ணனின் அமுத மொழியை ஆதாரமாகக் கொண்டு எல்லா அரசர்களும் தெய்வீக கிருஷ்ண சம்பந்த முள்ளவர்கள் போல் பாசாங்கு செய் தார்கள். 606ம் வருடத்தில் ஹர்ஷ சக்கிரவர்த்தியானவன் ஆரிய வர்த்தத்தை இந்துஸ்தான மென மாற்றினான். ஹர்ஷ சக்கிரவர்த்தி காலம்வரை நாம் கீழே விழ ஆரம் பிக்கவில்லை.

ஹீங் டிசாங் சொல்வதாவது :—இந்தியாவில் நான்கு ஜாதிகளையே நான் காண்கின்றேன். பிராமணர் கள் எவர்களாலும் புகழப்படுகிறார்கள். க்ஷத்திரியர் களுக்கு நிகரான வீரர்களை நான் காணப் போவதில்லை. மற்றவகுப்பினர்களும் அங்ஙனமே.

இப்பொழுது புலனுகும் ஆயிரக்கணக்காண சாதிகள் அப்பொழுது இல்லை.

ஹர்ஷருடைய காலத்தில் யௌவன வயது அடைந்த பிறகு இளைஞர்கள் விவாகஞ் செய்யப்பட்டார்களென அறிகிறோம். ஹர்ஷனின் சகோதரியான இராஜ்ய ஸ்ரீயும் கானேஜ்ஜின் கிரஹவர்மனைக் காளைப் பருவத்திலேயே மணந்தாள். ஹர்ஷ சக்கிரவர்த்தியின் பிராமண பண்டிதன், வயது சென்ற பிராமணப் பெண்ணையே, மணந்ததாக பாணன் கவியினின்று அறிகிறோம். பாணனும் மயூரியின் பெரிய சகோதரியைப் பெரியவளான பிறகு மணந்ததாகச் சரித்திரம்.

விவாகத்திலும் சாதி பேதமில்லை. க்ஷத்திரியர்களும் வைசியர்களும் பரஸ்பரம் விவாகஞ் செய்துகொள்வது சகஜம் என சீன யாத்திரிகள் கூறியுளார்கள். இந்தியாவிலுள்ள பிராமணர்கலெல்லாம் ஒரு சாதியாகவே கருதப் பட்டது. க்ஷத்திரியர்களிலும் வைசிய சூத்திரர்களிலும் நவீனமாய் நிலவும் ப்றபல சாதிகளில்லை.

வேதத்திலே விராட புருடனைப் பற்றிக் கூறவும் என ஒரு பிரசினை யுண்டு. அவன் வாய் எது, கைகள் எவை, கால்களும் தொடைகளும் எவை ?

புருஷனின் வாயினின்றே பிராமணன் புலனுனன். பிராமணன் என்ருல் அறிவு, சாஸ்திரம் முதலியவைகள். விராட புருஷனே க்ஷத்திரியர்களை குணமாக்கினர். க்ஷத்திரியன் என்ருல் வீரம் வன்மைக்குப் பெயர்.இவை அதிகரித்தவனே க்ஷத்திரியனுவன்.

வியாபாரமும் விவசாயமுமே வைசியர்களின் தொழில்.

அவ்வைசியனும் அவ்விமலனாலேயே தோற்றுவிக்கப் பட்டான்.

வேறு எங்கும் நிலையாகாமல் தாசத்துவத்திலேயே தோய்பவன் சூத்திரனாகும். சூத்திரர்களும் அச் செல்வனின் மக்கட்களே யாகும்.

இச்சாதிகளைப் பற்றி வேதங்களில் சொல்லுங்கால் அதற்கு வர்ணவியவஸ்தை என மொழியப்படும். வர்ணமென்றால் பற்றுவது ; வியவஸ்தை என்றால் தொழிலாகும். வேதத்தில் விராடனை ஒரு புருஷன் போல் எண்ணி இத்தொழில்களை யெல்லாம், அங்கங்களுக்கு ஏற்றவாறு பிரித்து உபமானமாய் வாய், கை, தொடை கால்களினின்று தோன்றியதென கூறப்பட்டுளது. அறிஞர்கள் உபமானத்தின் உத்தமமான நோக்கத்தை அறியாமல் இதுவரை குதர்க்கமாக விளக்கஞ் செய்து விட்டார்கள். ஆனால் உண்மையில் மனிதர்களில் வேற்றுமையே இல்லை.

கற்பது கற்பிப்பது. யக்ஞம் செய்வது யக்ஞம் செய்யச் செய்வது. பூவுலகத்தின் நன்மையையே நாடுவது. அளிப்பது அளிக்கச் செய்வது. இவைகளே பிராமணர்கள் கடமையாகும் என மனு தர்மர் மொழிந்துளார்.

அடக்கம், பயிற்சி, தவம், ஒழுக்கம், தயை, நேர்மை அறிவு, ஞானம், ஆஸ்திகம் முதலிய குணங்களே ஒருவனை பிராமணனாகப் புலனாக்கும் என பகவத்கீதை பெருமையாக்கும்.

வன்மை, வீர்யம், ஊக்கம், உற்சாகம், போரில் முன் சென்று ஜயிப்பது அல்லது சாவது. உதாரகுணம், நுண்ணிய அறிவு, முதலியவைகளே க்ஷத்திரியர்களைக் குறிக்கும் என கண்ணபிரான் கூறியுளார்.

நீதியை நிலவச் செய்து, அச்சம் அகங்காரமன்னியில் பாமரர்களைப் பாதுகாப்பது, யக்ஞம் செய்து யக்ஞம் செய்யச் செய்வது, பெரியார்களைப் போற்றுங் குணங்களே க்ஷத்திரியர்களைப் புலனுக்கும், என மனுதர்மர் கர்ச்சனை செய்துளார்.

ஆடுமாடு பசுக்களை வளரச் செய்தும், அறிஞர்களை அபிவிருத்தி செய்யும் செயலில் ஈடுபட்டு, வேதங்கற்று கற்பித்து, நிலப்பயிற்சி செய்து, தானியங்களை பெருகச் செய்வது, வைசியர்களின் தர்மமென புராதன மனு கூறு கின்றார். சூத்திரர்கள் எனப்படுபவர் அடிமைத் தொழிலில் அமைந்தவர்களேயாகும்.

இளைஞர்களுக்குக் கற்பித்து, தர்மத்தையும் சட்டங் களையும் விளக்கி, சமூகத்தின் தலைவர்களாகி, சிறிய வாழ்க் கையுடன் பெருஞ் சிந்தனையுடனுள்ளவர்களே பிரா மணர்கள்.

வீர குணமுள்ளவர்களே தேசிய வேலையில் தோய வேண்டும். அங்ஙனம் தேசீய வேலையில் ஈடுபட ஒழுக் கத்தையும், நீதியையும் நிலவச் செய்ய எப்பொழுதும் போராடுபவர்களே க்ஷத்திரியர்களாகும்.

பொருளாதார நிலையை எப்பொழுதும் கவனித்துக் கொண்டு, நாட்டு மக்கள் செல்வப் பெருக்குடனுகவேண்டு மென சதா கால செயலில் சாய்ந்தவர்களே வைசியர்க ளாகும்.

கல்வி யன்னியில் வேறு விதியற்று இம்மூன்று வர்ணங் களுக்கும் ஊழியஞ் செய்பவர்கள் சூத்திரர்களாகும்.

பாரத நாட்டில், குணங்களுக் கேற்றவாறே ஆதி காலத்தில் சாதி புலனுயிற்று. தாயாதிச் சண்டைகளால்

5000 வருஷத்திற்கு முன், தர்மம், கவிழ்க்கப்பட்டு அதர்மம் தலைவிரித்தாட ஆரம்பித்தது. கௌரவ பாண்டவ சண்டையே இன்னம் இந்தியாவை விட்ட பாடில்லை. புலன்களில் சாய்ந்த பாரத புத்திரர்கள் கண்ணன் கூறுவது போல் இந்திரியங்களில் இணங்கி, இணக்கத்தால் இன்பமாகி, இன்பத்தினின்று கோபத்திலாகி, கோபத்தினின்று கலக்கம் சாய்ந்து, கலக்கத்தினின்று கருத்துக்கள் கழிந்து, மனம் அழிந்து, மன மழிவதால் அவர்களும் நாசமாகிறார்கள்.

நமது நாடு நாசமாவதற்கு நேர்மையான காரணம் வேண்டுமோனால் ஜாதி என்னும் சண்டாளனைப் பிடித்தால் போதும். பாரதப் போரில் வீரர்கள் எல்லாம் மடிந்தவுடன் பிராமணர்களை அடக்குபவர்களன்னியில் மனம் போல் செல்ல ஆரம்பித்து தாங்கள் கெட்டது மன்னியில் அன்னியர்களையும் அடிமையாக்கி விட்டார்கள். இந்த பிராமணர்கள் தங்களிடம் பிராமணர்களுக்கேற்ற யோக்கியதை இல்லை என்பதை அறிந்து சன்மத்தினாலேயே தாங்கள் சிறந்தவர்கள் என படாடோபஞ் செய்து பாமரர்களை ஏமாற்றி விட்டார்கள்.

அதனால் ஆயிரக்கணக்கான சாதி வேற்றுமைகள் அதிகரித்து, எங்கும் கலவரமும் குட்டிச் சண்டையுமதிகரித்தது.

இங்ஙனம் சிரத்தானந்தர் எங்கும் கர்ஜனை செய்து நாடெல்லாம் சுற்றி நவீன சாதியை நாசஞ் செய்ய முயன்றார்.

தன்னுடைய 'லிபரேட்டர்' என்னும் பத்திரிகையில் சாதியை ஒழிப்பதற் கேற்ற அற்புதமான வியாசங்களை

யெல்லாம் எழுதி நாடெங்கும் அதிர்ச்சியை உண்டு பண்ணினர். சமபந்தி போஜனம், பரஸ்பர விவாகம், வேதங்களை யாவர்க்கும் கற்பித்தல் முதலிய பணிகளை முதன்மையாகக் கொண்டு எங்கும் சாதி தொலைந்தது என சங்கநாதஞ் செய்தார். சென்னையிலே சுவாமிகள் ஒரு முறை விஜயம் செய்த காலத்தில் பிராமணரல்லாத மக்கட்களெல்லாம் ஒன்று சேர்ந்து அவருக்கு உபசாரமளித்து அவரை ஒரு சகோதரர் போல் எண்ணினர்கள். பெங்களூரிலே சர் புட்டண்ண செட்டியாரைப் போல ஊக்கமும் உற்சாகமுமுள்ள ஒருவரையும் நான் காணவில்லை யென்றும், சிறிய இளைஞர் போல் அவர் சமூகப் பணி செய்கிறார் என்றும், கண் மலர்ந்து சற்றுத் திகைத்து ஆனந்தமுடன் பிராமணரல்லாத ஒரு தலைவரை பார்ப்பனர் மிகுந்த நாட்டில் அவர் அடிக்கடி நண்பர்களுட னுரைத்தது ஜாதியினால் தாழ்த்தப்பட்ட மக்கட்களிடம் எத்துணை அன்புடன் அவர் இருந்தார் என்பதைப் புலனாக்கும்.

சென்னையிலே விஜயஞ் செய்திருக்குங் கால் தாழ்த்தப் பட்டவர்கள் எல்லாம் அவருக்கு உபசார மளித்தது தென் இந்திய ஆதி திராவிடர்களும் அவரின் அற்புத சேவையை அறிந்திருந்தார்கள் என்பதைப் புலனாக்கிற்று.

அவர் தென்னிந்தியா வந்த காலத்தில் பாலக் காட்டிலுள்ள பிராமணர் சேரியான கற்பாத்தியிலே தேர் உற்சவம். அப்பொழுது அங்கு கிறிஸ்தவர், மகம்மதியர்கள் எவர்களும் செல்லலாம். ஆனால் பஞ்சமர்கள் செல்லக் கூடாதென ஒரு நிபந்தனை யிருந்தது.

பஞ்சமர்களே! நீங்கள் தாராளமாகப் பிராமண சேரியிலே செல்லலாம். உங்களுக்காக பெரிய நீதிமன்றம்

வரை சென்று வழக்காட ஆரிய சமாஜம் உதவிபுரியும் என உரைத்து, உற்சாக மளித்தார். பாலக்காட்டிலே சில ஆட்களை நியமித்து கோர்ட்டிலே வழக்கு ஆரம்பித்து கடைசியில் ஹைக்கோர்ட்டுவரை அவ்வழக்குச் சென்று பிறகு வெற்றியுடன் முடிந்தது.

தென் இந்தியாவிலே பெரிய குருகுலம் ஒன்று ஸ்தாபனஞ் செய்யவேண்டு மெனவும், தாழ்ந்தவர்கள் முன்னேற்றத்திற்காகத் தனிமையான ஒரு கழகம் ஏற்படுத்தவேண்டுமென எண்ணியிருந்தார்.

அவர் இரு முறை சென்னை விஜயஞ் செய்தது இந் நோக்கத்துடனே யாகும்.

தென்னிந்தியாவை நினைத்து அடிக்கடி மனமுருகுவார். வட இந்தியாவில் நான் எதிர்பாராத சச்சரவு இல்லாதிருந்திருக்குமேயானால், நான் நிலையாகச் சென்னையிலே இருந்து பிராமணரல்லாதார், தாழ்த்தப்பட்டோர் முதலியவர்களுடன் சேர்ந்து உழைப்பேன் என தென் இந்தியா வைப்பற்றி அவர் அடிக்கடி கூறுவதுண்டு.

மதுரா புரியிலே ஸ்ரீ தயானந்தரின் சதாப்த மகோற்சவம் ஒன்று நடைபெற்றது. சுமார் ஐந்து லட்சம் ஜனங்கள் ஒன்று சேர்ந்திருந்தார்கள். அந்த வைபவத்தை முன்னிட்டு பற்பல மகாநாடுகள் நடைபெற்றது. அந்த வைபவங்களுக் கெல்லாம் தலைவர் சுவாமி சிரத்தானந்தரேயாகும். அந்த நெருக்கடியான சந்தர்ப்பத்தில் அவருக்கு எல்லை யில்லா வேலைகளிருந்த போதிலும். சென்னை நண்பர் ஒருவரைக் கண்டவுடன், எனது ஆதி திராவிட சகோதரர்களை நான் இன்னும் காணவில்லை யென்றும், சென்னையிலே பஞ்சமர்களின் நிலை என்ன? அவர்களின் பொரு

ளாதார ஸ்திதி எங்ஙனம்? அவர்களின் தலைவர் எவர்கள்? என நன்றாய் விசாரித்ததோடு, அவரது வாழ்க்கையிலே இங்கிலீஷ் பாஷையை விலக்க முதன்மையாக விரதம் வைத்த போதிலும், சென்னை ஆதி திராவிடர்களுக்கு லிப ரேட்டர் என்னும் பத்திரிகையையும் ஆங்கிலத்திலேயே நடத்துவேன் என மன முருகி மொழிந்தது ஆதிதிரா விடர்களின் முன்னேற்றத்திலே எத்துணை கவனமாயிருந் தார் என்பதைக் காண்பிக்கும். தீண்டாமை சாதி வேற் றுமை இவைகள் ஒழிய அல்லும் பகலும் வேலை செய்தது போக நமது நாட்டு பெண்மணிகள் சுதந்திரமடைய வேண்டு மெனவும் பிரசாரஞ் செய்தார்.

---

## அத்தியாயம் பதினைந்து

### பெண்கள் முன்னேற்றம்

பாரத நாட்டுப் பெண்மணிகளே! நீங்கள் வீடுகளி னின்று வெளியேறலாகாதென உங்களை அடைத்து வைத் திருக்கிறார்கள். பகிரங்கமாய்ப் பேசினால் பதிவிருதம் பறந்து விடுமாம். உப்பு, மிளகாய், குழந்தை, விளக்கெண் ணெயைத் தவிர வேறு எவ்விஷயத்தைப் பற்றியும் நீங்கள் கனவிலும் கருதலாகாது. உருளைக்கிழங்கும், மோர் குழம் பும், இன்று சமைக்கவும், எனக் கட்டளையான பிறகே நீங்கள் பாகஞ் செய்ய வேண்டும். இல்லை யேல் அன்று வீடு நாரதரின் நிலயமாகும். காலையிலே துரிதமாய் எழுந் திருந்து எனக்குப் 'பள்ளியறை காபி' அளிக்கவும்; இர விலே நான் நித்திரையிலாகி மயங்கும் வரை என் கைகால் களைப் பிடிக்கவும்; விசிறியினால் காற்று வீசவும் என்பதே புருஷர்களின் ஆக்ஞை. நமது மகன் ராஜாவின்

கண்களில் நீர் ததும்ப நீ ஏன் கண்டித்தாய் எனக் கழியால் அடித்து புருஷன் உதைத்தால் நீங்கள் புன்சிரிப்புடனுகவும்; இல்லையேல் கன்னத்திலடித்துப் பல்லைக் காட்டவும் என்பான். துக்கமுடனிருந்தால் மூதேவி. மலர்ந்த முகமுடனுனல் விஷப்பாம்பே! எனக்கு நஞ்சைக் கக்கி எங்கு செல்ல விரும்புகிறுய் எனக் கர்ச்சனை செய்வான். நோய் என்று கஷ்டம், அறிவித்தால் வியாதிப் பிண்டமே நான் வேறு விவாகம் செய்வேன்; சுகம் எனச் சொல்லி மறைத்தால் பாசாங்குக்காரி. அவள் என்னை ஏமாற்றுகிறுள் என எங்கும் புகார் செய்வான்.

மங்களாம்பிகை மற்றவர்களுக்கு மகிழ்ச்சியை அளிக்க மணிக்கயிற்றுல் கட்டப்பட்டு சப்பரத்தில் ஆபரண மணிந்து அமர்த்தப்பட்டு அசையாமல் செல்லுவது போல, நீங்களும் புருஷர்கள் ஆனந்தமாக பட்டுப்புடவை உடுத்தி திருடர் சின்னமான காப்புக்கள் அணிந்து என்னுடன் வரவும் என்பான். நீங்கள் ஓடி மறையாமலிருக்க சலங்கையும் தங்கமும் தேகமெல்லாம் சுமத்தியிருப்பான்.

ஆயிரமானுலும் ஆண் பிள்ளை என அள்ளுக் கிழத்திற்கு ஒன்பது வயது ருக்மணியை விற்று விடுவான். குஷ்டரோகியானுல் என்ன? நானல்லவா உன்னைப் பெற்றேன்; என்னுலல்லவா நீ வளர்ந்தாய், என்னிஷ்டம் போல் அவனை மணஞ் செய்து கொள்ளவும் இல்லையேல் முச்சந்தியில் விட்டு விடுவேன். பிண்டத்திற்கு அலைவாய் என்பான். உலகத்தில் புருடனை விட வேறு தெய்வமில்லை. அவனே உனது நாயகன்; இறந்தால் நீ இருந்தும் பிணமாகவே புலனுவாய். உண்பது உயிர் நீங்காமலிருப்பதற்கே என அறியவும். புருஷனில்லையானுல் அவளுக்கு பசிக்குமோ என்பான் ஒருவன். விதவைகள் ஸ்னுனம் செய்வது அரி

யாயம். நீ விதவை. என் முன் தோன்ருதே; எனக்கு அபஜயமாகும் எனச் சாஸ்திரியும் சொல்லுவான்.

விதவையாயிற்றே! நீ ஏன் அதைப் பார்க்கிருய் உனக்குச் சங்கீதமும் செவியுற வேண்டுமா? சாக்கடையினேரம் நான் எங்ஙனம் உறங்குவேன் என எப்படிச் சொல்லுவாய்? உப்பில்லாமல் உண்ண முடியவில்லை என நீ உரைக்கலாமோ? என தினந்தோறும் ஆண்களெல்லாம் உங்களை அவஸ்தையிலாக்குவார்கள்.

இனி நீங்கள் இவ்வநியாயங்களை யெல்லாம் நெருப்பிலிட்டு எரித்துவிடவும். அடியிற்கண்டவாறு செய்யவும்:—

மறுமணம்.—16 வயதான பிறகே நான் என் பெண்களை விவாகம் செய்வேன். என் மக்களிஷ்டமன்னியில் விவாகம் செய்யப்போவதில்லை. மங்கைப் பருவத்திற்கு முன் விவாகஞ் செய்தால் கர்ப்பந்தரிக்க வன்மையில்லை. கர்ப்பந் தரித்தாலும் கருவழிந்துவிடும், குழந்தை பிறந்தாலும் இறந்து விடும். இல்லையேல் நோய்க் களஞ்கியமாகும்.

மரித்த புருஷனின் பிரேதத்தினருகிலே உட்கார்ந்து அதிகம் கண்ணீர் சோரிய வேண்டாம். மரித்தவன் மரித்தவனே. மனைவி என நாடி உன்னை விரும்புபவனை உனக்குப் பிரியமுள்ளவனுனல், விவாகஞ் செய்து கொண்டு இன்பமுட னிருக்கவும்.

புருஷனிடமிருந்து பலவருடங்கள் கடிதமில்லையாயினும் அவன் நிரந்தரமாய் மறைந்தாலும், ஒரு வேளைத் துறவியானுலும் அல்லது நபும்ஸகனு யிருந்தாலும் நீ வேறு விவாகஞ் செய்து கொள்ளலாம் என பராசரர் ஸ்மிருதி செய்துளார்.

நாரதர் சொல்வதையும் நீ அறிவாயோ ?

புருஷன் எண் வருடங்களில்லையானல் அல்லது 4 வருஷங்களில் மக்கட்பேறு சூன்யமானல் வேறு விவாகம் செய்து கொள்ளவும்.

பிராமணப் புரோகிதர்கள் புனர் விவாகம் கூடாதென் பார்கள். இப்பொழுது உள்ள பிராமணர்கள் பிராமணன் என்னும் பசுந்தோல தரித்தவர்களே. வேதம் என்பதும் சாஸ்திரம் என்பதும் தாங்கள் அறிஞர்கள் என பிரசாரஞ் செய்வதற்கே யன்னியில் உண்மையை உரைப்பதற்கில்லை.

ஐராவதன் என்னும் புராதன மன்னன் தன் மாப் பிள்ளை சுபர்ணனல் கொல்லப்பட்டான் என அறிந்து தன் பெண்ணை மறுபடியும் அர்ச்சுனனுக்கு அளித்தான். அந்த பெண்ணிற்கு பிறந்தவனே இராவனன் என்னும் வீரனகும்.

விவாகமாய், தேக சம்பந்தஞ் செய்யாம லிருந்தால் மறுபடியும் விவாகம் செய்து கொள்ளலாம். தேக சம் பந்தம் செய்திருந்த போதிலும் குற்றமில்லை. மறுவிவா கம் செய்ய உதவி யளிக்க வேண்டியது, உங்கள் கடமை எனப்பழைய ரிஷி கர்ச்சனை செய்துளார்.

இங்ஙனம் பெண்களின் உரிமைகளை பகிரங்கம் செய்து நாடெல்லாம் சுற்றினர். பெண்கள் சபைகளை நிர்மாணஞ் செய்வது, அனதைப் பெண்களுக்கு உதவி அளிப்பது அவர்களைப்பற்றி அடிக்கடிப் பத்திரிகைகளில் எழுதுவது, முதலிய அரும்பணிகளால் எங்கும் புத்து யிரைப் புலனக்கினர். தேசத்தில் நமது துக்கத்தை எவர்க்கு அறிவிப்போம் எனக் கலங்கி சிரத்தானந்தர் ஒரு

வருக்கே எழுத நமக்கு உரிமைகளுண்டு எனப் பற்பல வனிதைகள் அவர்க்கு கடிதம் எழுதுவது வழக்கம்.

சென்னையி லிருந்தும் பல கடிதங்கள் அவருக்குச் சென்றிருக்கின்றன. ஆனால் சேன்னைத் தலைவர்களைப் போல் பதில் அளிக்காமல் இருந்து விடுவதில்லை. சென்னையிலுள்ளவர்களுக்கு உபகாரஞ் செய்ய தன்னுடைய பல நண்பர்களுக்கு எழுதி பொருள், செல்வாக்கினால் உதவியளித்தார். சென்னை இராஜதானியிலிருந்து சீலமற்ற செயல்களுக்கு ஏமாற்றி வடநாடுகளுக்கு அழைத்துச் செல்லப்பட்ட பல வனிதைகளை விபத்துக்களின்று நீக்கி நல்லொழுக்கத்துடனிருக்க சந்தர்ப்ப மளித்தார்.

தன்னைச் சரணாகதி அடைந்த எந்த சீவர்களையும் அவர் காட்டிக் கொடுப்பதில்லை. அஸ்காரி பேகம் என்னும் பட்டாணிய ஸ்திரீ யொருவள் 'நான் ஹிந்து தர்ம நூல்களை வெகு நாளாகப் படித்து வருகின்றேன். ஹிந்து பெண்மணியாக நான் விரும்புகிறேன்' என சிரத்தானந்தர் பாதங்களில் 1926-ம் ஆண்டில் வந்து விழுந்தாள்.

அவர் அபயமளித்து ஹிந்து தேவியாக அவளை சுத்தி செய்து, தன்னுடைய பாதுகாப்பிலே வைத்தார். ஆனால் சில நண்பர்கள் அவர் அன்னிய மதத்தை அழிக்க வந்தவர் என எண்ணி அவரை மனம் போன வண்ண மெல்லாம் நிந்தனை செய்து, கோர்ட்டிலும் வழக்கு தொடர்ந்தார்கள். நீதி மன்றத்தில் அவரை நிரபராதி என விட்டுவிட்டார்கள். ஆனால் மதாவேசம் நிறைந்த சிலர் அவரை இலேசாய் மொழிந்து பாமரர்களிடஞ் சென்று ஆரியத்தைத் தவிர மற்ற தர்மங்களை யெல்லாம் அழிக்க வந்தவர் என அவதூறு செய்தார்கள். அவர்கள் பல பத்திரிகைகளின்

மூலமாகவும், துண்டுப் பிரசுரங்களாலும்-ஐயோ சிரத்தானந்தனை ! சிரத்தானந்தனை ! எங்களைக் கொலை புரிபவனாய் விட்டதே ! என நெஞ்சு துடிக்கும் வண்ணம் பல மதாபிமான பாமரர்கள் புகல்வதற்கு பிரசாரஞ் செய்து விட்டார்கள்.

அபலைகளுக்குச் சரணமளித்த சுவாமிகள் பிள்ளைகளைப் போல் பெண்களும் பிரம்மசரிய மனுசரிக்க வேண்டும். அவர்களும் நாட்டுக் கேற்றவாறு, கற்று எல்லா தேசீயப் பணிகளிலும் தோய வேண்டுமென விரும்பினார். அதற்குப் பயிற்சி பெற்ற பெண்கள் இருந்தாலொழிய தேசம் தலையோங்குவது கடினமென்றறிந்து பெண்கள் குரு குலத்திற்கு முயன்றார்.

கல்கத்தாவிலுள்ள சேட் ரகுமல் ஒரு லட்சம் ரூபாய் பெண்கள் குருகுலத்திற்கு அளிப்பேன் என வாக்குறுதி செய்து ரொக்கமாய் சிறிய தொகையு மளித்துவிட்டார். அந்தப் பொருளின் உதவியைக் கொண்டு டில்லியினருகே ஒரு பெண் குருகுலத்தையும் நிலையாக்கினார். அங்கு இப்பொழுது ஏராளமான பெண்கள் படித்து வருகிறார்கள். நவீன கல்வியுடன் புராதன ஒழுக்கங்களும் அங்கு கற்பிக்கப்படுகின்றன.

பாரத நாட்டிலுள்ள பெண்களுக்கு நிரந்தரமான உபகாரஞ் செய்ததற்கு, தனது தாய் தனக்குக் காட்டிய ஒப்பில்லா அன்பு என்றே சொல்ல வேண்டும். எனது தாய் படிக்கவில்லை. அன்னையின் அளவில்லாதவன்மையால் இயல்பாகவே எனக்குப் பல கற்பனைகளை கற்பித்தாள். என் தாய் நான் பிறந்தவுடன் இறந்திருப்பாளேயானால் நான் ஒழுக்கமுடன் திருத்தமாயிருப்பேனோ எனவும் சந்தேகப்

படுகிறேன். எனது மாமா ஒருவர் ஹோலி பண்டிகையில் குடித்து உணர்வற்றிருக்கும் பொழுது நானும் அங்கு சென்று விட்டேன். உடனே குழந்தையான என்னைக் கட்டி வாரி அணைத்து முத்தமிட்டு குழந்தையை இங்கு வர அனுமதித்தது எவர் என அன்னை கூறியது இன்னும் என் மனத்தை விடவில்லை. இந்த அளவில்லாத என் தாயின் அன்பே என் மனதைக் கொள்ளை அடித்துவிட்டது.

என் தாய் இறந்துவிட்டார் எனப் பிற்காலத்தில் கலா சாலையில் கற்குங்கால் செவியுற்றதும், நான் ஞானமும் அறிவும் இழந்து விட்டேன் எனச் சொல்லி மேலும் கூறுவதாவது:— என் கண்கள் ஸ்தம்பித்து விட்டது, கண்கள் நீரும் தலைக்கனத்தைச் குறைக்க வில்லை. 15 தினங்கள் லீவு வேண்டு மென காகிதம் எழுதி எனது நண்பன் கையெழுத்து வாங்கி அனுப்புவித்துவிட்டான். நான் கிராமஞ் சென்றேன். எனக்கு உணர்வு இல்லை. மௌனமாகவே வெகு நேரம் உட்கார்ந்திருந்தேன். இரவிலும் உறக்கமில்லை. கடைசியிலே என் தந்தை பாதங்களில் விழுந்தேன். கண்ணீர் கடலாயிற்று. பிரக்ஞையுமில்லை.

முன்ஷி ராமனே! சாகுங்கால், முன்ஷி ராமன் விவாகத்தைக் காணுமல் நான் செல்லுகிறேன். நீ நிச்சயமாக அவன் விவாகத்தை முடிக்கவும் என உன் தாய் உணர்வற்றிருக்கும் பொழுது இதைக் கூறிவிட்டு மரித்தாள். அப்பா! என தந்தை கூறினர். ஐயோ! நான் வக்கீலாகி ஏராளமாய்ப் பொருள் சேகரித்து அன்னை பாதங்களில் சமர்ப்பிக்க வேண்டுமென எண்ணினேன்! இந்தச் சிந்தனைகளே ஸ்திரீகளுக்கு தான் ஏதோ கடமைப் பட்டிருப்பதாக சிரத்தானந்தரைக் கடைசிவரை உற்சாக மளித்தது.

அதுவுமன்னியில் தனது அன்பிற்ச் சிறந்த சிவதேவி தர்ம பத்தினியின் கடைக்காலம் அவர் மனதையே மாற்றி விட்டது. சௌ. சிவதேவி ஐந்தாவதாக ஒரு பெண்ணை பிரசவிக்கும் காலத்தில், பெருங் கஷ்டங்களுக்குள்ளாகி, பிராணனை 1891 ம வருடம் பிரிந்தாள். அவள் நோயுடன் அவஸ்தைப் படுங்கால் நான் மருந்து முதலியவைகளை அளிக்கச் சென்றால், நான் தொண்டு புரிவதற் கிருக்க நீங்கள் உதவி செய்கிறீர்களே என வருந்துவாள். இங்ஙனம் மனக்கிலேசமாகி பஜனை ஒன்று சொல்லவும் எனக் கூறி அவள் ஓங்கார நாதஞ் சபித்து புவி நீங்கினாள். அவள் இறக்குங்கால், வேத குமாரி, ஹேமந்த குமாரி, அரிச்சந்திரன், இந்திரன் என நான்கு மக்களுண்டு. அவள் இறந்து தகனமானவுடன் வேத குமாரி என்னிடம் அடியிற்கண்ட எனது பத்தினியின் கடைசிக் கடிதமொன்றைக் கொடுத்தாள். பாபுஜி! நான் இப்பொழுது போகிறேன். எனது குற்றங்களை எல்லாம் மன்னிக்கவும். என்னைக் காட்டிலும் சௌந்தரியமும் சீலமும் நிறைந்த அடியாளை நீங்கள் காணலாம். ஆனால் இக்குழந்தைகளை நீங்கள் ஒரு பொழுதும் மறக்கலாகாது. என் கடைசி நமஸ்காரத்தைப் பெற்றுக் கொள்ளவும்."

இந்த அற்புதக்கடிதம், அவர் புனர் விவாகஞ் செய்து கொள்ளாமலிருக்கச் செய்ததோடு, ஸ்திரீகளுக்கும் வாழ் நாட்கள்வரை உழைப்பதற்கு உற்சாகமளித்தது எனலாம்.

---

## அத்தியாயம் பதினாறு

### ஆசிரம தர்மம்

பஞ்சமர்களும், பெண்மணிகளும் புனருத்தாரண மாவதற்கு, உழைத்ததுடன் இந்து சமூகத்தில் மறுபடியும் ஆசிரம தர்மங்கள் நிலையாக வேண்டுமென விரும்பினர். சனாதன தர்மம், மனிதர்கள் சகஜமாய் 100 வயது சீவிக்க லாம் எனச் சொல்லும். மேன்மையான சாதனங்களாலும் உயர்ந்த ஒழுக்கங்களாலும் 400 வருஷம் சீவிப்பதும் கஷ்ட மில்லை. நூறு வருஷத்தையும் நான்கு நிலையாகப் பிரிக்கலாம். முதல் நிலையை பிரம்மசரியம் எனப்படுவது. இரண்டாவது நிலை கிரகஸ்தாசிரமமாகும். அதாவது இல் லற வாழ்க்கையாகும். மூன்றாவது நிலை ஒழுக்கங்களை யெல்லாம் உயரச் செய்து, உத்தமமான வாழ்க்கைக்கு கானகத்திலே உழைப்பதாகும். பசை பிரிந்து, பரோப காரஞ் செய்யும் வாழ்க்கையே துறவி வாழ்க்கையாகும்.

இந்நான்கு ஆசிரமங்களுக்கும் அடிப்படையா யிருப் பது பிரம்மசரியயாசிரமம். தேகம், தேகத்திலுள்ள அங் கங்களெல்லாம் திடமுடனாகி, மனம், வாக்கு, மேன்மை யான நிலைகளை, பிரம்மசரிய யாசிரமத்தில் பெற்றாலொழிய மற்ற ஆசிரமங்கள் ஆதரவுடனாவது அரிது.

பிரம்மம் என்றால் அறிவு, வன்மை, இவைகளைப்பெறு வதற்குப் பயிற்சிசெய்யுங் காலங்களே பிரம்ம சரியமெனப் படும். அறிவை ஒருவன் விருத்தி செய்ய வில்லையேல், மற்றவர்களால் சுலபமாய் ஏமாற்றப்படுவான். அறிவற்ற வனின் மனம் கொள்ளையடிக்கப் படுவதன்னியில், அவன் பொன் பொருளையும் மற்றவர்கள் அபகரித்துச் செல்லு வார்கள்.

பாமரர்கள் அறியாமையிலேயே ஆழ்ந்திருப்ப தற்கு :—புவியெல்லாம் மர்மம், நாம் அறிய இயலாது, எனச் சொல்லி, பூனை குறுக்கே போயிற்று, நாம் இனி வெளியிற் செல்லலாகாதென, மனத்தில் கலக்கத்தையுண்டு பண்ணுவார்கள். எத்துணையோ தோல்விகள் இவ்வறியா மையினுலே எங்கும் திகழ்ந்தன. பல்லி கவுளி, போரா டச் செல்லாதே, என எத்துணை வீரர்கள் உபதேசிக்கப் பட்டு, முன்னணி செல்லாமல் மாய்ந்தார்கள். மழை திடீ ரெனத் தோன்றியதால் நாம் யுத்தகளத்திற்குச் செல்லலா காதென இராஜ்யத்தை பறி கொடுத்தவர்களும் கணக் கில்லை. ஆந்தை கத்துவதால் நிச்சயமாய்ச் சாவாய் எனச் சொல்லி கிலியை யுண்டுபண்ணி மாந்தர்களைக் கொன்ற வர்களுமுண்டு. ஏழரை நாட்டுச் சனியன், நான் இத்திசை யில் சண்டை செய்தால் தோல்வி யடைவேன் என ஆண் மாவை விற்று அமைதி உடன் படிக்கை செய்த அரசர் களும் சகஜம். கலியுகம், மிலேச்சர்களே மேன்மையா வார்கள் எனக் கருதி, தன்னையும் தன்சாதியையும் சிதைத் தவர்களோ கணக்கிலில்லை. மல்லிப் பூவை நினைத்தேன், ஆனல் தும்பைப்பூவே தோன்றியபடியால் இனிவிவாக மில்லை என சம்பந்தங்கலைந்து சீரழிந்தவர்களும் இல்லாம லில்லை. சுவாமியின் துவஜ ஸ்தம்பமே கீழே விழுந்து விட்டது. கடவுள் நம்முடைய பக்கமில்லை, இனி சத்து ருக்களின் காலில் விழ்வோம் என வீரத்தை விற்றவர் களுமுண்டு. பகவானையே உடைத்து இங்குமங்கும் சிதறச் செய்தவன் மானிடனை என்னை விட்டுவிடுவானே என அஞ்சி வாயிலும் வயற்றிலும் அடித்துக் கொண்டவர்களு முண்டு. நாம் மூன்று பேறும் இணைந்து போர்புரியலா காது, நான்காவது நண்பர் இல்லையாதலால் இரண்டு நண்

பர்களே செயலைச் செய்வோமென வன்மை குறைந்து வீழ்ச்சியானவர்களையும் உலகமறியும். கடல் யாத்திரை அதர்மம் எனக்கூறி நாட்டின் ஐசுவர்யத்தையும், பெருமையையும் பாழாக்கியது யாவரும் அறிந்த விஷயம். சிவன் சாசுவதமான சாந்தமெனச் சொல்லி, உருத்திர வடிவத்தை மறந்து நிலவும் சீவன்களை நடமாடும் சுடுகாடுகளாக்கவில்லையோ? இன்று சூரிய கிரகணம், ஸ்னானஞ் செய்ய வேண்டு மெனக் கோட்டை நீங்கி சத்துருக்களுக்கு ஜயமளித்த வர்களுமுண்டு.

பட்டினி கிடந்து உபவாசமாகி ஜபஞ் செய்கிறேன் எனச் சொல்லி இராட்சதர்களுக்கு வெற்றி யளித்தவர்களும் கணக்கிலில்லை. மந்திரம் மந்திரம் எனச் சில மொழிகளிலே சாய்ந்து; மதிமயங்கி மெய்யழிந்தவர்களையும் மாநிலமறியும்.

இன்னும் அறியாமையினுல் அதோகதியாகி அக்கிரமங்களை அனுபவித்தவர்களை சரிதையில் காணலாம். நாங்கள் பிராமணர்கள், கொலை குற்றங்கள் செய்தபோதிலும் எங்களை விட்டுவிட வேண்டுமென அந்தணர்கள் சட்டமும் செய்திருந்தார்கள். நமது தர்மம் நினைவிற்கு விரோதமாயுள்ளவனை யெல்லாம் கொலைபுரிய வேண்டுமென ஒரு சட்டமு மிருந்தது. சூனியம் வைத்தான். கண் பார்த்தான். என எத்தனையோ ஜனங்கள் நெருப்பிலே எரிக்கப்பட்டிருக்கிறுர்கள். காளி திருப்தியடைவாள் என நரபலியும் அளிக்கப்பட்டுவந்தது. ஆடு, மாடு, கோழிகளை அறம் என்னும் பெயரால் இன்னம் கொலைபுரியப்படுகின்றன. கங்கையிலே மரித்தால் புண்ணியமென எத்துணை புனித ஆன்மாக்கள் தற்கொலைக் கிரையானுர்கள். புருஷனுடனிறப்பதே புண்ணியமென புனிதமங்கைகளெல்லாம் ஒரு காலம் உடன்

கட்டையில் ஏற்றப்பட்டனர். எனக்குப் பிள்ளை பிறக்கவில்லையே, எனக்குப் பிறக்கும் முதல் பிள்ளையை உனக்கு பலியளிப்பேன் எனக்குழந்தை பலி அளித்தவர்களுமுண்டு. அற்புதம், அற்புதம் என ஏமாந்தவர்களும் புவியிலுண்டு. பூதம், பிசாசு எனப் பயம் என்னும் அரக்கனால் குழந்தைகளைப் பேடிகளாகச் செய்தவர்கள் கணக்கிலில்லை.

இத்தகைய அறியாமைகளால் அழிந்த நாடுகள் அநேகம். வாமமார்க்கிகள் பாரதநாடெல்லாம் ஒரு காலத்தில் கைப்பற்றி இந்தியாவை இந்த அறியாமை என்னும் கடலில் ஆழ்த்தி விட்டார்கள். இவைகளை யெல்லாம் பிரம்ம சரியாசிரமத்தில் அறியும் வண்ணஞ் செய்து, உபநிடதங்களில் உரைக்கும் அடியிற்கண்ட கற்பனைகளை யெல்லாம் கற்பிக்கவேண்டும்.

இயல்பாயுள்ளதை யெல்லாம் அறிந்து அறிவிக்க வேண்டும். பொருள்களின் உண்மையான வடிவங்களை அறியாததனாலேயே பல பேராபத்துக்கள் விளையும். சத்தியத்தை அறிய சதாகாலமும் முயற்சியிலாகி அதை சிறப்பிப்பது கடமை. மனோ வன்மையுடனாக பயிற்சி அவசியம். அப்பயிற்சியை அன்னியர்களுக்கும் அறிவிப்பது நன்மையாகும். தேகப்பயிற்சியும் அடக்கமும் திடத்தை அளிக்கும். ஏனையோர்கள் திறமையுடனாக உழைக்கவும். சித்த சாந்தமும் அனுபவத்தினாலேயே செம்மையாகும். ஜனங்களின் சித்த சாந்தத்தை அறியமுயலவும். மர்மமாயுள்ள உண்மைகளைக் கற்று மகா ஜனங்களுக்கும் கற்பிக்க வேண்டும். நம்மை நாடுபவர்கள் எவர்கள் என அறிந்து அவர்களுக்கு மரியாதை அளிப்ப தன்னியில், இளைஞர்களுக்கும் அதை அறிவிப்பது அறிவுடைமையாகும். ஜன சமூகத்தை அறிந்து அவர்களுக்கு உழைப்பது உத்தம

மாகும். குழந்தைகளைப் பற்றியும், ஜனன சாஸ்திரத்தை யும் கற்று கற்பிக்கவேண்டும். இளைஞர்கள் ஏமாருமலி ருக்க புத்தியைப் பெருக்கும் தர்க்கங்களை யெல்லாம் கற் பிக்கவேண்டும். குழந்தைகளே ; ஒழுக்கமாய் நடக்கவும். சிற்றின்பத்தில் சாயாமல் கல்வி கற்பதில் ஒரு நாளும் பரா முகமாயிருப்பது பெருமையை யளிக்காது. சத்தியத்திற் கும் தர்மத்திற்கும் மாருக ஒரு விஞடியுஞ் செல்லாதே. உனது தேகத்தையும், பயிற்சியையும் புலன்களையும் வீணுக் காதே. பொருள், நாடு, வன்மைகளை சம்பாதிப்பதில் கவன மற்றிருப்பது குணமாகாது. பெற்ருேர்களை மரியாதை செய்யவும். நன்மையை நாடி புன்மையினின்று பிரியவும். என் நல்லொழுக்கத்தையே நாடவும். என் தீய வொழுக் கத்திலே தோயாதே, நற்குணமுள்ள அறிஞர்களின் சக வாசத்தையே நாடவும். அவர்களையே நம்பவும். சிரத்தை யுடன் எதையுஞ் செய்து அளிக்கவும். வெட்கத்திற் காகவோ விளக்கத்திற்காகவோ அளிக்கவும். பயத்திற்கா கவோ பெருமைக்காகவோ அளிக்கவும். தர்மத்திலே சந் தேகம் தோன்றுமேயாஞல், ஒழுக்கங்களிலும் சஞ்சல மாஞல், பட்சபாதம் பிரிந்து, பெரும் அறிஞர்கள் அந்நிலை யில் என்ன செய்வார்களோ நீயும் அதைச் செய்யவும். நன்மையை நிலவச் செய்ய முயலவும். இதுவே உப தேசம். இதுவே சத்தியம் எனச் சொல்லி இக்கடமைகளை நாட்டிலுள்ளவர்கள் எல்லாம் கைப்பற்ற வேண்டுமென எங்கும் பிரசாரஞ் செய்தார்.

மனிதர்கள் குறைந்தது வயது 25 வரை விவாக மாகாமலிருந்து கொண்டு இப் பயிற்சிக ளெல்லாம் பெற வேண்டும், பிரம்மசரியத்தில் புலஞகும் நாடு சுதந்திரமாய் வாழும், பராக்கிரமமாயு மிருப்பார்கள். அவர்களை மற்றவர்

யமனையே வெல்லும் பிரம்மசரியம் சிறிய ஐசுவர்யங்களி லும் ஏன் பெருமையை யளிக்காது? பிரம்மசரியம் ஒன்றே எல்லாத் தவங்களைவிடப் பெரியது. பிரம்மசரியம் என் னும் தவத்தால் தரணியிலுள்ள எல்லாப் பெருமைகளையும் பெறலாம். நாட்டிலே நிலவும் அநியாயங்க ளெல்லாம் பிரம்மசரியத்தால் பாழடைந்துவிடும். எல்லா ஐசுவர்யங் களையும் பெற்றாலும் பிரம்மசரிய மில்லையேல் அந்த ஐஸ் வர்யங்களின் ஆனந்தத்தை அனுபவிக்க முடியாது. பிரம் மசரியத்தால் பாழாகாத துன்பமே இல்லை. பிர்ம்மசர்யத் தால் நீடூழி வாழ்வான். பலம் பெறுவான். பேரன்பு பெரு மையாகும். தர்மம் தலை யோங்கும். பிரம்மசரிய மில்லை யேல் சீவனிருந்தும் செத்தவன் போலாகும். பிரம்மசரி யத்தால் தேக வன்மையாகும். சுக்கிலம் செம்மையாகும். அதை வீணாக்குவது யமனை அழைப்பதாகும். தர்மார்த்த காமமோட்சங்களின் ஆதரவான ஆரோக்கியத்தை அளிப் பது பிரம்மசரிய மாகும். கண்ணியத்தை அளித்து குணத் தைப் பெருக்கி, கல்விமானாய்க் கதிரவன்போல் காளை வன் மையைப் பெறுவது பிரம்மச்சரியத்தா லாகும். வன்மை யில்லையேல் கஷ்டங்களுக் குள்ளாவோம் என எங்கும் பகிரங்கஞ் செய்தார்.

நான் ராணி கலாசாலையில் படித்திருக்குங்கால் எனது நண்பன் ஒருவன் வீட்டில் விருந்து சாப்பாடு. ஹா ஹா வென்று இரவு நடுநிசியாய் விட்டது. தாமதமாய் வீடு திரும்பினேன். அரை மைல் நடந்து இன்னம் கால்மணி நடக்க வேண்டிய தாயிற்று. ஏதோ சின்னஞ்சிறு சந்துகள் வழியாய் போக நேர்ந்தது. தெருவின் இருளிலே சோம் பேறி ஒருவன், எவனையோ எதிர்பார்த்துக்கொண்டு கத்தி யும் கையுமாய் நின்று கொண்டிருந்தான். நான் தான் அவ

ஞே என ஒரு சந்தேகமும் அவனுக்குப் பிறந்து விட்டது. என் கழுத்திலே அவன் கை. வேறு கையினல் கத்தியை எடுத்து என்னை குத்த முயன்ருன். அதற்குள் நான் என் கத்தியை எடுத்து அவனை நன்ருய்க் குத்தி விட்டேன். சோம்பேறி உடனே ஓடிவிட்டான். நானும் சற்று காயத் துடன் வீடு திரும்பி சிகிச்சை செய்து கொண்டேன்.

இத்தகைய சம்பவங்கள் ஒவ்வொருவனுக்கும் தோன் றுமென எண்ணியே வன்மைக்கு அவசிய மிருப்பதால் பிரம்ம சரியம் அவசிய மென்ருர். நண்பர்களுடன் அதிக மாகப் பழகி வீண் விளையாட்டில் தோய்வதும், தீமையை யளிக்குமென அவரின் மாணவ வாழ்க்கையின் சம்பவ மொன்றை அவர் மொழிகளாலேயே மொழிவோம்.

ஹோலி பண்டிகைக்குப் பிறகு வரும் முதல் செவ் வாய்கிழமை கிழட்டு மங்களம் எனக் காசியிலே கூறுவது வழக்கம். அச் செவ்வாய்கிழமை இரவினின்று வியாழன் வரை, கங்கையிலே உற்சாகப்படகுகளில் இங்குமங்கும் செல்லுவோம். அப்படகுகளில் ஆட்டமும் பாட்டு முண்டு. வேசிமக்கட்களையும், விகட கவிகளையும் அங்கு அழைப்போம்.

நானும் பெரிய படகு ஒன்றைத்தயார் செய்து காட்டுப் பச்சிலைகளால் அலங்காரஞ் செய்து 20, 25, நாற் காலிகளையும் அங்குவைத்து, காலேஜ் பண்டிதர்களையும் அழைத்திருந்தோம். வேசி மக்கள் பாட்டும், ஆனந்தமும், கூத்தும் இரண்டு நாள்வரை அப்படகிலேயே எங்கள் மனத்தைக் கவர்ந்தது. நாங்கள் இந்த கெட்ட சகவாசத் திலே தோய்ந்திருந்து மதிமயங்கி உற்சாகத்தில் பதிந் திருந்தும் அறிவே வன்மை என ஒரு கொடியும் நாட்டி

ருந்தோம்; ஆனால் எனது ஆன்மா என்னை உள்ளத்தில் எச்சரிக்கை செய்து கொண்டே இருந்தது.

இந்த எச்சரிக்கை இளைஞர்களுக் கெல்லாம் தோன்றும். அவர்கள் அதை கவனிப்பதில்லை என நினைத்துத் தானே பிரம்மசரியத்தைப் பற்றி அவர் அதிகம் பிரசாரஞ் செய்தது. ஒழுக்கமன்னியில் அறிவு பயனில்லை என கலாசாலையில் கற்குங்கால் நிகழ்ந்த இச்சம்பத்தைச் சிந்தித்துக் கொண்டு தானே அறிவுடன் ஒழுக்கமும் கற்பிக்கப்பட வேண்டுமேன முயன்றார்.

பிரயாகையில் நான் கழித்த சில மாதங்கள் எனக்குத் திரேதாயுகம் போலிருந்தது. பரீட்சையில் நான் தேரவில்லை என்னும் மனச் சஞ்சலத்தை எல்லாம் மயக்கத்தில் ஒழிக்க மதுபானத்தின் சரணத்தில் வீழ்ந்தேன். ஆட்டம் பாட்டுகளில் எல்லாம் மாலைப் பொழுதைக் கழித்து இரவு எக்ஷா நம்பர் 1 பிராந்தியை மேஜையில் வைத்து சித்தத்தைச் சிந்தனையிலாக்கும். 'லாக் ஆன் ஹ்யுமன் அண்டர்ஸ்டான்டிங்', பேகன்ஸ் அண்டு வான்ஸ்மேண்டு ஆப் லேர்னிங்" என்னும் நூல்களால் நிசியைக் கழிப்பேன். சித்தாந்தம் சித்தாந்தமாய்ச் சிந்தனையிலாகும். டம்ளர், டம்ளராய் சாரயம் நெஞ்சிலே இறங்கும். ஒரு வினாடியால் ஒரு பாட்டில் முடிந்து விடும். அங்கு பார்சிக்கு கடன் அதிகமாகும். ஆனால் இங்கு உற்சாகம். எனது தந்தை 5 மணிக்குப் பூஜை செய்து கொத்தவால் உத்தியோகத்திற்குச் சென்று விடுவார், பகல் போஜனத்திற்கும் அவர் வருவதில்லை. அவர் இரவு எட்டு மணிக்குத் திரும்பி புசித்துத் தூங்கி விடுவார். அப்பொழுது இரவெல்லாம் என் சுவாதீனமாய்விடும். மேஜையிலேயுள்ள நூல்களை யெல்லாம் கண்டு என் தந்தை நான் அடுத்த

பரீட்சைக்குக் கவனமாய்ப் படிக்கிறேன் எனக் கருதிச் சென்று விடுவார். இங்ஙனம் ஏழுமாதம் கழித்தேன்.

## விசித்திரமான விவாகம்

இக்காலத்தில் எனது நண்பர் ஒருவர் வீட்டில் விவாகமொன்று நடந்தது. 10 வயது பிள்ளைக்கு 9 வயது பெண். விசித்திரமான விவாகம். அங்கு குழந்தைகளுக்கும் மதுபானம் அளிக்கப்பட்டது. வேசிகளும் வெட்கங் கெட்டவர்களும் அங்கு கூத்தாடினார்கள். வந்தவர்களுக் கெல்லாம் பிராந்தியும் சாராயமும் அளிக்கப்பட்டது. நானும் அங்கு சென்று மதுபான மருந்தினேன். என்னை அறியாமல் மயக்கம், உடனே வாயிலெடுத்து ஒரு புதிய பாட்டிலுடன் வீடு திரும்பினேன். அங்கு கொத்தவால் சாகிப் உறங்குகிறார். நான் தெரியாமல் சென்று படுக்கை அடைந்தேன். ஆனால் உறக்கமில்லை ; மனத்திலே பெருங்கலக்கம், ஆனால் காலை வரை மயக்கம் தெளிய வில்லை. இனி இப்படிச் செய்யலாகாதென எண்ணி துக்கமானேன்.

இக்கெட்ட பழக்கங்களால் தான் அநேகர் கஷ்டமடைந்துள்ள படியால் மற்றவர்களும் இதற்கிரையாகாதிருக்க வேண்டுமெனவே பிரம்மசரியத்தைப் பற்றி அவர் அதிகம் வற்புறுத்தியது. அறிஞர்களின் சகவாசம் வேண்டுமென பிரம்மசரியத்தைப் பற்றி அவர் அதிகமாய் பகிரங்கஞ் செய்ததற்கு, காசி மகா நகரின் அடியிற் கண்ட வாழ்க்கை அவருக்கு எச்சரிக்கை அளித்தது.

## காசி வாழ்க்கை

தந்தைக்கு கடைப் புத்திரனை என்னிடம் அன்பிற் கேற்றவாறு விசுவாசமும் வைத்திருந்தார். நான்

கலாசாலையிலே கற்குங்கால் எனக்கு வேண்டிய பொருளை வாங்கிக் கொள்ளலாமென உண்டியல் கடையொன்றில் கூறியிருந்தார். செலவிற்குக் குறைவில்லை. வசந்த பஞ்சமிக்கு விடுதலையா யிருந்தபடியால் பலியா சென்றேன். எனது காலி நண்பர்களான சியாம் சிம்ஹனும் அஜீத் சிம்ஹனும் அங்கு என்னை வரவேற்றார்கள். என்னை அவர்கள் கானஞ் செய்யும் விலைமாதர் வீடு ஒன்றுக்கு அழைத்துச் சென்றார்கள். பாட்டுக் கேட்பதும் நியாயம் எனச் சொல்லியதால் நானும் உல்லாசமாய்ச் சென்றேன். ஆரம்பத்தில் கொஞ்சம் சஞ்சலமும் வெட்கமும் இருந்தது. ஆனால் கிராம்புடன் வெத்திலைமேல் வெத்திலையாக ஐம்பது இலைகள் மென்றவுடன் சந்தேகமெல்லாம் பறந்தது. நானும் என்னை மறந்து விட்டேன். பிறகு காலை மூன்றுமணிக்கு படுக்கையில் படுத்திருப்பதைக் கண்டேன். காலையில் எழுந்தவுடன் முகமெல்லாம் காய்ந்திருந்தது. ஆனால் தந்தையுடன் உண்மையைக் கூறுவதற்கே தைரியம் என்னிடமில்லை.

காசியிலே வேறு அனுபவத்தையும் நான் பெற்றேன். அங்கு ராம லக்னமிச்ரன் என எனது கலாசாலை மாணவன் ஒருவனிருந்தான். மதுரா மாஸ்டரைப்போல் அவன் உயரமாகவும், கருமையாகவும் தென்படுவான். அவன் துணியும் கருமையாகவே இருக்கும். வயது 22. மூன்று முறையும் மெட்ரிகுலேஷனில் தேறவில்லை. இரண்டுமுறை அவன் பரீட்சைக்கே ஆஜராகவில்லை. ஆனால் கலாசாலைக்கு தினந்தோறும் வந்து விடுவான். இவனைக் கண்டால் மற்ற பிள்ளைகளெல்லாம் அஞ்சுவார்கள். இவன் என்னருகிலே வந்து ஏதோ சேஷ்டைகள் புரிய எண்ணினான். நான் உடனே திரும்பி அவனைத் தள்ளி உதைத்

துக் கீழே வீழ்த்தினேன். உடனே அவன் நடுநடுக்கமாகி இதை ஒருவரிடமும் சொல்லக் கூடாதென என்னிடம் வேண்டிக் கொண்டான். மறுபடியும் பளீர் பளீர் என அவனை அறைந்து மற்ற மாணவர்களிடமும் அவன் யோக்யதையைத் தெரிவித்தேன். ஸ்ரீ. மிச்ரன் மூன்றுவது தினம் கலாசாலையினின்று சர்டிபிகேட்டை வாங்கிக் கொண்டு மறைந்து விட்டான்.

இத்தகைய சம்பவங்கள் மாணவர்களிடம் புலனாகும், எனவே பிரம்மசரியாசிரமத்தைச் சரிவரப்பாலனஞ்செய்ய வேண்டுமென அவர் கர்ச்சனை செய்தது. பிரம்மசரிய மன்னியில் எந்த தத்வமும் ஒரு பயனையு மளிக்காது. கங்கா ஸ்னனமும் சம்ஸ்கார கர்மங்களும் செம்மையாகாது. காஷாயமும் தண்டமும், சடையும், சாம்பலும் பிரம்ம சரிய மன்னியில் பயனில்லை. தீர்த்த யாத்திரையும் பட்டினியும், உபவாசமும், மந்திரமும், திலகங்களும், வேத ஞானமும், இலக்கிய அறிவும், தத்துவ நுட்பமும், சாஹித்தியமும் பிரம்மசரிய மில்லையேல், கடுகளவும் குணமாகாது. மற்றவர்களுக்கு யோக்கியன் என காட்சியாக்கவே இவ்வுபாயங்க ளன்னியில், அகத்திற்கு எத்துணையு மளிக்காது என சென்றவிட மெல்லாம் வற்புறுத்தினர். சென்னையிலே யுள்ள பெரும் தேசீயத் தலைவர் ஒருவர் ‘ சிரத்தானந்தரா அவர் சென்னைக்கு வந்தால் பிரம்மசரிய மொன்றையே வற்புறுத்துவார். நமது ஜனங்கள் அதை விரும்புவார்களோ ’ என ஒரு முறை அவர் கூறியதினின்று வட நாட்டிலே இமாலய பர்வதத்தினருகே அவர் செய்த ஊழியம் தென்னாட்டுத் தலைவர்களையும் எத்துணை அறியும் வண்ணம் செய்தது எனப் புலனுக்கிறது.

பிரம்மசரியாசிரமத்திற்குப் பிறகு இல்லர வாழ்க்

கை நடத்த வேண்டுமென்பது அவர் நினைவு. இல்லற வாழ்க்கையை சகஜமாய் பாரத மக்கட்கள் நடத்துகின்ற படியால் அதை அவர் அதிகம் வற்புறுத்தவில்லை. ஆனால் வானபிரஸ்தாசிரமம் அவசிய மெனப் புகன்றுதான் அந்த ஆசிரமத்தை பகிரங்கமாய்ப் பற்றி மகா ஜனங் களும் அதை மேன்மையாய் அறிந்து கைப்பற்ற வேண்டு மென விரும்பினர்.

கானக ரகஸியம். வானபிரஸ்தாசிரமம் மாந்தர்க ளின் மூன்றாவது நிலையாகும். இல்லற வாழ்க்கையில் பொருள் முதலியவைகளைச் சேகரித்து, பெண் பிள்ளை களை சுகமாக வாழ்க்கையி லமர்த்தி, பிறகு மனைவி வீடு வாசலினின்று பிரிந்து கானகஞ் சென்றால் மனோ பயிற் சியும் மனோ சாந்தமும் பெற்று வனஸ்பதிகள் கானக மிரு கங்களிடமும் கற்று, துறவி வாழ்க்கைக்கு அவசியமான சீவ ரகசியங்களை அனுபவ பூர்வமாய் அறிந்து கொள்ள சந்தர்ப்ப மேற்படும். ஆதியிலே பெரும் உண்மைகளைக் கண்ட இரிஷிகளெல்லாம் கானகத்திலேயே ஆராய்ச்சி செய்தார்கள். பெரும் யோகசாஸ்திரமும், பெருமையுள்ள தத்துவ நூல்களும் புவியின் சிறந்த புஸ்தகங்களெல்லாம் கானகத்திலேயே எழுதப்பட்டவைகள். ஒரு மண்ட லமே கானக வாழ்க்கை பெற்று சிலர் தீர்க்கதரிச பத வியைப் பெற்றார்கள் என்றால் அடவியின் அற்புதத்தை மொழியவும் வேண்டுமோ?

பட்சி கற்பனை. குருவிகள் தன்னந்தனியாய் சென் றால் ஒரு வேளை எதிரிகள் 'கொலை செய்து விடுவார்க ளோ' எனப் பயந்து கூட்டங் கூட்டமாய்ச் செல்லும். எந்த நிலத்திலாவது அதிகமான தானியத்தைக் கண்டால்

வேடன் வலை விரித்துளானோ எனப் பரிசீலனை செய்ய ஒரு பறவை முன் சென்று சோதித்துப் பிறகு மற்ற குருவிகள் செல்லும். அந்தக் குருவி வலையில் சிக்கிவிடில் மற்ற பறவைகளெல்லாம் ஒன்று சேர்ந்து அந்தக் குருவியை மீட்கும். ஒரு வேளை திடீரென எல்லாப் பறவைகளும் வலையிலே அகப்பட்டுவிட்டால் யாவும் ஒன்று சேர்ந்து வலையுடன் பறந்து விடும். இந்த பரஸ்பர உதவியை கானகத்திலுள்ள எல்லா ஜீவன்களிடமும் காணலாம். வாத்துக்கள், வெட்டுக் கிளிகள், பச்சைக் கிளிகள், வானம்பாடிகள், சிறு மைனாக்கள், மீன்கொத்திகள், பெருங் கொக்குகள், சாதகப் பட்சிகள், காட்டுப் புறாக்கள், கரும் காக்கைகள், அண்டங் காக்கைகள் எல்லாம் எப்பொழுதும் ஒன்று சேர்ந்தே செல்வதைக் கண்டாவது இனி மனிதர்கள் ஒன்று சேர்வதற்கும் நாம் முயற்சி செய்யவேண்டும், என்னும் எண்ணம் வானபிரஸ்தாசிரமம் செய்பவர்கள் அறிவார்கள். ஒரு பட்சி இறந்தால் வேறு பறவைகள் கதறி அதைப் புதைக்கும். ஒன்று கஷ்டப்பட்டால் அன்னிய பறவைகள் உதவி அளிக்கும். சோம்பேறி பட்சியாயிருந்தால் மற்றவை யெல்லாம் அதைக் கோன்று தின்றுவிடும். பெண் பறவைகளுக்கு ஆதரவளித்து குஞ்சுகளை யெல்லாம் காப்பாற்றும். பட்சிக் கூட்டங்களில் தலைவன் உண்டு. அவன் சொல்வதையே மற்ற பட்சிகள் செவியுறும். வேலை செய்யும் பட்சியுமுண்டு. போர்புரியும் பட்சியு முண்டு. அணிவகுத்துச் செல்லும் பட்சிகளுடன் கற்பதற்கே மனிதன் காடு செல்லவேண்டும்.

பட்சிகள் எல்லாம் ஒன்றாய்ப் புசிக்கும். கிடைத்த உணவை தன்னந் தனியாய் புசிப்பதில்லை. ஒரு கழுகு பிண மொன்றைக் கண்டு விட்டால் தான் புசிப்பதற்கு

முன் அதைக் கூவி அழைத்து மற்றக் கழுகுகளை எல்லாம் கூப்பிடும். குறைந்தது ஒரு டஜன் பட்சிகள் சேர்ந்தாலொழிய அவைகள் உணவைப் புசிக்க விரும்புவதில்லை. ஒற்றுமையின் வன்மையையும் நட்பின் பெருமையையும் பட்சிகளிடம் கற்கலாம்.

பட்சிகள் இங்ஙனம் ஒன்றாயிருப்பதால் எதிரிகள் பட்சிகளுக்கில்லை; அவைகளுடன் போராட எந்த ஜந்துக்களும் துணிவதில்லை.

கானக கற்பனை. கானகத்திலுள்ள ஓநாய்கள், நரிகள், மான்கள், யானைகள், பன்றிகள், நாய்கள், குரங்குகள், குதிரைகள், கழுதை, முதலியவைகளும் ஒன்றாகவே செல்லும். கூட்டமாய்ச் சென்று உணவை நாடி எதிரிகளைக் கொள்ளை அடித்து, ஆனந்தமாய், வாழ்க்கை செய்யும். கூட்டமாய்ச் செல்வதால் நம்மை எதிர்ப்பவர்கள் அஞ்சுவார்கள் என அவை அறிந்து, அதனால் பலமற்ற மிருகங்களும் பாதுகாப்பாகி நீடூழியாய் கவலையற்று வாழ்வதற்கு சாதகமளிப்பதென்பதை மிருகங்கள் புலனாக்கும். சமூகச் சித்தமில்லையேல் சக்தி சூன்யமாகும். பரஸ்பரம் அன்பும் கடமையும் ஒழியும். சுயநல மதிகரிக்கும். நீதி என்னும் நோக்கமும் நிலவாது. பலமுள்ள ஒருவனின் அக்கிரமத்தை ஒற்றுமை யன்னியிலழிக்க முடியாது. இச் சூட்சமங்களை மிருகங்களும் அறிந்து கானகத்திலே சமூகச் சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்குங்கால், நாம் ஏன் சமூகத்தை நிர்மாணஞ் செய்து அதை ஏன் செம்மையாக்கலாகாது என்னும் கற்பனையை வானப்பிரஸ்தாசிரமத்தில் கற்கலாம் என்னும் எண்ணத்துடனேயே இருஷிகள் இவ்வாசிரமத்தை முதன்

மை என மொழிந்தது. மிருகங்கள் தாங்கள் சுகமாய் வாழ்வதற்கு இயல்பாய் சில செயல்களைச் செய்கின்றன.

தேகங்களைச் சுருக்கியும், விரித்தும், பெருக்கியும், காலங்களுக் கேற்றவாறு செய்து உறுப்புகளின் நரம்பு நாடிகளை வன்மையுடனாக்கி, புனிதஞ்செய்து தேகாரோக்கியத்தை காப்பாற்றிக்கொள்ளும். அங்கங்களை எல்லாம் அவ்வப்பொழுது அசைத்து, உட்கார்ந்து, உல்லாசமாகி, அமைதியாய், படுத்து, புன்னகை புரிந்து, பல்லைக் காட்டி, கர்ச்சனை செய்து, மல்லாந்து, புரண்டு, தலைகீழாகி, தனக்குத்தானே அதிர்ச்சி அளித்து, சுறு சுறுப்பையும் சீலமான சுபாவத்தையும் பெறும். வெளியில் புசித்து, நீர் பருகி, இங்கு மங்கும் ஓடி ஆடி, உழைத்து தங்களைச் சஞ்சலமன்னிலாக்கிக் கொள்ளும்.

வானப்பிர ஸ்தாசிரமம் இவ்வற்புதத்தை எல்லாம் விளக்கும். வான பிரஸ்தாசிரமத்திலே நாடுகளில் நடை பெறும் அநியாயங்களை யெல்லாம் மறந்து, இயல்பிலே இணைந்து, காய் கனிகளைப் புசித்து மனம் வன்மையுடனாகி, அச்சமகன்று வீரம் செறிந்து, சிறிய வாழ்க்கையில் பெரும் நோக்கத்தில் பதிந்து, துறவி யாசிரமத்தில் செய்யப் போகும் பரோபகாரங்களின் ரகசியங்களை அறிவிக்குமென சுவாமிகள் ஆசிரம தர்மத்தை எங்கும் வற்புறுத்தி, இந்து சமூகத்திலும் கவனஞ் செலுத்தலானார்.

---

## அத்தியாயம் பதினெட்டு.

### இந்துக்கள் நாசமாகிறுர்களே

இந்துக்கள்—சிந்து பிராம்மணன்—பாசாங்கு—மூர்த்தி பூஜை—பாதிரிகள் கூற்று—ஒரு உபாயம்.

இந்துக்கள்—வருஷந்தோறும் இறந்து வருகிறுர்கள். அவர்கள் எண்ணிக்கை மாதந்தோறும் குறைந்து வருவது கண் கூடு. கடந்த முப்பது வருஷத்தில் 100க்கு 74 னின்று 69 ஆய் விட்டார்கள் 100க்கு 5 ஆக முப்பது வருடத்தில் குறைந்து கொண்டே போனுல் சதாம்சத்தில் 69 இந்துக்களும் 420 வருஷத்தில் மறைந்து விடுவார்கள். இங்ஙனம் குறையாமலிருக்க ஏதாவது வழியை நாடாமலிருந்தால் அழிந்து போவது நிச்சயம். இக் கணக்கை கவனத்திலாக்கி இந்த சமூகம் மறுபடியும் தழைத்தோங்க வேண்டுமென எண்ணங் கோண்டு எதனுல் இது வரை அழிந்து வந்தது என்பதை ஆராய முயன்றுர்.

சிந்து பிராம்ம்ணன். புறச் சத்துருக்களினுல் இந்து சமூகம் அழிவது ஒரு புறமிருக்க ஜனங்களிடமுள்ள சீரற்ற வழக்கங்கள் சமூகத்தை சீரழிப்பதேன்பதை நன்குணர்ந்தார். 17வது நூற்றுண்டிலே சிந்து நாட்டில் பெரிய புரட்சி யொன்று புலனுயிற்று. சஹசி என்னும் சூத்திர மன்னன் அதை அரசுபுரிந்து வந்தான். அவன் மக்கட்களன்னியி லிறந்தவுடனே மந்திரியாயிருந்த சச்சன் என்னும் பிராமணன் நாட்டை அபகரித்து, பழைய இராணியையும் விவாகஞ் செய்து கோண்டான். அவன் வேறு சில நாடுகளையும் ஜயித்தான். ஆனுல் அவன் மதம் என்னும் பெயரால் சூத்திரர்களை கேவலமாகவும்.

வைசியர்களைத் தாழ்மையாகவும், க்ஷத்திரியர்களை இழி வாகவும் நடத்தினன். அதனல் அவர்கள் அவனுக்கு எப்பொழுதும் விரோதமாகி ஒற்றுமையைக் குறைத்து வந்தார்கள். அப்பொழுது அந்நியர்கள் முதன் முதலாக சிந்து நாட்டைப் படை எடுத்தவுடன் இதுதான் சமயம் என இவனுக்கு உதவி யளிக்க மறுத்து விடவே, இவன் அந்நியர்களால் அழிக்கப்பட்டு அரசாங்கமும் முதன் முதலாக விதேசிகளிடம் சென்றது.

மலையாளத்து ஜாமரின் ஆதிகாலத்தில் விபரீதமான செயல்களையும் செய்தான். தாழ்ந்த வகுப்பிலுள்ள பெண் மணிகளை அன்னிய நாட்டு மாலுமிகளுக்கு அளித்து அவர்களுக்குப் பிறக்கும் மக்கட்களை நிரந்தரமாக தங்களுக்கு ஊழியஞ் செய்வதற்காக தீய, செருமப் பெண்களில் பலரை தாராளமாக அராபியர்களுக்கு தானஞ் செய்து அன்னியர்களுக்கு மலையாளத்தில் ஆதிக்கியமளித்து விட்டான்.

தென்னட்டிலே பாசாங்கு பக்கிரி யொருவன் பல வருஷங்கள் முன் தோன்றினன். நான் அற்புதஞ் செய்வேன் எனப் பகிரங்கஞ் செய்தான். ஏதோ என்னை சாக்கிலே அடைத்து சுண்ணும்புடன் சேர்த்து கட்டிவிடவும். மற்ற மதத்தவர்களையும் அங்ஙனமே பரிசீலனை செய்யவும் எனப் புகன்று ஏதோ ஜாலவித்தையால் ஜனங்களை பிரமிக்கச் செய்து ஆயிரக் கணக்கான ஜனங்களை அந்நிய மதத்தில் சேர்த்து விட்டான்.

காஷ்மீர் அருகிலுள்ள ஒரு மன்னன் இந்து மதத்தை ஆயிரக் கணக்கான ஜனங்களுடன் எங்ஙனம் நீங்கினன் என்பதை அல்பகதூரி என்பவர் வெகு அழகாய் அடியிற் கண்டவாறு கூறுகிறார் :—

அந்த நாட்டு மன்னன் தனது குல தெய்வமான குறிப்பிட்ட தேவாலயத்திலுள்ள ஒரு விக்கிரகத்தைப் பூஜை செய்வது வழக்கம். மன்னனின் மகன் ஒரு முறை பெரும் நோயில் வீழ்ந்தான். என் மகன் நோயினின்று நீங்க நீங்கள் ஜபஞ் செய்யுங்கள் என புரோகிதர்களுக்குக் கட்டளையாயிற்று. நாங்கள் மூர்த்திக்கு அபிஷேக ஆராதனை நைவேத்தியங்கள் செய்து விட்டோம். இனி மகன் பிழைத்துவிடுவான் என அவர்கள் எல்லாப் பணிகளையும் செய்த பிறகு மறுமொழி அளித்தார்கள்.

ஆனால் சில தினங்கள் கழிந்து குழந்தையோ இறந்துவிட்டது. மன்னன் கோபமடைந்தார். உடனே கோவிலை இடிக்கக் கட்டளைப் பிறப்பித்து, விக்கிரகத்தைத் துண்டு துண்டாயுடைத்து புரோகிதர்களையும் கொன்று அன்னிய மதத்தில் ஆயிரக்கணக்கான ஜனங்களுடன் சேர்ந்து விட்டார்.

சில பக்கிரிகள் அற்புதங்கள் சிலவற்றைச் செய்து ஆயிரக் கணக்கான தாழ்ந்தோர்களை அந்நிய மதத்தில் கூர்ஜர நாட்டில் சேர்த்தார் என சரித்திரம் கூறும்.

மேற்கு நாட்டிலிருந்து பெரியவர் ஒருவர் இந்நாட்டிலே 11 வது நூற்றாண்டில் தோன்றினார். நாட்டிலுள்ள கல்வியை எல்லாம் கற்றார். வயோதிகனான ஒருவனை முதன்மையாய் தன் கல்வித் திறமையால் இந்துமதத்தினின்றும் நீங்கச் செய்தார். பெரியவர் இந்துமதத்தினின்றும் நீங்கினரே என பல பாமரர்களும் அவனைத் தொடர்ந்தார்கள். நாட்டின் மந்திரியும் இரகசியமாய் அந்நிய மதம் பெரியவரால் புகுந்தான், நாட்டு மன்னனவன் மந்திரியின் வீட்டிற்குத் திடீரென ஒரு சமயம் செல்லவே, மந்

திரி இந்து மதத்திற்கு மாருக உள்ள மேற்கு திசை வணக்கத்தை கண்டு ஏன் அங்கு நோக்குகின்ருய் என்ருன். அங்குள்ள பாம்பொன்றை நான் நோக்குகிறேன் என மனதில் பயங்கொண்டவனுய் பொய், மறுமொழி அளித்தான். அங்கு தெய்வச் செயலாய் பாம்பு ஒன்று புலனுகவே, மந்திரியினிடம் விசுவாச மதிகரித்து, தானும் தனது எல்லாப் பிரஜைகளுடன் இந்து மதத்தினின்றும் நீங்கினன்.

இங்ஙனம் அறியாமையினுலும், சீலமற்ற ஒழுக்கத்தாலும், பரஸ்பர போரினுலும், இந்து சமூகம் ஆதியில் மேற்கண்டவாறு அழிந்தது போல் இன்னம் அதோகதியாகின்றதென மனதிலே புலம்பினர்.

இங்ஙனம் நமது அறியாமையால் இன்னம் நாம் பாழாகிறேம் என்பதை நன்ருய் அறிவித்து, அன்னியர்கள் பலவந்தமாய்ப் போர் புரிந்து அழித்த இந்து சமூகத்தை விட்டு எங்ஙனம் நீங்கினர்கள் என்பதை அறிவித்து, அவர்களின் சில வஞ்சகச் செயல்களையும் விபரீதக் கொடுமைகளையும் பகிரங்கஞ் செய்தார்.

## மூர்த்தி பூஜை

மூர்த்தி பூஜையும் இந்து சமூகத்திற்கு ஸ்ரீ தயானந்தர் கூறுவது போல் பெரு பங்கத்தை விளைவிப்பது ஒரு புறமிருக்க, அதனுல் ஏழ்மை அதிகரித்து, உற்சாகம் அழிந்து தன்னம்பிக்கை தொலைந்து, விபசாரம் பெருகி, சண்டைகள் சிறந்து, ஒற்றுமை குலைந்து, புராணங்கள் அதிகரித்து, ஆண்மை அழிந்து, பெரும் நஷ்டம் இந்து சமூகத்திற்கு விளைகின்றதென எண்ணி மகாஜனங்களுக்கெல்லாம் அறிவித்தார். ஆதியிலே இந்தியாவின் கோவில்களிலுள்ள பொன் பொருளை பற்றுவதற்கே அந்நியர்கள்

நாட்டில் படை எடுத்தார்கள். அந்த போர்களே பலவந்தமாய் பல இந்துக்களை தர்மத்தினின்று நீங்கப் பெரு உதவியாயிருந்தது. மூர்த்தி பூஜை செய்து மனத்தின் வன்மை எல்லாம் குறைந்து இந்துக்களை மாதர்களாக்கி எந்த சண்டையிலும் பேடிகளாகச் செய்து விட்டதெனக் கருதினார்.

அந்நியர்களின் வஞ்சகச் செயல்களையும் அவர் விளக்கி ஒரு சம்பவத்தைப்பற்றிக் கூறுவதாவது :—

பாதிரிகள் கூற்று. பாதிரி யொருவன் வடமொழியை நன்றாய்க் கற்றான். பிராமணனைப் போல வேஷமணிந்து வாழ்க்கையையும் நடத்தலானான். நாட்டு மொழிகளிலும் தேர்ச்சி அடைந்தபடியால் அவனைப் பெரும் சன்னியாசி என இந்துக்க ளெல்லாம் புகழ்ந்து பூஜை செய்யலானார்கள். பேஸ்கி என்னும் இந்த வேஷதாரியை பிராமணன் எனவே மதித்து பெரிய சர்க்கார் பதவியு மளிக்கப் பட்டது. அந்தப் பதவியிலிருந்து இந்துக்களை அன்னிய மதம் சேர அவனால் முடியும் வரை முயன்றான்.

வேறொரு பாதிரி விலைமாதர்களிட மெல்லாஞ் சென்றும் கடவுளுக்கும் காமவடிவம் உண்டெனக் கூறி, அவர்கள் அனியாயமாய் சம்பாதிக்கும் பொருளில் ஒரு பகுதியைத் தனக்கு அளித்து விட்டால் பாவங்கள் நீங்குமெனக் கூறி அவர்கள் வழியாய் பல ஜனங்கள் பாதகக் குழியில் விழாமலிருப்பதற்கு, இந்து தர்மத்தினின்று அந்நிய மதத்திற்குத் திருப்பினான். மேற்குத் திசையிலே வேறு பாதிரி யொருவன் மாமிசத் துண்டுகளை நடுநிசியில் பிராமணர் வீட்டுக் கிணறுகளில் போட்டு விட்டு, இரண்டு மூன்று தினங்கள் சென்றதும் பகிரங்கமாய்த் தெருவில் மாமிசம் சலம் பருகிய பிராமணர்களாகையால் இனி இந்து

மதத்தை விட்டுவிட வேண்டுமென அவர்களுக்குரைத்ததன்னியில் அந்நிய இந்துக்களிடஞ் சென்று இவனை தர்மத்தினின்று நீக்கி விடவும் என படாடோபஞ் செய்து பல பாமரர்களை இந்து மதம் நீங்கச் செய்தான். இன்னம் சிறிய குற்றத்திற்கும் சாதியை விட்டு விலக்குவோம் எனக் கூறும் குறைகளை யெல்லாம் கண்டு அவைகள் மூலமாக வேறு மதத்திற்கு திரும்பினார்கள்.

சாதி மத பேதத்தினாலும், தீண்டாமை என்னும் பிசாசாலும் உயர்வு தாழ்வு என்னும் வேதாந்தத்தாலும், அடுப்பங்கரை சாஸ்த்திரத்தினாலும், குருட்டு ஆசாரத்தினாலும் பலர் இந்து மதத்தினின்றும் விலகினார்கள். பண்டிதர்களும் கோடிக்கணக்காய்ப் பொருளைச் சேர்த்து சுய நலத்தையே நோக்கமாகக் கொண்டு, உண்டு உல்லாசமாகி, பார்ப்பவர்களுக்கு வேஷ மணிந்து படாடோபஞ் செய்வதைக் கண்டு அறிஞர்கள் இநது மதத்திலேயே நம்பிக்கை நழுவி நாளடைவில் நாஸ்திகர்களாகி பிறகு வேறு மதம் புகுகின்றார்கள். ஆயிரக் கணக்கான பெண் மணிகள் இளங் கன்னிகைப் பருவத்திலேயே 'விதவை' என்னும் கரே மொழியைக் கண்டு, துன்பம் சகிக்க இயலாமல், சரணமடைந்தாலும் அபயமளிக்கும், வீரனையோ, பிரபுவையோ காணமல் அந்நிய மதம் சேர்கின்றார்கள்.

இனியாவது அவர்கள் அந்நிய மதம் சேராமலிருப்பதற்கு முயலவேண்டும். இக் குறைகளை யெல்லாம் கழிக்கப் பாடுபடவேண்டும் என எண்ணி, இந்து மகா சபையில் சேர்ந்து அதற்கேற்றப் பணிகளை எல்லாம் செய்தார்.

ஒரு உபாயம். இந்துக்களை ஒன்றாய் சேர்ப்பதற்கு என்ன செய்ய வேண்டும்? நாம் எங்கு சென்றாலும், அறி

ஞர்களான இந்துக்கள் பரஸ்பரம் ஒன்று சேரவும், பேசிக் கொள்ளவும், சந்தர்ப்பம் வாய்ப்பதில்லை. சமூக விஷயங் களைப்பற்றி பேசிக்கொள்ளவும் அவர்களுக்கு நிலயமும் இல்லை. காலமுமில்லை. வகுப்புவாரியான தேவாலயங்களி லும் ஒன்று சேர முடிவதில்லை. டில்லி, பத்தேபுரி, மசூதி யில் 25 அல்லது 30 ஆயிரம் ஜனங்கள் ஒன்று கூட லாம். ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூட மற்ற ஆலயங் களிலே சந்தர்ப்பமும் காலங்களுமுண்டு. நமது தேவால யங்களுக்கு நாம் சென்றால் அங்கு தோன்றும் மணியும் சத்தமும் அமைதியான ஈசனைத் தொழுவதற்கும் நமக்கு சந்தர்ப்பம் வாய்ப்பதில்லை. 25 ஆயிரம் ஜனங்கள் ஒன்று கூடுவதற்கான பெரிய நிலயம் ஒன்று கட்ட உத்தேசித்து ளேன். அங்கு, பகவத்கீதை, உபநிஷதம், ராமாயணம், மகா பாரதத்தினின்று உபந்யாசங்கள் செய்ய ஏற்பாடு செய்யவேண்டும். இந்நிலயமான மந்திரங்கள் அங்கங் குள்ள இந்து மகா சபையால் பரிபாலனஞ் செய்யப்பட வேண்டும். அங்கு ஜனங்களுக்கு குஸ்தியும் தேகப்பயிற்சி யும் கற்பிக்க உதவி அளிக்கவேண்டும். குலதெய்வங்களையும் சாதிக் கடவுள்களையும் நீக்கி, மாதுருவன்மையான கோ மாதா சரஸ்வதி அன்னை, பூமாதேவி உணர்வை உபாசிக்கப் பிரசாரஞ் செய்யவேண்டும். கோவில்களில் எல்லாம் பசு மாடுகளைப் போஷித்து, பால் தயிர் முதலியவைகளை அதிக மாக்கவும். காயத்திரி மந்திரத்தை எங்கும் எழுதி சரஸ்வதி உபாசனையை செம்மையாக்கலாம். பாரத மாதாவின் வடிவத்தைப் பெருமையாக்கி அத்தேவியின் குணத்தை எங் கும் புலனாக்கவேண்டும். இதைச் செய்தால் நாட்டில் இந் துக்கள் ஒன்று சேர்வதற்குச் சந்தர்ப்பம் ஏற்பட்டு, ஐசு வர்ய மதிகரித்து அறிவு விசாலமாகி, தேசியமும் தழைத்

தோங்கி, பாரத சமூகம் பெருமையுடன் மறுபடியும் எழுச்சியை அடையும்.

இந்த நோக்கத்தை நினைத்துத் தான் சுவாமிகள் இந்து சங்கதனம் அல்லது சேர்க்கை என்னும் இயக்கத்தைப் பெருகச்செய்து நாடெல்லாம் புது உணர்ச்சியையும் உற்சாகத்தையும் பெருகச் செய்தார்.

---

## அத்தியாயம் பத்தொன்பது.

### இந்து முஸ்லீம் ஒற்றுமை

இந்து சங்கதனம்—ஆரம்பம்—சங்கதனம் ஏன்—இந்து முஸ்லிம் ஒற்றுமை—ஒரு ஆதர்ச முஸ்லிம்.

இந்து சங்கதனம்—இந்து சங்கதனம் அந்நிய மதங்களை அழிப்பதற்காக நிறுவப்பட்ட ஒரு சபை. வேறு சமயத்திலுள்ளவர்களை முன்பின் அறியாதவர்களை இந்து சமூகத்தில் எந்த வழியினாலாவது சேர்ப்பித்து, இந்த தர்மமொன்றையே முடிவில் ஸ்தாபிப்பது இதன் நோக்கம். சுத்தி என்னும் மனதைப் புண்பண்ணும் சம்ஸ்காரத்தால் அந்நிய மதத்தவர்களை அனுசாரிகள் என பகிரங்கஞ் செய்வதே இதன் செயல். இந்துக்களைத் தவிர மற்ற பெரியார்களை யெல்லாம் நிந்தனை செய்வதே இதன் எண்ணம். வேறு மதத்திலுள்ள சிறு குழந்தைகளையும் பெண்மணிகளையும் ஏமாற்றி சுத்தி செய்து இந்து ஜனங்களை அபிவிருத்தி செய்வதே இதன் உத்தேசம். இதற்குக் காரணம் சுவாமி சிரத்தானந்தர். இதனாலேயே இந்து-முஸ்லீம் சச்சரவு அதிகரிக்கின்றது என சாதாரண ஜனங்கள் உரைப்பது வழக்கம்.

ஆதலால் இந்து சங்கதனமும் சுத்தி இயக்கமும் எங்ஙனம் உதயமாயிற் றென்பதைக் கூறுவோம்.

ஆரம்பம்—இந்துக்களெல்லாம் ஒன்றாய்ச் சேர வேண்டுமென்னும் நினைவு பாஞ்சால மாகாணத்திலேயே முதன் முதலாய்ப் புலனாயிற்று. வருடங்கள் தோறும் பாஞ்சால மாகாணத்திலேயே இந்து சபை கூடிற்று. இராஜீயக் கிளர்ச்சி உன்னத நிலையிலிருக்கும் வரை, கிலாபத் பிரச்னை முதன்மையா யிருக்கும்வரை, இந்து—முஸ்லிம்கள் பரஸ்பரம் நட்புடனேயே இருந்தார்கள். ஆனால் முஸ்தபா கமால் பாட்சா கிலாபத்தை அழித்ததும், தேசீயப் பெரும் நோக்கம் தொலைந்ததும் வகுப்பு வாதங்கள் தாண்டவமாட ஆரம்பித்தன. சுயநலவாதிகள் வகுப்பின் பெயரைச் சொல்லிக்கொண்டு பாமரர்களை தங்கள் பக்கம் திருப்பி தலைவர்களாக விரும்பினார்கள். கயாவில் 1923ம் வருஷம் இந்திய தேசீய காங்கிரசும், கிலாபத் சபை நடைபெறும்போதும் ஆக்ராவிலே மகா க்ஷத்திரிய சபையின் மகாநாடு அடியிற்கண்ட தீர்மான மொன்றை நிறைவேற்றியது.

மால்கானா என்னும் இராஜபுத்திரர்கள் இந்துக்களால் பறையர்கள்போல் கருதப்பட்டு, மகம்மதியர்களாலும் விலக்கப்பட்டு திரிசங்கு சுவர்க்கத்திலிருப்பதுபோலுள்ளார்கள். இந்துக்களைப்போல் பூநூலைத் தரித்து, தலையில் குடுமியுடன் மாமிசாகார மில்லாமலிருப்பதால், அவர்கள் விரும்பினால் நாம் அவர்களை ஆட்சேபணை யன்னியில் நமது சமூகத்தில் சேர்த்துக்கொள்வோம்.

ஆனால் இந்தத் தீர்மானம் எப்பொழுதும் நமது சபைகளில் நடப்பதுபோல் காகிதத் தீர்மானமாகவே இருந்தது

அப்பால் சபையில் பேசிய தலைவர்கள் எல்லாம் தூங்கச் சென்று விட்டார்கள். ஒருவரும் பல நாட்கள் வரை இதைக் கவனிக்கவில்லை. ஆனால் ஒரு இந்து வாரப் பத்திரிகையானது $4\frac{1}{2}$ லட்சம் மால்கானா மகமதியர்கள் எங்களை இந்துக்களாகச் செய்து விடுங்கள் என மகா சபைக்கு எழுதியதாகவும், அவர்கள் அதை ஒப்புக்கொண்டுவிட்டார்கள் எனவும் பகிரங்கமாய் பிரசுரஞ் செய்தது. உடனே மகம்மதிய நண்பர்கள் மனம் கலங்கி, நமது தர்மத்திற்கு விரோதிகள் கிளம்பிவிட்டார்கள் என எண்ணி பல பண்டிதர்களை அங்கு அனுப்பிவைத்து கிளர்ச்சி செய்யலானார்கள்.

அப்பொழுதுதான் இந்துக்களுக்கு ஏதோ நடப்பதாகத் தெரிந்தது. உடனே அரை டஜன் தொண்டர்கள் அங்கு சென்று உண்மைகளை எல்லாம் அறிந்து விஷயங்களை அறிவித்தார்கள். அப்பொழுது சிறிய கூட்டமொன்று கூட்டப்பட்டது. அதற்கு நானும் அழைக்கப்பட்டேன். இந்துக்களாக வாழ நாங்கள் விரும்புகிறோம் என எவர்கள் உரைத்தாலும் நாம் அதற்கு உதவியளிக்க வேண்டுமெனத் தீர்மானஞ் செய்தார்கள். பாரதீய இந்து சுத்தி சபை என நான் நாமகரணஞ் செய்தேன். என்னையே தலைவனாக நியமித்தார்கள். நானும் இதற்கு வேலைசெய்ய வேண்டுமென எண்ணினேன். மால்கானாக்களை சுத்திசெய்ய எண்ணுங்கால் நான் நினைத்ததாவது :—இந்த வீரர்கள் பெரும் விபத்துக்களுக்கிடையிலும் இந்து தர்மத்தினின்று நீங்கவில்லை. உண்மையில் நாமே அவர்கள் விபத்துக்களுக்கிடையே இருக்கக் காரணமாகையால் சத்தியமாய் சுத்தி என்பது நமக்கேயாகும் எனக்கூறி அடியிற்கண்ட விண்ணப்பத்தை அங்கத்தினர்களுக்கும் மற்ற இந்துக்களுக்கும் விளம்பரஞ் செய்தார் :—

சங்கதனம் ஏன்?—இந்து சமூகம் நாம் குறைவா யுள்ளதால் மரணமடைகிறது எனச் சொல்லவேண்டாம், நாம் சமூகமாக இன்னம் ஒன்று சேரவில்லையாதலால் நாம் இறந்து வருகின்றோம். தன்னந்தனி மனிதர்களாக நோக்கினால் நாம் உலகத்தில் எவர்களுக்கும் பின் வாங்குபவர்களில்லை. இந்துக்கள் இன்னும் ஒற்றுமை சூன்யத்தினாலேயே ஒழிந்து வருகிறோம்.

ஆயிரக்கணக்கான இந்துக்கள் வேறு மதங்களுக்குச் செல்லுகிறார்கள் நாம் இதுவரை தடுக்கவில்லை.

இனி இந்து மதமே சிறந்த மதம் எனச் சொல்லி மற்ற மதத்தினர்களை சேர்ப்பது நமது வேலையில்லை யாயினும் இந்துக்களாக விரும்புபவனுக்கு அபயமளிப்பது நமது கடமை என வற்புறுத்தி சுத்தி சங்கதன வேலையில் சிலகால மிருந்தார்.

இந்து முஸ்லிம் ஒற்றுமை—*இக்காலங்களில் முஸ்லிம் மதம் தாழ்மையான மதம் எனவோ, அதன் தத்துவங்களைப் பற்றியோ, அல்லது அவர்களின் குணங்களை இலேசாகவோ சுவாமிகள் ஒரு பொழுதும் கூறவில்லை.* முஸ்லிம்களிடத்தில் அவருக்குப் பிரியமுண்டு. அவர்களில் பல நண்பர்களுமுண்டு. அவர்களுடன் அன்புடன் வாழவேண்டுமென்பதே அவர் சிந்தனை. *முஸ்லிம் ஒருவன் மதத்தில் தனக்கு எந்தெந்த உரிமைகள் வேண்டுமென்றானோ அவ்வுரிமைகளெல்லாம் இந்துக்களுக்கும் வேண்டுமென்றார். தன்னிடமும் இந்து சமூகத்திலுள்ள பிழைகளையும், ஆரிய சமாஜத்தில் அவ்வப்பொழுது தோன்றும் பிழைகளையும், அவர் புகல அஞ்சாததுபோல், எல்லோருடைய பிழைகளையும் சில சமயங்களில் மகம்மதிய நண்ப*

களின் மாறான நிலைகளையும் கள்ளங்கபடமன்னியில் நேராகச் சொல்லிவிடுவார். இங்ஙனம் நேராகச் சொல்லுவது குற்றமென்றால் இவரை இக் குற்றத்தின் அதிபதி எனவே யுரைக்கவேண்டும். மகம்மதியர்கள் பசுவைக் கொலை புரிகிறார்கள். பசு என்பது இந்துக்களின் தெய்வம். ஆதலால் அவர்கள் பசு வதையை நிறுத்தும்வரை இந்துக்கள் மகம்மதியர்களுடன் சேரலாகாதென சிரத்தானந்தர் சொல்லியதாக சிலர் கருதுவார்கள். சுவாமிகள் அத்தகைய மொழிகளை எங்குமே கூறவில்லை. ஆனால் மகம்மதியர்களைக் காட்டிலும் ஐரோப்பிய துருப்புக்களுக்கு அதிகமாகப் பசுமாடுகள் தினந்தோறும் கொலைபுரியப்படுகின்றன. ஆயிரக்கணக்கான பசுக்கள் அங்ஙனம் கொலையாகுங்கால், இந்துக்கள் மகம்மதியர்கள் சில மாடுகளை தர்மத்திற்காக பலியளித்தால் ஏன் அதற்காகக் கோபஞ் செய்துகொள்ள வேண்டுமென விரும்புவார்.

ஒற்றுமைக்கு அவசியமானவைகள்—மசூதி முன் மேள தாளங்களினால் சண்டை விளைகின்ற தென்பதையும் அவர் அறிவார். மூர்த்தி பூஜையில் அவருக்கு நம்பிக்கை இல்லையாயினும் பகவானின் ஊர்வலத்தை முக்கியமாய் பக்தர்கள் மௌனமாய் ஜபஞ் செய்யுங்கால் உண்டாக்கும் சத்தத்தை அவர் அவசிய மன வற்புறுத்த வில்லையாயினும் அதை நிறுத்துவதற்கு துராக்கிரகத்தை ஜனங்களே அவர்களுக்குத் தோன்றியவாறு இரத்த பிரவாகம் பெருக்குவதைக்கண்டு அவர் விசன மடைவார். மகம்மதியர்களிடம் கள்ளங்கபட மன்னியில் நேர்முகமாக யாவற்றையும் செய்துவிடுவேன் என ஒவ்வொரு ஹிந்துவும் நினைத்தானேயானால் முஸ்லிம்கள் நம்மை மரியாதையுடன் நடத்துவார்கள்.

இந்துக்களுள் தாழ்ந்தோர்களும் சாதிவேற்றுமையும், புரோகிதப் பேதைகளும் பாழானல் இந்துமுஸ்லிம் பிரசினையே புலனுகாது.

யௌவன விவாகம், விதவாமணம், அனதாலயம், சேவாதனங்கள், கன்னியாலயம், பொது தேவாலயம், காயத்திரி இவைகளெல்லாம் அதிகரித்து விட்டால் வகுப்புச் சண்டைகள் புலனுகாது.

இந்துக்கள் அரபி உர்து பாஷைகள் கற்று மகம்மதியர் தமிழ் வடமொழி அறிந்தால் பரஸ்பர அறிவு பெருமையாகி மதவெறிச் சண்டைகள் தோன்ருது.

முஸ்லிம்கள் தமது பாரத நாட்டையே தாய் நாடாகக் கருதவேண்டும். எங்ஙனமிருந்தபோதிலும் நம்முடைய சுகதுக்கங்கள் இந்துக்களுடனேயே இணைந்திருக்கிறதென எண்ணி அவர்களே முதல் சகோதரர்கள் என கருதவேண்டும்.

இந்துமுஸ்லிம்கள் பரஸ்பரம் போர்புரிந்த போதிலும், மற்றவர்களுடன் சமாதானத்திற்குச் செல்லாமல் தாங்களே ஒரு திட்டத்திற்கு வரவேண்டும்.

இவைதான் அவர் சுருக்கமாய் இந்து—முஸ்லிம்களைப்பற்றி நினைப்பது.

ஒரு ஆதர்ச முஸ்லிம். அவர் கடைசிக் காலம் வரை தான் இளமைப் பருவத்தில் கலாசாலையில் கண்ட அடியிற் கண்ட ஒரு மௌல்வியைப்பற்றி எப்பொழுதும் கூறுவது வழக்கம்.

என்னுடைய கலாசாலையிலுள்ள மௌல்வி எந்த இளைஞர்களையும் “பாகுர்தார்” (சிரஞ்சீவி) எனவே மரி

யாதையுட னழைப்பார். கண்ணிய மொழியைத் தவிர வேறு எதையும் அவர் பிரயோகஞ் செய்து நான் கண்ட தில்லை. மௌல்விசாகிப் எங்கள் வகுப்பிற்கு வந்து விட் டால் நாம் சும்மாயிருக்க முடியாது. அங்ஙனமிருக்குங் கால் அவர் சற்று வெளியில் சென்ருலோ கேட்பானேன். எங்கும் கோலாகலமாய்விடும். உடனே வகுப்பிற்கு வந்த வுடன் காமதாப் பிரசாதனே! பெஞ்சியின் மேல் ஏறவும் என்பார். காமதா பிரசாதன் சிரித்துக் கொண்டே பெஞ் சியில் ஏறுவான். ஆனல் ஒருகால் நிலத்திலும் வேறு காலே பெஞ்சியிலும் வைத்தவனுய், சிறுவர் பிழை பெரிய வர் மன்னிப்பு சகஜம், என்பான். உடனே அன்பு வடிவ மான மௌல்வி சாஹிப் சிரஞ்சீவியே உட்காரவும் எனச் சொல்லி விடுவார். குழந்தைகள் என்ன பிழைகள் செய்தபோதிலும் அவர் மன்னிப்பது சகஜம். அவர் அன்பு வடிவத்தை நினைக்கும் பொழுதெல்லாம் இந்து—முஸ்லிம் சண்டையை சிந்தித்தால் என் மனம் புண்ணுகின்றது. இந்தப் புனிதமான பாரத நாடே இந்த இந்து முஸ்லிம் களைப் புலனுக்கிற்று. உணவும் ஜலமும் அளித்து அதுவே பாதுகாக்கின்றது. இந்து, முஸ்லிம், கிறிஸ்தவன் என வேற்றுமை பாராட்டாமல் இந்த கங்கை ஜல மானது சீதளத்தால் எல்லாருக்கும் இன்பத்தை அளிக் கின்றது என அவர் அடிக்கடி மௌல்வியைப் பற்றிக் கூறி, புவி பிரியுங்கால் மகம்மதிய வைத்தியர்கள் அவருக்கு உதவிக்கு வந்ததிலிருந்தே, எத்துணையோ மகம்மதியர்களும் அவரை நன்கறிந்திருந்தார்கள் என புலனுக்கிற்று. நாட்டி லுள்ள பெரும் மகம்மதிய தலைவர்கள் எல்லாம் அவர் புவி நீங்கிய பொழுது பெரும் துக்கம் பாராட்டியதே அவர்

மகம்மதிய சமூகத்தின் விரோதி இல்லை என்பதைக் காண்பித்தது.

அவர் ஏதோ விபரீதமாகவும், அன்னிய மதத்தினர்களுக்கு மாறாகவுமுளார் எனக் கருதுவதற்கு சில சம்பவங்கள் நடந்திருக்கின்றபடியால், எல்லா தர்மங்களைப் பற்றியும் தான் தோய்ந்துள்ள வைதீக தர்மத்தைப்பற்றியும் அவர் என்ன கூறியுளார் என்பதை நோக்குவது மிகையாகாது.

---

## அத்தியாயம் இருபது.

### எல்லா தர்மமும் வேதத்தினின்றே.

வேதமே புராதனமாகும்—ஏகதேவ உபாசனை—தேவர் யார்—தேவ இரகசியம்—பாரசீக தர்மம்—சீனவிலும் வேதமே—எகிப்து மதம்—யஹூதி தர்மம்—கிறிஸ்து மதம் யஹூதி தர்மமும் இஸ்லாமும்—முஸ்லிம் தர்மம்—புராண தர்மம்—மறுபடியும் வேதம்.

வேதமே புராதனமாகும்—வேதமே ஆதி நூலாகும் என மனுதர்மர் மொழிந்துளார். நாங்கள் வேதாமுத மென உபநிஷதங்கள் கூறும். வேதமே தத்துவங்களின் நிலைகளாகும். வேதங்களின் விபரீத விளக்கங்களே புராணங்கள் என சிலர் கூறுவர். மானிட சமூகத்தின் புராதன நூல் வேதமொன்றே என மோட்ச மூலர் கூறி குறைந்தது இயேசுநாதர் பிறக்க 500 அல்லது 1500 வருடத்திற்கு முன் தோன்றியிருக்க வேண்டுமெனச் சொல்லியுளார். மேக்டோனல்டு கிறிஸ்துவிற்கு இரண்டாயிர வருட முன்னரே இருந்திருக்க வேண்டுமென எண்ணினர். ஹௌச், ஹிவட்னி, வில்சன், கிரிபத் முதலிய வெள்ளை வடமொழி

அறிஞர்களும் குறைந்தது கிறிஸ்துவின் 2000 வருடமுன்னரே வேதம் விளங்கிற்று என நிரூபணஞ் செய்துளார்கள். ஜைகோபி வேதம் தோன்றி சுமார் 5000 வருடங்களாயிற்று எனச் சொல்லியுளார். பால கங்காதர திலகர் வான சாஸ்திர கணிதத்தால் வேதம் தோன்றி 8000 வருடமாயிற்று என பகிரங்கஞ் செய்துளார். ஸ்ரீ தயானந்தர் உலக சிருட்டியின் ஆதியிலேயே அது தோன்றிற்று என இலட்சக் கணக்கான வருடங்கள் என அவர் கணித்துளார். புவியிலுள்ள எந்த நூலும் இதற்குமுன் தோன்றவில்லை. பார்சிகளின் தர்ம நூலான ஜிந்தாவஸ்தை புலனாகி 3800 வருடங்களே யாயிற்று. பைபில் எழுதப்பட்டு இரண்டாயிர வருஷங்களுக்கு அதிகமாகவில்லை. திருக்-குர்-ஆன் தோன்றி 1500 வருடங்களுக் கதிகமில்லை. ஆதலால் வேதத்தைக் காட்டிலும் புராதன நூல் ஒன்றுமே இல்லை.

ஏகதேவ உபாசனை—வேதத்திலே பற்பல தேவோபாசனைக ளிருப்பதாகவும், ஏகதேவ சித்தாந்தத்தை அது அனுமதிப்பதில்லை எனவும் சிலர் எண்ணுவார்கள். ஆனால் அடியிற்கண்ட வேதமொழிகள் அதன் உண்மையைப் புலனாக்கும்.

ஒரே ஆன்மாவானது அகிலமெல்லாம் நுழைந்து பல வடிவங்களுக் கேற்றவாறு பல வடிவங்களுடன் புலனாவதுபோல், ஒரே தலைவன் எல்லாப் பொருள்களிலும் அகத்தான்மாவாகி பற்பல வடிவங்களாய்த் தோன்றி புறத்திலேயே யுளான்.

ஒரே காற்றானது ஜகமெல்லாம் நுழைந்து வடிவங்களுக்கேற்றவாறு பற்பல வடிவங்களாகப் புலனாகின்

றது. அங்ஙனமே, ஒருவன் எல்லாப் பொருள்களிலும் அந்தரான்மாவாகி, உருவங்களுக்கேற்றவாறு பற்பல வடிவங்களாகி புறத்திலேயுளான்.

சூரியனானவன் எல்லா சகங்களின்கண் போலாவன். ஆனால் கண்களின் குறைகளால் அவன் பாதிக்கப்படுவதில்லை. அங்ஙனமே எல்லாப் பொருள்களின் உள்ளங்களில் அசைந்துள்ள ஒரு தலைவன் ஜகங்களின் துன்பங்களால் பரிசமாவதில்லை.

தேவர் யார்? ஆனால் வேதத்திலே ஒரு தேவ உபாசனையை வற்புறுத்தி யிருந்தும், ஏதோ சிறிய பிழைகளால் பல தெய்வங்களை உபாசிக்க வேண்டுமென மறைகளில் மொழிந்துள்ளதாக பலர் எண்ணுகிறார்கள். அங்கு தேவர் என்னும் மொழியானது பற்பல உரைகளுடன் மொழிந்துள்ளபடியால் சாதாரண ஜனங்களிடம் இக்கலவரம் ஏற்பட்டுவிட்டது.

வேதத்திலே சில மந்திரங்களையும் தேவர் என்னும் பெயரால் அழைப்பார்கள். அம்மந்திரங்களால் நாம் சில உண்மைகளை அறிவதால் அம்மந்திரங்களுக்கு தேவர்கள் எனப்பெயர். பற்பல மந்திரங்கள் உண்டு. அதனால் அநேக தேவர்கள் என வேத முரைக்கும்.

சாதாரணமாய் மகா ஜனங்களுக்கு உதவும் எப்பதார்த்தங்களையும் தேவர்கள் என அழைப்பது வழக்கம். நிலம், நீர், தீ முதலியவற்றால் ஜகமெல்லாம் சிறப்படைகின்றபடியால், அவைகளை தேவர்கள் எனக் கூறும். சிற்சில இடங்களில் சந்தர்ப்பங்களுக் கேற்றவாறு, தாய், தந்தை, ஆசாரியன், பெரும் அறிஞன், ஒழுக்கமுள்ளவனையும்

தேவர் எனக் கூறும். இவர்களால் ஜன சமூகம் செம்மை யாகின்றபடியால் தேவர்கள் எனப் பெயர்.

சூர்யன், சந்திரன், நட்சத்திரம் முதலியவைகளும் தேவர்கள் எனப்படும். ஏனெனில், அவை பூவுலகில் உள்ளவைகளுக்கெல்லாம் உபகாரஞ் செய்கின்றன.

நமது தேகத்திலுள்ள கண், காது முதலிய புலன்களை யும் தேவர்கள் என அழைப்பார்கள். அவைகளால் நாம் ஒளி, ஒலி முதலியவைகளை அனுபவிக்கின்றோம்.

33 தேவதைகள் என சாதாரணமாய்ச் சொல்வது சக ஜம். அனல், நிலம், காற்று, ஆகாசம், ஆதித்தியன் வானம், சந்திரன், நட்சத்திரமான எட்டு வசுக்களையும் பிராணன், அபானன், வியானன், சமானன், உதானன், கூர்மன், கிருகவன், தேவதத்தன், தனஞ்ஜசயன், ஜீவாத்மா வான பதினொன்று உருத்திரர்களையும், 12 ஆதித்தியர்களை யும் (பத்து புலன்கள்) உணவு, சுவாசம், ஜீவான்மா, பர மான்மாவையே 33 தேவர்கள் எனப்படுவது.

பரமனைத் தவிர வேறு தேவர்களை யெல்லாம் உபா சனை செய்ய வேண்டுமென எங்கும் கூறவில்லை. வேதத் திலே இந்த தேவதைகளைப் பற்றி கூறியிருந்தபோதிலும் அவைகளெல்லாம் தெய்வமென எங்கும் மொழியவில்லை. பரமன் ஒருவனே மகாதேவன். அவன் யாவற்றிற்கும் ஆன்மாவாவன். மனிதர்கள் அவனை உபாசிப்பதே உசித மாகும். பரமனைத் தவிர வேறு எதையாவது உபாசிக்க வும் என்றால் நீ துக்கமும் துன்பத்தையும் அடைய விரும் பினால் அங்ஙனம் உபாசிக்கலாம் என மறுமொழி அளிக்க வும். ஆனால் ஈசனை உபாசிப்பவன் சதாகால சந்தோ

ஷத்திலிருப்பான். ஈசுவர சிந்தனையைச் சாதாரணப் பொருள்களில் இணைப்பவன் ஒன்றையும் அறிவதில்லை. அவன் அறிஞர்களின் நடுவே மிருகத்தைப் போலாவ னென சதபத பிராமணம், கர். 14. அ: 4 கூறும்.

இனி பரமன் தேவர்களைப்பற்றி புராணங்களில் புகன்றுள்ள தத்துவத்தை நோக்குவோம்.

தேவ இரகசியம்—சூரியன் மனிதனைப் போலாகும். அவனுக்கு ஒளி எனவும் உஷை எனவும் இரு பெண்க ளுண்டு எனச் சொல்வார்கள். சூரியனால் ஒளி செம்மை யாவதால், ஒளியை சூர்யனின் பெண் எனவும், சூரியோத முன்னரே கதிரவனால் செந்நிறம், வானமெல்லாமாவதால், அதையும் சூரியனின் பெண் உஷை என அழைப்பார்கள். பூமியையும் சூரியனின் பெண் எனச் சொல்லுவதுண்டு. ஏனெனில் சூரியனாலுண்டான மேகம், ஜலங்களினின்று பூமி புலனாகும்.

அந்த பூமியில் மறுபடியும் சூர்யனானவன் மழை என் னும் வீர்யத்தால் கர்ப்பத்தை ஸ்தாபனஞ் செய்வதால், புல் பூண்டு என்னும் புத்திரர்கள் தோன்றுகிறார்கள். இக் காவ்யாலங்காரமான அமுத மொழிகளை பாமரர்கள் அறிவ தற்கு எனவோ புராணங்களில் சூரியனான சிறந்த தந்தை தன் பெண்ணோடு கலந்தான் எனக் கூறும்.

தேவலோகத்திலே தேகமுள்ள தேவேந்திரன் என் னும் ஒரு தலைவனிருந்தானாம். அவன் கௌதமரின் மனைவி யோடு நட்புடனிருந்தான். அதை கௌதமர் அறிந்து அகல்யையை கல்லாக மாற்றி ஸ்ரீராமர் உன்னை விடுதலை செய்வார் எனக்கூறி, தேவேந்திரன் தேகமெல்லாம் கண்க ளாகும் வண்ணம் சபித்துவிட்டார் என இராமாயணம் கூறும்.

ஆனால் வேதத்தை உற்று நோக்கினால், இயற்கையின் வனப்பை இன்பமாய் மொழிந்துள்ள அமுத மொழிகளை இதிகாசத்தில் திரித்துக் கூறியிருப்பதென நன்கு புலனாகும்.

சூரியனுக்கு இந்திரன் எனப் பெயருண்டு. அகல்யை என்றால் இராக் காலத்திற்குப் பெயர். சந்திரனுக்கே கௌதமன் எனவும் கூறுவதுண்டு. ஏனெனில் சந்திரனும் இரவுமானந்தமாகி சகத்திற்கு இன்பத்தை அளிக்கிறார்கள். கௌதமன் என்றால் அதி துரிதமாய்ச் செல்லுபவன் என்பவனாகும். சந்திரன் துரிதமாய்ச் செல்வதால் அவனுக்கு கௌதமன் எனப் பெயர். இரவு என்பது பகல் மறைவது என பொருளைக் கொண்ட அகல்யை என்னும் வடமொழிப் பதமாகும். சூரியன் என்னும் இந்திரனானவன் சந்திரன் என்னும் கௌதமனின் மனைவியான இராக் காலத்தைப் பங்கஞ் செய்து விடுகிறான். இவ்வழகிய உபமானாலங்காரத்தையே புராணங்களில் உளறுகிறார்கள்.

மறுபடியும் வேதசாரம் எனக்கூறும் புராண பொய்க் கதை யொன்றை நோக்கலாம்.

விருத்திராசூரன் என்னும் பிரும்மாவின் மகனானவன் தேவேந்திரனை அடித்துத் துரத்திவிட்டான். தேவர்கள் எல்லாம் கதி கலங்கினார்கள். அவர்கள் மகா விஷ்ணுவை சரணமடைந்து அவர் பாதங்களில் சரணமானார்கள். அவர் நான் கடல் நுரையிலே ஒளிந்து கொள்ளேன். நீங்கள் கடல் நுரையைப்பற்றி விருத்தாசூரனை எதிர்க்கவும். அவன் மரிப்பான் எனக் கூறினாராம்.

வைதீக வடமொழியிலே விருத்திரன் என்றால் மேகத்திற்குப் பெயர் என நிருக்தம் கூறும். மேகம் வளர்ந்து

வானமேலா மளாவி இந்திரனை சூரியனைமறைத்து அரசு சூபுரியுங்கால் சகத்திலுள்ள சீவர்களேல்லரம் மகாவிஷ்ணுவான சூரியனை நாடுகிருர்கள். அவன் உஷ்ணத்தால் மேகத்தைத் தாக்கி இடி, மின்னல் முழக்கமாகி, பெரும் போரை புலனுக்கி கடைசியிலே விருத்திராசூரன் என்னும் மேகம் கோல்லப்படுவோன். விருத்திராசூரன் மாயமாய் எங்கும் சென்று மறைந்திருப்பதால், தேவர்கள் என்னும் கிரணங்கள் கடல் நுரையை நாடி அதை பற்றியவுடன் ஜலமேல்லாம் ஆவியாகி மாயமாய் மறைந்த விருத்திராசூரன் மேகமாய் மறுபடியும் புலனுகின்றுன். சூரியன் என்னும் மகாவிஷ்ணு அவனை உதைத்து கீழே தள்ளுகிருன். மகா ஜனங்க ளேல்லாம் அசுரர் அழிந்தார்கள் என்னும் ஆனந்தமாகி, மழையால் எங்கும் மகிழ்ச்சியுண்டாகுன்றது. *இந்த அற்புதமான மொழிகளை புராணங்கள் விபரீதமாகக் கூறும்.*

*தேவாசுர சண்டைகள் நிரந்தரமாய் நடப்பதாகவும், இராட்சதர்களின் புரோகிதன் சுக்கிராசாரியன் எனவும், தேவகுரு பிரகஸ்பதி எனவும், இவர்கள் உதவியை பெற்று பெரும் போராட்டங்கள் நடைபெற்றதாக, பெறுவதாக புராணங்கள் கூறும்.*

*இவைகள் எல்லாம் உபமான அலங்காரமென முன்னரே கூறிவிட்டோம்.* மேகக் கூட்டங்கள் அசுரர்களுக்குப் பெயர். சூரிய கிரணங்களேல்லாம் தேவர்களாகும். அறிஞராயிருந்து நல்லோழுக்க முள்ளவர்க ளேல்லாம் தேவர்கள். *அறிவிலியாகி ஒழுக்கமற்றவர்களெல்லாம்* அசுரர்கள்.

*மாந்தர்களின் மனதும்* ஞானேந்திரியங்களும் தேவர்

கள் எனப்படும். இங்கு மனது மன்னனவன். இந்திரியங்கள் சேனைகளாகும். புலன்களேல்லாம் அசுரர்களாகும். புலன்களின் தலைவன் பிராணனவன். அபானதிகள் அவன் வீரர்களாகும். மனத்திற்கும், புலன்களுக்கும் தினந்தோறும் சண்டை நடைபெறுகின்றன. சில காலத்தில் அசுரர் ஜயிக்கலாம்; சில காலம் தேவர்கள் தலைமைப் பதவியைப் பெறலாகும்.

ஒளியை தேவன் எனவும் இருளை அசுரன் எனவும் சொல்வதுண்டு.

சுக்ல பட்சம் தேவர்கள்; கிருஷ்ண பட்சம் அசுரர்களாகும்.

உத்தராயணம் தேவர்கள்; தட்சிணயணம் அசுரர்கள். இவைகளின் போராட்டங்களையே தேவாசுர சண்டை என வேதங் கூறும்.

ஆதியிலே காச்யபர் என ஒரு தேவர் இருந்தாராம். அவருக்கு 13 மனைவிகளுண்டாம். அவர்களிட மிருந்தே இப்புவியிலுள்ள சராசரங்களெல்லாம் சிருஷ்டியாயிற்று என்பார்கள். ஆனல் காச்சியபர் என்றல் ஈசனுக்கும் பெயர். அவர் உதவியினலேயே உலகம் தோன்றிற்று. இத்தகைய தேவதைகளை உபாசனை செய்ய வேண்டுமென வேதம் கூறவில்லை.

ஆனல் பிருகிருதியில் புலனகும் மேற்கண்ட விளக்கங்களையுள்ள வேதத்திலே கர்மகாண்டம் என செயலின் சிறப்பைக் காட்சியாக்கும் அற்புத அமுத மொழிகளை ஸ்ரீ தயானந்தர் மொழிவது போல் ஒவ்வொருவனும் அவ்வானந்தாமுகத்தைக் கொள்ளை கொண்டு போக வேண்டு

மெனவே அவர் சதா காலமும் எண்ணினர்.

நீங்கள் இணைந்து செல்லவும், நீங்கள் ஒன்றாய் மொழியவும், நீங்கள் ஒரு நினைவுடனுக வேண்டும்.

(ருக். 8. அ. 8. ம. 2)

வேதத்திலிருந்து பிராம்மணமும், உபநிஷதமும் உதயமாகி, பிராம்மணத்தினின்று கர்மசாஸ்திரம், பாஷ்யமும் ஸ்மிருதியும் தோன்றி, அப்பால் புராணங்களும் சம்ஸ்காரங்களும் புலனயிற்று. உபநிஷத்திலிருந்து ஞான சாஸ்திரம், வைசேஷிகம், நியாயம், சாங்கியம், வேதாந்தம், பௌத்தம் நாஸ்திகம் தோன்றிற்று. இவைகளிலிருந்தே பூமண்டலத்திலுள்ள எல்லா தர்மங்களும் புலனயிற்று. கிரேக்க தேசத்திற்கு இந்தியாவிலிருந்தே வேதாந்தமும் போதாந்தமும் சென்றன. கிரீக் நாட்டிலுள்ளவர்கள் பாரத தேசத்திலுள்ள மன்மதனையே உபாசனை செய்யலானார்கள். வேதத்திலுள்ள இயற்கை வனப்பின் அழகிற்கு வடிவளித்து அவைகளையே மூல புருஷர்களாகவும், தேவர்கள் எனப்படும் சில பிரகிருதியின் குணங்களுக்கு உருவமளித்து உற்சாகமாய் கொண்டாடி குதூகலமானார்கள்.

பாரசீக தர்மம். பிறகு பாரசீக தர்மத்தை கவனிப்போம். பாரசீக தர்மம் வேதத்தின் சாயையென அறிஞர்களான ஜோன்ஸ், மோட்ச மூலர், ஹாக் முதலியவர்கள் கூறியுளார்கள். ஜந்த வஸ்தையிலுள்ள மொழிகளெல்லாம் வடமொழியினின்று திரிந்தவைகளே.

வைதீக தர்மத்திலே நான்கு வர்ணங்களுண்டு; பாரசீக தர்மத்தில் புரோகிதன், சாரதி, குடியானவன், தொழிலாளி என நான்கு வகுப்புக்களுண்டு.

வைதீக தர்மத்தில் கூறியுள்ள தேவர்களை யெல்லாம்

ஜந்த வஸ்தை என்னும் நூலில் காணலாம். அந் நூலில் 33 தேவதைகளைப்பற்றி விஸ்தாரமாய்க் கூறும்.

பார்சி தர்மத்தில் வைதீக தர்மத்தைப்போலவே யக்ஞத்தின் மகிமையை யுரைக்கும் நூல்கள் சந்தனக் கட்டையால் ஔபாசனஞ் செய்ய வேண்டுமெனவும் சொல்லும்.

பாரசிகளும் பிராமணர்களைப்போல் பூநூல் தரிக்க வேண்டும். கோமாம்சம் புசிப்பதும் குற்றமாகும். புனர் ஜன்மத்திலும் அவர்களுக்கு விசுவாச முண்டு. வேதோபநிஷத்தில் விளக்குவது போல் பார்சிகளின் புனித நூல்களிலும் சிருட்டியைப் பற்றிக் கூறும். ஆதலால் பாரசிகள் புராதன பிராம்மணர்கள் எனவும், அத்தர்மம் வேறு மொழியில் எழுதப்பட்டதேன்றும், சற்றுத் திரிந்த வேதமென்றும் சுவாமிகள் கருதினர்.

சீனாவிலும் வேதமே. இருப்பது ஒன்று; ஆனால் அதை அநேகமா யுரைப்பார்கள் என்பது வேதம். சூ. கிங் என்னும் சீன நாட்டு அறிஞரும் தான் அதையே அறிந்துள்ளதாகக் கூறியுளார். சீனாவிற்கு இந்தியாவி லிருந்து பௌத்தமதம் சென்றதென்பது யாவரும் அறிந்த விஷயம். பூ. ஹாஷி என்னும் சீன நாட்டு அறிஞர் ஒருவர், யக்ஞத்தின் மகிமையையும் தேவ பூஜையின் அவசியத்தையும் 2600 வருடங்கள் முன்னரே வற்புறுத்தியதாகத் தெரிகிறது. சுருங்கச் சொல்லில் பாரத நாட்டு வேதங்களினின்றே சீனநாடு பல உண்மைகளை அறிந்துள்ளதென சரிதைகள் சொல்லும்.

எகிப்து மதம். ஆதிகாலத்தி லிருந்த எகிப்து நாட்டிலும் வெகு காலம் வரை உண்மையான வைதீக உபா

சனேயையே செய்து கொண்டு வந்தார்கள். புராதன எகிப்தைப் பற்றி டாக்டர் பஜன் கூறுவதாவது :—

புராதன எகிப்தின் தர்மநூல்களைப்படித்தால் அடியிற்கண்டவாறு உங்களுக்குப் புலனுகும். சுவயம்புவாய், அமுதமாய் சூட்சுமமாய் சர்வஞ்ஞராய் சர்வ சக்திமானுய், அறியப்படாதவராய், மூவ்வுலகநாதனுய், வானம், கடல், ஆண், பேண் பசு பட்சி, மீன், பாம்பு மிருகம், மரம்சேடி முதலியவைகளை சேய்தவராய், சூட்சமப் பிராணிகளை உற்பத்தி சேய்பவனுய், தன்விருப்பத்தையும் அமுதமோழியையும் நிறைவேற்றிய பக்தர்களைப் புலனுக்கினவனுயுள்ள ஒரே கடவுளை எகிப்துவாசிகள் பூஜை சேய்தார்கள்.

கற்களில் அவரைச் சேதுக்கமுடியாது. தேற்கு வடக்கே தேளிவாகும் ஆபரணங்கள் அமைந்த கிரீடங்கள் தரித்துள்ள மூர்த்திகளில் அவரைக்காண்பதரிது. மறைவிலுள்ள மன்னனை புறத்தில் புலனுக்க முடியாது. அவன் இருக்கும் நிலையை நாம் அறியோம். கும்பாபிஷேகம் சேய்யப்பட்ட கோவில்களிலும் அவன் காண்பதில்லை. அவன் எல்லையைக் கட்டுப் படுத்தும் நிலயமே இல்லை. அவன் வடிவத்தை உன் மனத்தால் தியானஞ் செய்ய முடியாது.

இவைகளை யெல்லாம், இம்மொழிகளுக்கு முன் மலர்ந்த அடியிற்கண்ட வேதாமுதத்துடன் சிந்தனை செய்யவும்.

ஈசனின் குணத்தைப் பற்றி யஜுர்வேதம் கூறுவதாவது :—

ஸபர்யகா சுக்கரம் அகாயம் அவிரணம், அஸ்னுவிரதம் சுத்தம் அபாபவித்தம், கவிர்மனீஷீ, பரீபூ.

சுவயம் பூர்யாதாதத்யதோ அர்த்தான் வியதாத் சாசுவ தீப்ய: சமாப்பிய:—(யஜு 40. 8.)

பரமான்மா எங்கும் நிறைந்தவன், தேகமில்லை, காயத்திலே தழும்பு ஆகாதவன், நாடி நரம்புகளினின்று நீங்கியவன். புனிதன், பாபத்தின் அணுவுமில்லை. சத்தியம் ஞானத்தை அறிவிப்பவன், அறிஞன். சாட்சி. தானாகவே தோன்றியவன், எல்லாப் பொருள்களையும் புலனுக்குபவன்.

"நதஸ்ய பிரதிமா அஸ்தியஸ்ய நாமமகத்யச:"

மேன்மையான கீர்த்தி யுடன் கூடிய அவனுக்குச் சமானமான மூர்த்தியே இல்லை.

எகிப்திலுள்ளவர்கள் வேதோபாசனையான ஒரு தெய்வத்தைப் பூஜை செய்யும்வரை அவர்கள் உன்னத நிலையிலிருந்தார்கள். ஆனால் வைதீகோபாசனையை விட்டு பல தேவ பூஜை ஆரம்பித்தவுடன் கீழே விழலானார்கள்.

புனர்ஜன்மத்தையும் அவர்கள் நம்பியிருந்தார்கள். ஆனால் அவர்கள் யாவற்றையும் வேதத்திலிந்தே கற்றார்களென டாக்டர் பஜ் புகன்றுளார்.

பௌத்த தர்மத்தையும் எடுத்துக் கொள்வோம். பிராமணர்கள், வேதம் என்னும் பெயரால் பல அநியாயங்கள் செய்யத் துணியவே கௌதமர் அதை அழிக்க முயன்றார். அவர் பாரத நாட்டில் பிறந்து வளர்ந்து இறந்தவராவர். நாட்டிலுள்ள எந்த தர்மத்தினிடமும் அவர் போர்புரிய வில்லை. ஜனங்களைச் சிறப்புடனாக்க புத்தர் தோன்றினரே யன்றி தர்மத்தை அழிக்க வரவில்லை. "நான் புதிய தர்மத்தை ஸ்தாபித்

தேன்" என அவர் எங்கும் புகலவில்லை. சுயநலவாதிகளே "இவன் ஏதோ புதியதைச் சொல்லி ஏமாற்றுகிறான்" என சொன்னார்கள். விதண்டா வாதம், குதர்க்கம், ஆடு மாடு பலி முதலியவைகளை யெல்லாம் ஒழித்து சங்கங்கள் நிறுவி வேதத்தில் சொல்லிய (ஓம் சஹநாவவது சஹநௌ புனக்து....) என்னும் மொழிகளுக்கேற்றவாறு ஒன்றாயிருப்போம் ஒருமையுடன் புசிப்போம் என்பதையே அனுபவத்திலாக்கினர். அரசன் இல்லை எனவும், வேதம் வேண்டாம் எனவும் அவர் எங்கும் சொல்லவில்லை. ஒருவேளை வேதத்தை இலேசாய் மொழிந்திருந்த போதிலும் ஸ்ரீ கிருஷ்ணனும் வேதத்தைச் சற்று கடிந்து பேசியது போலாகும். ஏனெனில் அக்காலத்தில் வேதமென்னும் பெயரால் பற்பல அநியாயங்கள் செய்யப்பட்டன. பௌத்தரின் உபதேசங்களெல்லாம் யம நியமமான, அகிம்சை, அஸ்தேயம், சத்தியம், பிரும்மசர்யம் முதலியவைகளே யாகும். வேத தர்மம் கேவலம் மொழிகளாலேயே இருந்ததால் கிரீடாம்சையில் செய்த பாக்கியம் புத்த பெருமானுக்கேயாகும்.

புத்த தர்மத்தினின்றே பிற்காலத்தில் யஹூதியம், கிறிஸ்தவம், மசம்மதியம் தோன்றிய தெனலாம். கிறிஸ்துவின் 500 வருடங்கள் முன்னரே யஹூதிமதம் புலனாயிற்று. கிறிஸ்து மதம் தோன்றி சுமார் 1930 வருடமாகின்றது. கிறிஸ்துவிற்கு 570 வருடத்திறகுப் பிறகே மகம்மதிய மதம் எனலாம்.

யஹூதி தர்மத்தையும் பார்சிகள் தர்மத்தையும் பற்றி டாக்டர் ஸ்பீகல் கூறுவதாவது:—பார்சி தர்மத்தை ஸ்தாபனஞ் செய்த ஜூர்துஸ்தர் ஆர்யனிம் பீகா என்

னுமிடத்தில் பிறந்தார். அவர் வைதிக தர்மத்தை அந்த நாட்டுக் கேற்றவாறு உள்நாட்டு மொழியில் பிரசாரஞ் செய்திருக்கலாம். அதே காலத்தில் யஹூதி தர்மத்தின் ஸ்தாபகர்களில் ஒருவரான அப்ரஹமும் ஜர்துஸ்தரோடு ஜீவித்திருந்ததாகத் தெரிகின்றது. அதனுல் பரஸ்பரம் சம்பந்த மேற்பட்டிருக்கலாம்.

இல்லேயேல் கிறிஸ்துவிற்கு 500 வருடங்கள் முன் ஈரான் மன்னனுன ஸைரஸ் என்பவன் பாபிலோனியா என்னும் சாம்ராஜ்யத்தை அழித்து பல யஹூதியர்களேக் கைதி செய்து ஜரூஸலத்தில் பிறகு இடமளித்தான். அப்பொழுது தான் யஹூதி தர்ம நூல்களே மறுபடி எழுதினுர்கள் என சரித்திரங்கள் கூறும். அதனுல் ஈரானில் முதன் முதலாய்த் தோன்றிய பார்சீ தர்மத்தினின்று சில உண்மைகளேக் கவர்ந்தது சாத்தியமாகவே இருந்திருக்கலாம்.

பார்சீ தர்மத்திலே புவியில் இரண்டு சக்தி யுண்டு. நன்மை எனவும் புன்மை எனவும் அது விளக்கும்.

யஹூதி தர்மத்தில் கடவுள் எனவும், சைதான் எனவும் சமபலமுள்ள இரு சக்தியுண்டு. பார்சீ தர்மத்தில் பாவத்தைப் பாம்பு என்பார்கள். யஹூதி தர்மத்தில் சைதானே பாம்பு வடிவ மேன்பது.

இவைக ளெல்லாம் தேவாசுர சண்டையின் புதுத் தோற்றங்களே யாகும். யஹூதியர்கள் பார்சிகளிட மிருந்தே யாவற்றையும் கற்றுர்கள் என சர்வமதத்தின் ஊற்று நீர் என்னும் அற்புத நூலில் காணலாம்.

பார்சி யஹூதி தர்மங்களில் சிருட்டிக்கு ஆறு தினங்களாயிற் றெனக் கூறும். சுவர்க்கம் நரகத்தைப்பற்றி

இரண்டு தர்மங்களும் ஒன்ருகவே கூறும். பரமான்மாவானவர் ஜர்துஸ்தருக்கும், மோசேயிக்கும் மலையின் உச்சியிலேயே உபதேச மளித்தார்.

இதனுல் யஹூதி தர்மத்தின் ஆதி மூலம் வேதங்களே என ஆராய்ச்சி செய்பவர்களுக்கு இன்னம் அதிகமாய் புலனுகும்.

## கிறிஸ்து தர்மம்

யஹூதி தர்மத்தினின்றே கிறிஸ்தவ தர்மம் தோன்றிற்று என யாவர்களும் அறிவார்கள். இயேசுநாதரும் யஹூதியே யாகும். நான் புதியதாய் ஒன்றையும் கோண்டு வரவில்லை, பழைய ஏற்பாட்டை புதிப்பிக்கவே நான் வந்துளேன் எனப் புகன்றுள்ளது இதன் உண்மையை விளக்கும்.

கிறிஸ்து என்பவர் ஒருவர் இல்லை எனவும், அவர் பிற்காலத்தில் மித்திய புருடராகக் கற்பிக்கப்பட்டவர் எனவும் சில வெள்ளை அறிஞர் கூறுவார்கள். அதைப்பற்றி நாம் கவலைப்படவில்லை. ஆனுல் அந்த தர்ம நூல்களை ஒப்பிட்டுப் பார்ப்பதில் மோசம் வந்து விடாது. ஒரு வேளை கிறிஸ்து கற்பிக்கப் பட்டிருந்தால் கௌதம புத்தரின் சரிதையை அவர்கள் சிந்தித்திருக்க வேண்டும்.

1. கௌதம புத்தர் சனிக்குங்கால் அறிஞர் ஒருவர் அரண்மனையை நாடி பெரியவர் ஒருவர் பிறக்கப் போகிருரெனப் புகன்ருராம். கிறிஸ்து பிறக்குங்கால் ஜரூஸலத்திற்கு அப்பாலிருந்து அறிஞர் ஒருவர் தோன்றி யஹூதிகளின் மன்னனுகப் பிறந்தவன் எங்கு என விசாரித்தாராம்.

2. புத்த பகவான் புவியின் துக்கத்தைக் கண்டுதான்

தப்பிப்பிழைதார். கிறிஸ்து சைதானைக் கண்டு அவனிட மிருந்து விலகினர்.

3. ஸ்ரீ. கிருஷ்ணனைப் போல் கிறிஸ்துவும் சிறிய குடிசையில் பிறந்து அவரைப் போலவே வாக்கை நடத்தி னர். ஒரு வேளை கிருஷ்ணன் பெயரே திரிந்து கிறிஸ்து என அழைக்கப்படலாம் என வெள்ளைச் சரித்திராசிரியர் ஒருவர் கூறியுளார்.

4. கிறிஸ்து கானகத்தில் 40 தினங்கள் கழித்தார். ஆனால் அவருக்கு 600 வருடங்கள் முன்னர் 49 தினங் கள் கௌதமர் உபவாசமாகி தியானத்தில் தோய்ந்திருந் தார். உபவாசங் கழிந்து புத்தர் காசிமா நகரஞ் சென் றார். கிறிஸ்து கானகம் நீங்கி கைலிலிக் கடலோரம் நடந் தார். இருவர்களும் பிறகு தர்மப் பிரசாரஞ் செய்தார்கள்.

5. இருவரும் அற்புதத்துடன் பிறந்தார்கள். அவர் கள் பிறந்ததை பல சகுனங்கள் அறிவித்தது.

6. கௌதமருக்கு 12 சீடர்கள். கிறிஸ்துவிற்கும் 12 மாணுக்கர்கள்.

7. அன்புவேண்டுமென இரண்டு தர்மங்களும் கூறும்.

8. வெட்டி வேதாந்தத்தைக் காட்டிலும் வையகத் தொண்டையே இரண்டு தர்மங்களும் முதன்மையாய்ச் சிறப்பித்தன.

9. அன்னியர் புன்மையைச் செய்தாலும் நன்மை யைச் செய்ய வேண்டுமென இரண்டு தர்மங்களும் கூறும்.

10. ஆதியிலே பௌத்தர்கள் மந்திரங்களையும், கிறிஸ்தவர்கள் கோவில்களையும் சிறப்புடன் தீர்மானஞ் செய்தார்கள்.

11. ஞானஸ்னானமும் இருவர்களும் ஒரே தன்மை யுடன் செய்கிறார்கள். இவைகளின்று கிறிஸ்து தர்மம் பௌத்த தர்மத்தினின்று ஒருவாறு திரிந்து புலனாயிற்று என நன்கு விளங்கும்.

இரண்டு தர்மம் சாதாரணமாய் எல்லா விஷயங்களி லும் ஒன்று சேர்வது திடீரெனத் தோன்றி விடாது சௌத்த தர்மத்திலின்றே கிறிஸ்து தர்மம் தோன்றிற்று என ஆர். ஸி. டட், ஸாய்டல் முதலிய அறிஞர்கள் கூறி யுளார்கள்.

### யஹூதிதர்மம் இஸ்லாம் தர்மம்

இனி யஹூதி தர்மத்தையும் இஸ்லாத் தர்மத்தை தையும் நோக்கலாம். இஸ்லாம் புதிய தர்மம் என சொல் வதற்கில்லை. அதனால் புதிய சித்தாந்தங்களும் புலனாக வில்லை. ஸ்ரீ. மகமது நபி அவர்கள் யஹூதி தர்மத் திற்கு புதிய உடை அளித்த பிரபு எனப் புகலாம். வியாபாரத்தின் நிமித்தம் அவர் பலநாடுகள் சென்றார். யஹூதிகளை அவர் பார்த்திருப்பார் என்பதில் சந்தேக மில்லை. அவர் தோன்றிய காலம் நிலைக்கேற்றவாறு அத் தர்மம் தழைத்தோங்கியது என்பதில் குறையொன்று மில்லை. தன்னுடைய திடமான நினைவுடன், திட்டமான சாதனங்களோடு, தரணியி லுள்ளவர்களிடம் அன்பு மிகுந்து, தன்னுடைய அபாரமான வன்மையால், மின் னல் போல் அவன் அருளையும் அடிக்கடி பெற்று இடி முழக்கமுடன் பழைய உண்மையை உலகத்திலே பர வச் செய்து, எங்கும் காணாத ஒரு உற்சாகத்தை அளித்து புவியிலுள்ளோர்களெல்லாம் ஆச்சரியமாகும் வண்ணம் எங்கும் புத்துயிரைப் புலனாக்கி, சகமெல்லாம் சகோ

தரத்துவத்தை ஸ்தாபனஞ் செய்தார். அவர் அருளிய மொழிகளையே திருக்குர்-ஆன் என்பார்கள்.

முஸ்லிம் தர்மம் திருக்குர்-ஆனின் முதன்மையான சித்தாந்தங்களெல்லாம் யஹூதி சித்தாந்தக்களில் சாய்ந்துள்ளது. அந்நூலின் புதிய சித்தாந்தம் ஒன்றுமில்லை என டாக்டர் சேல் திருக்குர் ஆனின் மொழி பெயர்ப்பில் கூறியுள்ளார். அராபி நாட்டிலே இஸ்லாம் தர்மப் பிரசாரமாகுங் காலத்தில் யஹூதி தர்மமும் கிறிஸ்துதர்மமும் அங்கு புலனாயிருந்தது. மகம்மதிய மதம் என்னும் நூலிலே, மாகௌலியெனத் என்பவர் எழுதுவதாவது:—

அரேபியாவிலே மகம்மதிய மதம்பிரசாரமாகுங் காலத்தில், யஹூதி மதஸ்தர்கள், கிறிஸ்து மதஸ்தர்கள் அங்கு இருந்தார்கள் என்பது நிச்சியம். அரேபியாவிலுள்ள யஹூதிகள் பாலேஸ்டின் யஹூதிகளினின்று தனிமையானதாக சரிதைகள் கூறும். இஸ்லாம் தர்மச் சரித்திரங்களில்லையேல் யஹூதிகள் அங்கு இருந்தார்கள் என்பதை ஒருவருமறியார்கள். அநேக கிறிஸ்தவர்களும் அங்கு இருந்திருக்கிறார்கள்.

இதனால் இஸ்லாம் மதம் தோன்றுங் காலத்தில் யஹூதி மதம் கிறிஸ்துமதம் தாண்டவமாடிக் கொண்டிருந்ததென்பது கண்கூடு. திருக்குர் ஆனில், பைபிலிலுள்ள பல மொழிகளைக் காணலாம். பைபில் பெரியார்களின் சில விஷயங்களை நாம் திருக்குர்—ஆனில் பார்ப்பதால் ஸ்ரீ மகம்மது நபி கிறிஸ்தவ தர்மத்தை அறிந்திருப்பார் என்பதில் சந்தேகமில்லை.

1. இஸ்லாத்திலுள்ள ஈஸ்வர சம்பந்தமானது யஹூதியர்களிடமிருந்து அறியப்பட்டது. யஹூதி தர்மத்தி

லும் இஸ்லாம் தர்மத்திலும் ஈசனின் குணங்கள் ஒரே தன்மையுடன் கூறப்படும். ஈசனுக்கு மாறான ஒரு பெரும் சக்தியும் இரண்டு தர்மங்களிலும் வற்புறுத்தப்படும். அந்த மாறான சக்தியையே சைதான் எனப்படுவது. இந்த வன்மை ஈசனின் சக்திக்கு அடிக்கடி பங்கம் விளைவிக்கின்றது. யஹூதியர்கள் இந்த சித்தாந்தத்தை கிறிஸ்தவ நூல்களிலிருந்தே கற்றிருக்கவேண்டும்.

3. சிருஷ்டி எல்லாம் சூன்யத்தினின்று சிறந்தது. இது ஒரே சிருஷ்டியாகும். இதுவும் முடிவதுடைந்து விடும். ஆதாம் ஏவாள் ஏடன் என்னும் தோட்டத்திலிருந்தார்கள். பிறகு சுவர்க்கத்திலிருந்து கீழே விழுந்தார்கள். தேவர்கள் சுவர்க்கத்திலுள்ளார்கள். இவைகளைத்தான் யஹூதியர்கள் நம்புவது. இஸ்லாமியர்கள் இவைகளை எல்லாம் கிரகித்துவிட்டார்கள்.

4. மனிதன் நித்தியமாகும். இறந்த பிறகு அவை உறங்கும். பிறகு ஈசன் சன்னிதானத்தில் தங்கள் கணக்கைக் காண்பிக்க நிறுத்தப்படுவார்கள். அந்த காலத்தில் ஸூர்யன் மேற்கே உதயமாவான். ஒரு விசேஷ ஜந்து தோன்றி சத்தியத்தைப் பிரசாரஞ் செய்யும். கடைசியில் முரசு மூன்று முறை அடிக்கப்படும். ஈசன் சிங்காதனத்தில் அமர்ந்து நீதிபுரிவார். இவைதான் யஹூதி தர்மமாகும். இஸ்லாம் தர்மம் சற்று ஏறக்குறைய இவைகளையே நம்புகின்றது எனலாம்.

5. யஹூதியர்களுக்கும் மகம்மதியர்களுக்கும் ஒரே எண்ணமுள்ள சுவர்க்கமும் நரகமுமாகும்.

6. யஹூதியர்களிடமிருந்தே தொழுகை, நோன்பு,

தானம் யாத்திரை இவைகளை மகமதியர்கள் பின்பற்றி யிருக்க வேண்டும்.

பல தாரமணங்களும் யஹூதிகளிட மிருந்தே மகம் மதியர்கள் பற்றினார்கள்.

ஆதலால் புவியிலே தோன்றி பிரசாரமாயுள்ள எல்லா தர்மங்களும் ஆதிமூலமான வேதத்தினின்றே இங்ஙனம் விரிந்திருக்க வேண்டுமென சுவாமிகள் எண்ணினார்.

புராண தர்மம் நவீனமாய்த் தோன்றியுள்ள ஹிந்து தர்மம் வைதீக தர்மத்தின் விகாரமே என பகிரங்கஞ் செய் தார். புராணங்களெல்லாம் வேதத்தின் பெயரைக்கூறி பல தேவ பூஜைகளை ஸ்தாபனஞ் செய்துவிட்டது. இருக்கு வேதம் கூறுவதாவது—இந்திரம் மித்ரம், வருணம் அக்னி மாஹூரதோ திவ்ய : ஸசுபர்ணென கருத்மான் ஏகம் சத் விப்ரா பஹூதா வதன் தியக்னிம் யமம்மாதரிச் வான மாஹூ:

ஈசன் ஒருவனே. அவனுக்கே இந்திரன், மித்ரன், வருணன், அக்னி முதலிய பெயர்கள். இருப்பது ஒன்று. அறிஞர் பலவாறு உரைப்பார்கள். இந்த அற்புதமான மொழிகள் பாரத நாட்டில் பௌத்த மதம் எங்கும் பிர சாரமானவுடன் விபரீதமாய் விளக்கஞ் செய்யப்பட்டு பற் பல தேவர்களும் உபாசனைகளும் கற்பிக்கப்பட்டன.

பௌத்த தர்மமானது. ஈசனுடைய நிலையில் மனிதர் கள் பூஜை செய்ய ஆரமபித்தார்கள். பூஜைசெய்ய சுந் தரமான விக்ரகங்களைச் செய்தார்கள். இந்துக்களின் சித்தமும் சௌந்தர்யத்திலே சாய்ந்தது. அதுவே மூர்த்தி பூஜைக்கு அஸ்திவாரமாய் விட்டது. பௌத்தரின் ஆதி கதைகள் அற்புதமாய் மாந்தர்களின் மனதிலே பதிந்

தால், புரோகிதர்கள் ஈசனின் நாமத்தைத் தரித்து அவதாரம் நிறைந்த கற்பனைக் கதைகளை வேத தாரமெனப் புகன்று பகிரங்கம் செய்து தங்கள் செல் வாக்கை நிலை நிறுத்த முயன்றார்கள். உடனே பதினெண் புராணங்கள் தோன்றிற்று. ஜனங்களுக்குப் புத்துயிரைப் புலனாக்குவதற்காக ஆதி நூல்களை எல்லாம் மறுபடியும் திருத்தி எழுதலானார்கள். பௌத்தருக்குப் பிறகு புத்தி என்னும் பெயரால் விதண்டா வாதம் அதிகரித்து, தரணித் தொண்டை மறந்து வாய்ச்சண்டை அதிகரித்து நாஸ்திகம் எங்கும் தலையோங்கவே ஸ்ரீ சங்கராசாரியார் தோன்றி னார். நாஸ்திகத்தை அடியோடு ஒழித்து, விதண்டாவாதத் தைக் கொலைபுரிந்து, ஆயிரக்கணக்கான குட்டி தேவர் களின் பொய் தோற்றங்களைப் புலனாக்கி, பழக்கவழக்கத்தி லிருந்த அனுசாரங்களை எல்லாம் பாழாக்கி ஒரு தலைவன், ஒரே ஈசன் ஏகரிஷி, அத்வைதம் என்னும் அற்புத சித்தாந் தால் மறுபடியும் வைதிக சிங்கநாதத்தை அகிலமெல்லாம் கர்ச்சனை செய்தார். பாரத நாடெங்கும் மறுபடியும் ஆஸ்தி கம் தழைத்தோங்கி வளர்ந்தது. எங்கும் வைதிக தர்மம் மறுபடியும் புலனாகி மக்கள் புத்துயிரைப் பெற்றார்கள். தெய்வம் என்னும் திடமான நினைவிலே பாரத மக்கள் தோய்ந்து மகாசனங்களின் சமூக சிந்தனைகளை மறந்து விடவே ஸ்ரீ இராமானுஜர் தோன்றி வைதீக அத்வை தத்தை இன்னம் விசேஷமாய் விளக்கி 'சஹநௌ புனக்து' என்னும் வேதாமுதத்திற்கேற்ப பக்த கோடிகளின் சகோ தரத்துவத்தை செம்மையாய்ச் சிறப்புடனாக்க விசிஷ்டாத் வைத மென்னும் வேத தர்மத்தின் புதிய தோற்றத்தை நாடெங்கும் பரவச் செய்தார்.

மறுபடியும் வேதம் ஸ்ரீ இராமானுஜருக்கு பிறகு

பாரத நாட்டிலே புதுநிலை ஏற்பட்டுவிட்டது. மேற்குத் திசையில் புராதனத்தில் சென்ற சகோதரர்கள் மறுபடியும் நாட்டிலே படை எடுத்து கிளர்ச்சி யுண்டுபண்ணி, பெருங் குழப்பங்களை புலனுக்கிவிடவே, எங்கும் வர்ண சங்கிரம் தோன்றி, ஆசிரம தர்மங் குறைந்து, வாமமார்க்கிகள் தாண்டவமாகி, இருள் எங்கும் சூழ்ந்து, அறியாமை நடனஞ்செய்து பாமரர்களை படுகுழியிலே அமிழ்த்தியது. மதம் என்னும் பெயரால் குழந்தைகள், பெண்மணிகள், தாழ்ந்தவர்கள், சூத்திரர்கள், மாணுக்கர்கள், ஏழைகள் எல்லாம் நடுப்பகலிலே ஞானத் திருடர்களால் கொள்ளையடிக்கப்பட்டனர். ஆதிகாலத்தில் அகிலத்தின் திலகம்போல் விளங்கிய ஆரியமக்கட்களின் சந்ததிகளான இந்துக்கள், தினந்தோறும் பாழாகி, இருக்குமிடந்தெரியாமல் அழிந்து வருங்காலத்தில், மதுராபுரியில் தூலக்கண்களில்லாமல் ஞானக் கண்கள் திறந்து வாழ் நாட்களேல்லாம் பிரும்மசாரியாய் காலங்கழித்து வந்த விரஜானந்த துறவியானவர் கடந்த நூற்றுண்டிலே பால பிரும்மசாரியாய் பழைய புராணம் முதலியவைகளை யெல்லாம் யமுனாநதியில் எறிந்து வேதாமுதத்தை தன்னிடம் பருகிய இளைஞர் ஒருவரை நோக்கி,

"எனக்கு குருதட்சிணையாகப் பொன்பொருள் வேண்டாம்; உன்னிடமில்லாத பொருள் எனக்கு அவசியமில்லை; எனக்கு கிராமும் வேண்டாம். புவியிலுள்ளவர்கள் முதன்மையாய் பாரத மக்கள் வேதம் அறியாமல் படுகுழியிலே வீழ்ந்துளார்கள். நீ வேதம் என்னும்சுடரை ஜெகமெல்லாம் கொழுந்து விட்டெறியச் செய்யவும். அதுதான் நான் உன்னை கேட்கும் குரு தட்சிணை" என்றார்.

'இளைஞனும அஙஙனமே வாக்குறுதி செய்கிறேன்' என்றான்.

இந்த இளைஞனின் வாக்குறுதியை நிறைவேற்ற சுமார் நான்கு லட்சம் ஆரியர்கள் மதுராபுரியிலே 1924-ம் வருடம் சேர்ந்து அந்த வாக்குறுதியை மறுபடியும் மொழிந்தார்கள்.

பெரிய குடும்பத்திலே பிறந்து, பெரும் நோக்கம் நாடி சிவாலயத்திலே சஞ்சலமாகி, அமுதத்திற்கு அன்னை அப்பனையும் நீங்கி, நாடெல்லாம் சுற்றி நுண்ணிய பொருள்களெல்லாம் கற்று, பெரியோர்களை நாடி, பிரபஞ்ச அனுபவம் பெற்று, ஞான கண்ணப்பராய் துறவி விரஜானந்தரிடம் வேதத்தைக் கொள்ளை கொண்டுபோன ஸ்ரீ தயானந்த சரஸ்வதியே அந்த இளங்காளையாகும். அந்த இளம் சிங்கம் வேத வடிவமெடுத்திருந்ததால் சுவாமி சிரத்தானந்தர் தன்னையே ஸ்ரீ தயானந்தரின் நோக்கத்திற்குத் தத்தஞ் செய்துவிட்டார். தன்னையே தான் ஏன் தியாகஞ் செய்து கொண்டார் என்பதை அவர் அமுத மொழிகளினின்று அறிவோம்.

ஸ்ரீ தயானந்தரிஷியே ; நீர் தரணிநீங்கி பல வருடங்களான போதிலும் தங்களின் திவ்யமான வடிவம் என் மனத்தினின்று இன்னம் தளரவில்லை. நான் எத்தனையோ முறைகள் கீழே விழுந்திருக்கிறேன் ; ஆனால் உங்களுடைய நினைவு ஒன்றே என் ஆன்மாவைப் பாதுகாத்தது என எவன் அறிவான் ? நீங்கள் என்னைப்போல் எத்துணை ஆன்மாக்களை காப்பாற்றிருப்பீர்கள் ; இதை எண்ணவோ மனிதர்களால் முடியாது. ஈசனின் அருளில்லையேல் இங்ஙனம் எண்ணிக்கையற்ற ஆன்மாக்களை இரட்

சிக்க இயலாது என்பதை எவர் தான் அறியார். எத்துணை பாவங்கள் உங்கள் அக்னியில் எரிக்கப்பட்டதென்பதை எவர்களாலாவது சொல்லமுடியுமோ? அவைகளை பற்றி என்னால் சொல்ல முடியவில்லையாயினும் என்னுடைய விஷயத்தில் என்னைப் பாதாளத்தினின்று தூக்கி சத்திய மான வாழ்க்கையில் சாய நீங்களே உதவியாயிருந்தீர்கள் என நான் சொல்லவும் வேண்டுமோ?

நான் எங்கு விழுந்திருந்தேன் என்பதை என் சரிதையைப்படிப்பவர்கள் அறிவார்கள். நான் பின்காலத்தில் எதற்காக உழைத்தேன் என்பதையும் உலகமறியும், உங்களுடைய கருணை வெள்ளமே இடமாறுதலுக்குக் காரணம். உங்களால் நான் பெற்ற ஆன்ம வாழ்க்கையை உங்கள் நோக்கத்திற்கே அளித்து விடுகிறேன். நீங்கள் மொழிகளால் பிரசாரஞ் செய்தது ஒருபுறமிருக்க, அவைகளைச் செயலில் சிறப்பித்த பாக்கியம் உங்களுடையதே. பகவான் ஸ்ரீகிருஷ்ணனைப் போல் இம்மூன்று உலகங்களிலும் நீங்கள் இனி செய்யவேண்டிய மிகுதியான வேலை யொன்றுமில்லை. உலகம் முன்னேறுவதற்கு பழைய கர்மங்கள் தடையாயிருக்குமென எண்ணமில்லை.

பகவானே; உங்களுக்கு நான் கடன் பட்டிருக்கிறேன். அக்கடனினின்று முக்தனாக விரும்புகிறேன். நீங்கள் பரம பிதாவுடன் பேரானந்த முடனிருக்கிறீர். உங்களின் உண்மையான சீடனாவதற்கு எனக்குச் சக்தியையளிக்கவும்.

இதுதான் சிரத்தானந்தர் விரும்பியது. ஸ்ரீ தயானந்தர் வைதீக தர்மத்திற்காகவே, பிறந்து வளர்ந்து வையகம் நீங்கியதால், ஸ்ரீ தயானந்தரின் சீடனால் வைதீக தர்

மத்தை வளர்ச்சி செய்யலாமேன எண்ணினர். ஏனெனில் வைதீக தர்மமே புராதனமானது. எல்லா ஜனங்களும் அனுசரிப்பது. நாடுகள் எல்லாம் அதை நாடுகின்றன. இதுவரை நாம் சொன்னவாறு இதற்கு ஆதியுமில்லை; அந்தமுமில்லை. உலகத்திலே சிருட்டியினுதியை ஒருவன் கண்டு பிடித்தால், அப்போழுதும் வைதீக தர்மம் நாம் கூறியதுபோல் இருந்ததாகப் புலனுகும். வைதீக தர்மத்தி லில்லாத புதிய விஷயங்களை வேறு தர்மத்தில் காண முடியாது.

வைதீக தர்மத்தில் தோய்ந்தவர்கள் இராஜப்பிரசைகளைப்பற்றி ஒன்று மறிவதில்லை என ஜனங்கள் எண்ணுவார்கள். ஆனுல் ஸ்ரீ தயானந்தர் வேதாமுதத்தைப் பருகி, சுதேசி விருதமாகி சுதந்திரமுடன் வாழ்வதே வைதீக சித்தாந்தம் என எங்கும் கர்ச்சனை செய்தார்.

விதேசிகள் பாரதநாட்டைப் பற்றி பரஸ்பர சண்டை, மதபேதம், பிரும்மசர்யசூன்யம், கல்விக்குறைவு, இளம் மணம், கட்டாய விவாகம், சிற்றின்பப் பிரியம் முதலியவைகள் மலிந்து சகோதரர்கள் எல்லாம் சண்டைசெய்கிறுர்கள். பாண்டவர்கள் பரஸ்பரம் போர்புரிந்து எல்லோரும் மடிந்தார்கள். ஆனுல் அந்த துவேஷம் இன்னம் மறையவில்லை. வேததர்மத்தையே அறிந்தவர் இங்ஙனம் கூறுவாரேயானுல், வைதீக தர்மம் சுயராஜ்யத்திற்கு எங்ஙனம் இடையூருகும் என எண்ணுவார். சுவாமிகளின் வைதீக தர்மத்தின் சித்தாந்தங்களை அடியிற்கண்ட ஆரிய நியமங்களினின்றும் அறிந்துகொள்ளலாம்.

1. சகலவிதமான சத்திய வித்தைகள் இந்த சத்திய வித்தைகளால் சிறப்பாகும் எல்லாப் பொருள்களின் முதற் காரணமாய் நித்திய ஆதரவாயுள்ளவர் பரமேசுவரனுகும்.

2. பரமேசுவரர் சச்சிதானந்த சொரூபர், சர்வேசுவரர், சர்வ வியாபகர், சர்வாந்தர்யாமி, சிருட்டிகர்த்தா, அனந்தர், அநாதி, நிகரற்றவர், காலமற்றவர், நிர்ப்பயமுற்றவர், நீதிமான், நித்தியர், நிர்விகாரர், நிராகரர், புனிதர், கருணாகரர், அவர் ஒருவரையே பூஜை செய்யவேண்டும்.

3. வேதம் என்பது சகல சத்திய வித்தைகள் அடங்கிய நூல், அதை ஒவ்வொரு ஆரியரும் கற்கவேண்டியது, கற்பிக்கவேண்டியது.

4. எப்பொழுதும் எல்லோரும் சத்தியத்தைப்பற்றவும் அசத்தியத்தை அகற்றவும் சித்தமாயிருக்கவேண்டும். எல்லோரும் எல்லாக் காரியங்களையும் தர்மத்தோடுகூடி சத்திய அசத்தியமறிந்து செய்யவேண்டும்.

5. தேகம், ஆன்ம ஜன சமூகம் சிறத் தோங்குவதற்கேற்ற எல்லா செயல்களையும் செய்வது அவசியம்.

6. எல்லா ஜனங்களிடம் அன்புடன் அணுகி அறத்தோடு இணைந்து நிலைகளுக்கேற்றவாறு நடக்கவேண்டும்.

7. அறியாமையை அகற்றி அறிவைப் பரவச் செய்வது கடமை.

8. தன் நன்மையுடன் அந்நியர் நன்மையிலும் எண்ணம் வேண்டும். அதுவே நமது நன்மையுமாகும். எல்லா நன்மையை அபிவிருத்தி செய்யும் சமூக விஷயங்களுக்கு எல்லோரும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். இந்த நிபந்தனைகளுக்கு ஏற்ற ஏனைய நன்மைகளை நாடுவதும் விரோதமாகாது.

மனிதனின் ஆத்மா நித்தியமாகும். மாநில நினைவில் அதிகமாய்ப் பாய்ந்து மெய்ப்பொருள்களை மனிதன் மறந்து விட்டான். தன்னையே அதிகம் நம்பி தலைவனைத்

துறந்து விட்டான். தூலத்திலே தோய்ந்து தெய்வீகத்தி னின்று நழுவி விட்டான். வைதீக தர்மத்தை மறுபடி யும் வையகத்திலுள்ளோர் நாடுவோர்களேயானால் உலகத் திலுள்ள துன்பமெல்லாம் தொலையும் என எங்கும் பகிரங் கஞ் செய்தார். வைதீக தர்மத்தை பகிரங்கஞ் செய்ததன்னி யில் அதற்கேற்ற வாழ்க்கையை நடத்த பின்வாங்கவில்லை. வைதீக தர்மத்தின் நோக்கமே அடியிற்கண்ட பெருஞ் செயல்களைச் செய்ய சுவாமிகளுக்கு உற்சாகமளித்தது.

---

## அத்தியாயம் இருபத்தொன்று.

மகாசபை—நேரில் செல்லுவோம்—அஞ்சா நெஞ்சு—நோய்க்கிரை—தென்னாட்டுப் பிரசாரம்—தமிழர் நன்றி—சீக்கியர்களுக்கு உதவி.

மகாசபை—வைதீக தர்மத்தின் உண்மையான நோக் கங்களை பகிரங்கஞ்செய்ய காசியிலே இந்து மகாசபையை கூட்டினார். அப்பொழுது பண்டித மதன்மோகன் மாளவி யாவும் வந்திருந்தார். சமத்துவம் சகோதரத்துவத்தை வேதாதாரத்தினால் நிலைநாட்ட சுவாமிகள் முயன்ற பொ ழுது பண்டிதர்கள் அதை விரும்பவில்லை யாதலால், வை தீக தர்மத்திற்கு விரோதமாய் மகாசபை சென்ற தால் நான் இந்து மகாசபையில் அங்கத்தினராயிருக்க விரும்பவில்லை என தனிமையாய் விட்டார்.

நேரில் செல்லுவோம்—பிறகு தன்னந் தனியாக ப்பி சாரஞ்செய்து சமூக ஊழியத்தில் சாய்ந்து கடவாலத்தில் பஞ்ச நிவாரணம் செய்யுங்கால், புதிய தர்மத்தை ஸ்தாப னஞ் செய்ய வந்தவன் என புகார் சொல்லி சிரத்தானந்

தரை இலேசாக பலர் மொழிந்து பாமரர்களின் மனத்திலே விஷத்தை உற்பத்தி செய்து விட்டார்கள். பாமரர்கள் சிரத்தானந்தரை பெரும் பகைவர் என மதித்து அவரைக் கொன்றுவிடுவோம் என நிச்சயமாகி பெருந் திரளாக ஒன்றுகூடி இவர் எப்பொழுது வரப்போகிறார் என காத்திருந்தார்கள். சிரத்தானந்தர் இதை அறிந்ததும் குழந்தைகள் இதை அறிவதில்லை. நாம் நேரில் செல்வோம் என அவர்கள் கூட்டத்தின் நடுவிலே சென்று நமஸ்தே என கைகூப்பினார். கொலை புரியக் கருதியவர்கள் உடனே மனக்களிப்புடனாகி உள்ளத்தை உரைத்து மன்னிப்பு நாடினார்கள்.

அஞ்சாநெஞ்சு—இனி நீங்கள் இந்துக்களாக விரும்புவேன் எனச் சொல்பவர்களை எல்லாம் இந்து சமயத்தில் சேர்க்கலாகாது. சுத்தி சங்கதத்தின் இயக்கத்திலிருந்து நீங்குவது அவசியம். தாழ்ந்த வகுப்பினர்களுக்கு நீங்கள் உதவி புரிவதால் அவர்கள் எங்கள் மதத்தில் சேர்வதில்லை. ஆதலால் பல விபத்து, உங்களால், ஏற்படுகின்றபடியால் நீங்கள் சமூக ஊழியத்தினின்று விலகவில்லையேல் உங்களை கத்தியால் குத்தி விடுவோம் என பல கடிதங்கள் பெயர் ஊரில்லாமல் அவருக்கு தினந்தோறும் கிடைக்கும்.

குரு குலத்திலே அவ்வப்பொழுது தோன்றும் கானக மிருகங்களினின்றும், அக்கம் பக்கத்திலுள்ள கொள்ளைக்காரர்களிடமிருந்தும் பாதுகாத்துக் கொள்வதற்காக குரு குல அதிகாரிகள் துப்பாக்கி வைத்துக் கொள்ள சர்க்கார் அனுமதித்திருந்தார்கள். ஆனால் இராஜீய விஷயத்தில் தலைவர்கள் தோய்வதாக எண்ணி துப்பாக்கியை வைத்துக்

கொள்ளும் அனுமதிச் சீட்டை ரத்து செய்து விட்டார் கள். அப்பொழுது கொள்ளைக்காரர்களின் அச்சம் அதிக மாயிருந்தது. சுவாமிகள் இவ் விஷயத்தை அறிந்தவுடன், இனி அச்சம் அவசியமில்லை. நம்மை நாம் காப்பாற்றிக் கோள்வதே தர்மம் எனப் புகன்று சில இரவுகள் தானே கண் விழித்திருந்ததுடன், இரவு தோறும் சில பிரம்மசாரி களாக குரு குலத்தை காவல் புரிய ஏற்பாடு செய்து தன் கையே தனக்குதவி என்னும் அனுபவத்தை யாவர்க்கும் கற்பித்தார்.

" ஆரிய சமாஜிகள் விக்ரக பூஜையை விரும்புவதில்லை. ஈசன் பெயரைச் சொல்லி மனிதனுக்கு தானஞ் செய்ய வேண்டாம். பண்டாக்களுக்கும் புரோகிதர்களுக்கும் அளிப்பதனால் ஒரு புண்ணியமும் இல்லை. புண்ணிய க்ஷேத்திரங்களில் எல்லாம் பாவமே தாண்டவமாடுகின் றன. இந்து சமூகத்தைச் சின்னபின்னஞ் செய்து துக் கத்தை விளைவிப்பது புரோகிதர்களின் படாடோபமான, பாசாங்குச் செயலே" என ஆரிய சமாஜிகள் பிரசாரஞ் செய்வதால் இனி நமது பிழைப்புப்போய்விடும், பிண்டத் திற்கே திண்டாட்டமாய் விடும் என பண்டாக்களின் தலை வன் மற்ற பண்டாக்களிடம் புகன்று, இனி ஆரிய சமாஜி களை அடித்து உதைத்து உபத்திரவஞ் செய்யலாமெனை ஹரித்துவாரத்தில் கிளர்ச்சிசெய்ய ஆரம்பித்தான். ஆரிய சமாஜிகள் பட்டபாடோ பரமன் ஒருவனே அறிவான். ஆரிய சமாஜி என்றால் அவனை அடித்துத் துரத்துவார்கள்; கல் எறிவார்கள்; காய்ச்சின எண்ணெயை அவன்மேல் ஊற்றுவார்கள்; கழியால் அடிப்பார்கள்; கத்தியால் குத் துவார்கள்; பகலில் ஏமாற்றுவார்கள்; இரவில் கொலை புரிவார்கள். சுவாமிகள் இந்தக் கஷ்டங்களை எல்லாம்

கண்டு சகிக்க முடியாதவராய், தானே ஹரித்துவாரஞ் சென்று பண்டாக்களின் தலைவனை அணுகி நீர் என்ன வேண்டுமானாலும் என்னையும் சமாஜிகளையும் செய்து கொள்ளலாம் என மொழிந்தவுடன்,

"ஏதோ நான் அறியாமையால் மற்றவர்களால் தூண்டப்பட்டு ஆரிய சமாஜிகளை உபத்திரவஞ் செய்தேன். இனி நான் ஒன்றுமே செய்யப்போவதில்லை; என்னை மன்னிக்கவும்;" எனக்கூறினான் பிறகு ஆரிய சமாஜிகளும் பெரும் கஷ்டத்தினின்றும் நீங்கினார்கள்.

இக்காலத்தில் ஆரிய சமாஜிகள் அனுபவித்த கஷ்டத்திற் கோரளவில்லை. பிஷாவருக்கருகில் பட்டாளம் ஒன்று இருந்தது. பட்டாளத்தின் தலைவன் ஒரு நாள் சற்று நீதியுடன் வழக்காடுபவனைக்கண்டு "நீ ஆரிய சமாஜியோ" என வினவினான். அதற்கவன் "நான் முஸ்லிம்; ஆரிய சமாஜி இல்லை." என மறு மொழி அளித்தான். அங்ஙனமானால் நீ முஸ்லிம் ஆரிய சமாஜியாயிருக்க வேண்டுமெனக்கூறி சிறிய தண்டனையை அளித்தான். இந்த உதாரணத்தினின்று ஆரியர்கள் எத்துணை கஷ்டத்தை அனுபவித்தார்கள் என்பது நன்கு புலனாகும். ஆனால் இக்கஷ்டங்களை சுவாமி சிரத்தானந்தர் செவியுற்று ஜகமெல்லாம் தெரியும் வண்ணம் பிரசித்தஞ் செய்தார்.

நோய்க்கிரை—பகிரங்கத்தொண்டு இங்ஙனம் செய்து வருங்கால் குருகுலத்தின் மூல நிதிக்குப் பொருள் வேண்டுமெனவும், குறைந்தது ரூபாய் 30,000 அவசியமெனவும், சுவாமிகளே அதை திரட்டி எங்களுக்கு அளிக்க வேண்டுமென குருகுல கமிட்டியார் சிரத்தானந்தரை விரும்பியவுடன் தனது உடல் நிலை பலக்குறைவுடனிருந்த போதி

னும் கமிட்டியார் வேண்டுகோளுக்கிணங்கி, பிரும்மதேசம் முழுவதும் சுற்றி முப்பதினாயிரத்தைத் திரட்டி குருகுல கமிட்டிக் களித்தார். ஆனால் தன்னுடைய விருத்தாப்பிய காலத்தில் பெரும் யாத்திரை செய்ததின்பயனால் இவருடைய தேகத்தை இந்த யாத்திரை பாதித்து நோயிற் கிரையாகும்படி செய்து விட்டது.

இந்துக்களின் துன்பங்களையும் அவர்கள் அனுபவிக்கும் கஷ்டங்களையும் தெளிவாக்க, ஒரு பத்திரிகை அவசியமென அறிந்து 'தேஜ்' என்ற தேசபாஷை தினசரி பத்திரிகை ஒன்றை ஸ்தாபித்தார். அது சில நாட்களிலேயே பெரும் ஊழியஞ் செய்து அவர் நோக்கத்தை எங்கும் பரவச் செய்தது. புது உற்சாகத்தை யளித்து சமூகத்தில் புத்துயிரைத் தோற்றுவித்தது.

தென்னாட்டுப் பிரசாரம்—வைதீக தர்மத்தைப் பற்றி நாடெல்லாம் பிரசாரஞ் செய்யுங்கால் தமிழ் தெலுங்கு தேசங்களையும் அவர் மறக்கவில்லை. தென்னாட்டு பிராமணர்கள் வெகு அழகாய் வேதமந்திரங்களை உரைக்கிறார்கள். பார்ப்பதற்கும் இருஷிகளைப்போல் கட்டுக்குடுமியுடன் விளங்குகிறார்கள். தர்க்கஞ்செய்வதிலோ நிபுணர்கள். மொழிவதிலோ தேன் ஒழுகும். கிளிப்பிள்ளையைப்போலவே பாராமல் சொல்வதில் சமர்த்தர்கள். ஆனால் அங்ஙனம் உரைப்பவர்கள் எல்லாம் வேதத்தின் கருத்தை அறிவதில்லை. வைதீக தர்மம் பட்டு ஆடைகளுடன் கட்டுக்குடுமியுடன் முடிந்துவிடுகின்றது. பரிசிப்பதிலும் பரிசிக்காததிலுமே அவர்கள் மதம் உழலும். தென்னாட்டினர்களின் தர்க்கம் மற்றவர்களை ஏமாற்றி தான் சுகமாயிருப்பதற்கு ஆகும். புகழ் மொழி கூறுவதே தொழிலாய்விட்டது. வேதத்தின் பெயரால் சாதிமதம்

தாண்டவமாடுகின்றது. ஆரியர் என்றால் தென்னாட்டு பிராமணியம் என எண்ணுகிறார்கள் என அறிந்து இரண்டு வைதீக பிரசாரகர்களை நியமித்து உண்மையான வேத தத்துவங்களை தென்னாட்டிலே பரவச்செய்ய முயற்சி செய்தார். வேததத்துவங்களை அடங்கிய சத்தியார்த்தப் பிரகாசம் தமிழர்களிடம் பரவவேண்டுமென அம்முயற்சிக்கு பெரும் ஊக்கம் அளித்தார். சுவாமிகளின் உதவியில்லையேல் தமிழர்கள் சத்தியார்த்தப் பிரகாசத்தை அறிந்திருக்க மாட்டார்கள். தமிழ் சத்தியார்த்தப் பிரகாசத்தைக் குறித்து சுவாமிகள் கூறுவதாவது :—

எல்லாத் துறைகளிலும் பெருஞ் சீர்திருத்தக்காரராயும் நவீன எழுச்சிக்கு புத்துயிரை அளித்த ஸ்ரீ தயானந்தரின் திருநாமத்தை, பாரத நாட்டில் மாத்திரமன்னியில் புவியிலுள்ள நாடுகள் எல்லாமறியும். அவரின் உபதேசங்கள் அனைத்தும் சமயாசாரக் களஞ்சியமாய் சத்திய தர்மத்தை செம்மையாய்ச் சிறப்பிப்பது சத்தியார்த்தப் பிரகாசமேயாகும். பொதுவாக உலகத்தின் கண் உள்ள பாஷைகள் அனைத்திலும் சிறப்பாக நம் நாட்டு பாஷைகளிலும் இப்பெரு நூல் மொழி பெயர்க்கத் தகுந்ததாகும். இந்நூலைத் தமிழ் செய்வது பெரும் பொது நன்மையாகும். பாஞ்சாலம், ஐக்கிய மாகாணம், பீகார், பங்காளம், பம்பாய், பூனா முதலான தேசங்களில் தர்ம விஷயமாய் சுற்றுப் பிரயாணஞ் செய்ததுபோல் சென்னை முழுவதிலும் சுற்றுப் பிரயாணஞ் செய்ய ரிஷி தயானந்தருக்கு அவகாச மில்லாதது வருந்தத் தக்கதே. அஞ்ஞான இருள் இன்னும் தன்னதிகாரத்தை நடத்தி வரும் நாடுகளில் அப்பெரியாரின் போதனைகளைப் பிரசுரஞ் செய்தல் அவரது சீடர்களின் கடமையாகும்.

வைதீக தர்ம சம்பந்தமான சத்தியார்த்தப் பிரகாசத்திஞல் தென்ஞட்டு இந்து மத சமூகத்தில் இதுவரை காணுத பெருங் கிளர்ச்சி யொன்று 1925-ம் வருஷத்திற்குப் பின் தோன்றி இளைஞர்களுக்குக் குதூகலத்தை அளித்தது ஒரு புறமிருக்க, அன்னிய மதங்களிலும் பெரும் உற்சாகம் தோன்றி அவர்கள் சமூகமும் புத்துயிரைப் பெற்று சமூகத்தின் பொதுப் பேய்களான புரோகிதர் சுய நல வா்திகளுக்கு பெரும் விபத்தை விளைவித்து விட்டது.

தமிழர் நன்றி. *அவர் ஒரு வகுப்பையோ ஜாதியையோ வெறுக்கவில்லை என்பதை விளக்க சென்னை வாசிகளால் அவருக்கு 1924-ம் வருடம், மே மாதம் 20-ந் தேதி அளிக்கப்பட்ட வரவேற்புப் பத்திர மொன்றே அத்தாட்சியாகும். அந்த வரவேற்புப் பத்திரத்திலே சென்னை வாசிகள் கூறுவதாவது :—பூஜ்யசுவாமிகளே ! தென்னிந்தியாவை உங்கள் யாத்திரையில் சேர்த்ததற்கு நாங்கள் வணங்குகின்ருேம். தென்ஞட்டுத் தலை நகரமான இச் சென்னையின் சார்பாக உங்களுக்கு நல்வரவு கூறுகிருேம்.*

*தென்னிந்தியாவைப் போல் சாதிவேற்றுமை தாண்டவமாடாத வட நாட்டினின்று நீங்கள் இங்கு விஜயஞ் செய்கிறீர்கள். ஹரித்துவாரத்தில் நீங்கள் நிலைநிறுத்தின காங்கிரி குருகுலம் பழைய இருஷிகளின் பெருமையையும், புகழையும் நிரந்தரமாய் நிலை நாட்டிவிட்டது. அறியாமை, அசிரத்தையால் சூழ்ந்துள்ள இந்து தர்மத்திற்கு புத்துயிரை அளிக்க நீங்கள் முயற்சி செய்கிறீர்கள். கல்வித் துறையிலும், பஞ்சமர் முன்னேற்றத்திலும், மகா சனங்களின் மேன்மைக்கும் நீங்கள் உழைப்பது உலகமறிந்த விஷயம். தேசம் புனர் உத்தாரணமாகி தலையோங்க வேண்*

டுமானால் மதத்திலே உயர்ந்த நோக்கமும் ஆழ்ந்த வீர மும் உயர்ந்த உற்சாகமும் வேண்டும். அவைகளின் வடி வமே நீங்களாகும்.

உங்கள் நோக்கம் ஜயமுடனாக வேண்டும். நீங்கள் பூர்ண ஆயுளுடனாகி, ஐசுவர்யத்தையும் பெறவேண்டும்.

இச் சென்னை வாசிகள் வேற்றுமை யன்னியில் அவ ரைக் கருதியதுபோல், வடநாட்டிலுள்ள ஏனைய வகுப்பி னர்களும் அவரை தங்களுடைய சகோதரர்கள் என எண்ணினார்கள். சுவாமிகளின் செயல்களே அவர்களை அங்ஙனம் கருதும்படி செய்தது.

சீக்கியர்களுக்கு உதவி—சீக்கியர்களை அறியாதவர்கள் சகத்திலே இல்லை. அவர்கள் அமிருதசரசில் குருகாபாக் என்னுமிடத்தில் ஒரு சமயம், சத்தியாக்கிரக மாரம்பித்தார் கள். குருகாபாக் உதாசிமகந்துக்களிடமிருந்தது. ஆனால் குருகாபாக் என்னும் தோட்டமும், அதன் சொத்துக்க ளும் மகாஜனங்களுடையது. சீக்கியமகந்து தன்னுடைய சொந்த சொத்து என எண்ணி தனது இஷ்டம்போல் கருதுபவனாயினான். சீக்கியர்கள் குருகாபாக்கிலுள்ள மரங் களை சீக்கிய தர்மசாலையின் உபயோகத்திற்காக வெட்டி சத்தியாக்கிரகஞ் செய்யலானார்கள். மகந்து எனது சொத்து, வெட்ட வேண்டாமெனச் சொல்லியும், அவர்கள் மறுக்கவே மகந்து போலீஸ் உதவியைநாடினான். போலீஸ் காரர்கள் மகந்துடன் சேர்ந்து துராக்கிரகத்துடன் சீக்கி யர்கள் மரம் வெட்டாமல் தடுத்தார்கள். குருகாபாக் மகா ஜனங்களுடையது. மரங்கள் தர்மத்திற்காக ஏற்பட்டவை. ஐக்கிய மகாசனங்களுக்கு அதை உபயோகிக்க உரிமை யுண்டு. அந்த உரிமையை ஸ்தாபனஞ் செய்ய அகிம்சை

யுடன் அமைந்த சத்தியாக்கிரகத்தை நாங்கள் நாடி எங்களைச் சித்திரவதை செய்தபோதிலும் எங்கள் கடமையினின்று நீங்கப் போவதில்லை எனபகிரங்கள் செய்தார்கள்.

ஆரம்பத்தில் சீக்கியர்களைக் கைதி செய்தார்கள். பிறகு கைது செய்தும் ஏராளமாக சீக்கியர்கள் வருவதைக் கண்டு, கழியாலும், தடியாலும் அடித்து இரத்தகளம் பெருக்கலானார்கள். ஆனால் சீக்கியர்கள் உபத்திரவங்களை இலட்சியஞ் செய்யாமல் தினந்தோறும் திரள் திரளாகச் சேர்ந்து குருக்காபாக்கிலுள்ள மரங்களை வெட்டுவதில் பின் வாங்கவில்லை. மகா சனங்களிடம் நியாயமிருந்தபோதிலும், அநியாயமாய் தர்ம ஸ்தாபனங்களை சுவாதீனஞ் செய்து கொண்டிருந்த மகந்துவின் பக்கமே சட்ட மிருந்தபடியால் சர்க்கார் அவனுடன் சேர்ந்ததால் சனங்கள் சகிக்கமுடியாத கஷ்டத்திற்குள்ளானார்கள்.

சத்தியம் எங்கிருந்தபோதிலும் அதற்காகப் போராட வேண்டுமென்னும் சித்தமுடைய சிரத்தானந்தர் "சத்தியாக்கிரக சீக்கியர்களுக்கு நானும் உதவி செய்வேன்" என, அமிர்தசரஸிற்குச் சென்றார். சுவாமி சிரத்தானந்தர் வந்துவிட்டாரென சர்க்காருக்கும் திகிலாய் விட்டது. சுவாமிகள் சீக்கியர்களின் தலைவராய் விட்டால் நெருக்கடியான நிலைமை ஏற்பட்டுவிடும் என எண்ணி, அமிருதசரஸிலே அவர் விஜயஞ் செய்தவுடனே நியாயாலயத்திலே நாடகமாடி அவரை 1922ம் வருடம் செப்டம்பர் மாதம் பத்தாந்தேதி ஒரு வருடம் சிறைச்சாலை தண்டனைவிதித்தார்கள். அமிருதசரசின் சிறைச்சாலையில் சில தினம் வைத்திருந்து பிறகு மிண்டுகோமரி சிறைச்சாலைக்குமாற்றி விட்டார்கள். அங்குதான் தனது சுயசரிதத்தை ஒருவாறு

எழுதினர். பிறகு பாஞ்சாலத்திலும் பாரத நாடெங்கும் விதவா விவாக சங்கத்தை ஸ்தாபித்த ஸ்ரீகங்காராம் முயற்சியால் சத்தியாக்கிரகம் ஒருவாறு முடிந்தது. சர்க்காரும் 50 வயதிற்கதிகமான கைதிகளை விட்டுவிடுவதென நிச்சயஞ்செய்து சுவாமிகளை 1922ம் வருடம் டிசம்பர் 26ந் தேதி எந்தவிதமான நிபந்தனையும் அன்னியில் விடுதலை செய்து விட்டார்கள்.

சுவாமிகள் இங்ஙனம் மகாஜனங்களுக்குத் தொண்டு செய்வதுடன், தன்னுடன் நெருங்கிப் பழகியவர்களுக்கு பெரும் உற்சாகத்தை அளித்து பெரும் ஊழியத்தில் பாயும்படி செய்தார். அவருடன் நெருங்கிப் பழகி பலர் பல அனுபவங்களைப் பெற்றனர். ஆதலால் அவரின் சில நண்பர்களை நன்கு நோக்குவது மிகையாகாது.

---

## அத்தியாயம் இரபத்திரண்டு.

### அவரின் நண்பர்கள்.

சிலபெரியார்கள்—குரு, தத்தர்—மகாத்மா ஹசன் ராஜர்—லஜபதிராயர்—வேறுநண்பர்கள்—லாலா சாஇம் சதாசர்—ஷியாம்ஜி கிருஷ்ணவர்மா—லோகமான்ய திலகர்—மகாத்மா காந்தி.

பண்டித குருதத்தர்—ஆரிய சமாஜத்தில் ஒரு அற்புத புருஷர் எனவும், பெரிய அறிஞர் எனவும் முன்னரே சொல்லியுள்ளோம். "நான் நினைப்பது போலவே குரு தத்தரும் கருதுகிறான். அவனால் நான் பெரிய மனோ வன்மையைப் பெற்றேன்" என சுவாமிகள் கூறுவது வழக்கம். பண்டித குருதத்தர் துறவிகளாகிய நாங்கள் சந்நியாசிகளா

கையால் சந்தியோபாசனை அவசியமில்லை எனச்சொல்வதை கண்டிதஞ் செய்வது சகஜம். யோகி, மகாத்மா, ரிஷிகள் சதா கால சர்வேசனின் தியானத்தி லிருப்பதால் அவர்களைப் பற்றி நான் எதைச் சொல்லவும் விரும்பவில்லை, துறவி நாமம் தரித்து சகலவித உணவுகளையும் புசித்து, கிரகஸ்தர்களை நாடும் சந்நியாசிகள் சந்தியோபாசனை செய்ய வேண்டுமென வற்புறுத்தவே, அவரின் வேண்டுகோளுக்கிணங்கி பல சந்நியாசிகள் சந்தியோபாசனை செய்ய வாரம்பித்தார்கள்.

விதவா விவாகத்தைப் பற்றிய குருதத்தரின் உபன்னியாச மொன்றைச் செவியுற்று, பெரிய தனவந்தன் ஒருவன் தனது இளங்குமாரியான விதவைப் பெண்ணிற்கு மறுமணம் செய்ய உறுதி கொண்டான். பண்டிதரின் உபன்னியாசத்தின் முகவுரையோ ஒரு மணியாகும். ஆனால் 5 நிமிஷத்தில் உபந்நியாசத்தை முடிக்கவும் என்றால், சகலருக்கும் திருப்தியை யளித்துமுடித்து விடுவார்.

பண்டிதரே! காங்கிரஸைப்பற்றி உங்கள் அபிப்பிராய மென்ன? என நண்பர் ஒருவர் வினவியதற்கு அவர் கூறியதாவது :—

“ஒரு மனிதனை அவன் நோக்கத்தால் அறிவோம். காங்கிரஸையும் அதன் உத்தேசமான சட்டவரம்புக்குட்பட்ட கிளர்ச்சி என்னும் நியமத்தால் அதன் உண்மையை அறிவோம்.

எங்கும் திறந்துள்ள நிலத்திலே சுள்ளிகளை யெல்லாம் ஒன்று சேர்த்து நெருப்பு வைக்கவும். உடனே நான்கு திசைகளிலும் உயரமான நிலைகளிலிருந்து சலம் எப்பொழுதும் விழுவதற்கு குழாய்களை அமைக்கவும். பிறகு

நெருப்பை மூட்டவும், குழாய்களையும் திறந்துவிடவும். இதைத்தான் காங்கிரஸ் எனவும் 'கான்ஸிடிடியுஷனல்' கிளர்ச்சி எனவும் சனங்கள் கூறுவது வழக்கம்."

குரு தத்தர் கூறிய மொழிகள் சனங்களின் சித்தத்திற்கு அதிர்ச்சி அளித்து அவர் நோக்கத்தில் பாயும் வண்ணஞ் செய்து விடும். ஸனாதனிகள் நிறைந்த கூட்டமொன்றிலே மூர்த்திபூஜையை தசோப நிஷத்தினாதரவால் கண்டனஞ் செய்து, "நான் கஷ்டமுடனாகிறேன், என் மனம் கலங்குகின்றது, எனது பிதாவின் மக்களான சகோதரர்கள், சீவர்களாயிருந்தும் சடபூஜை செய்வது என் கண்களில் நீரோடும்படி செய்கின்றது என கண்ணீர் வடிக்குங்கால், ஸனாதனிகளின் சித்தம் எல்லாம் பரவசமாகி, நாங்கள் இனிமூர்த்தி பூஜை செய்யப்போவதில்லை எனப் பலர் சங்கற்பமானார்கள். நான் ஒரு காலையில் பண்டித குரு தத்தரைப் பார்க்கச் சென்றிருந்தேன். அவர் தனது அறையில் தனிமையாய் யோகாப்பியாசஞ் செய்வதைக் கண்டு காத்திருந்தது பிறகு அவருடன் பேசினேன். புனிதன் தினந்தோறும் சிறிதுகாலமாவது தனிமையாகி ஏகாந்தத்திலில்லையேல் ஒருவனின் வன்மையை அபிவிருத்தி செய்து கொள்ள சந்தர்ப்பமேற்படாது என குருதத்தர் எனக்குரைத்து, முன்ஷீராமனே! நான் ஏதோ அறிவதாக சனங்கள் சொல்லுகிறார்கள், ஆனால் நிரந்தரமாய் கற்கும் களிப்பினின்று ஒரு பொழுதும் பின் வாங்குவதில்லை. சிலரது வினாக்கள் என்னைச் சந்தேகத்திலாக்கிவிடும். நான் இரவெல்லாம் சந்தேகம் தெளிய கற்கநேரிடும் என தன்னைப்பற்றி வினவியதற்கு மறுமொழி யளித்தார்.

மறுபடியும் பண்டிதர் என்னை வேறு சமயத்தில் வினவியதாவது :—

ஒருவன் வக்கீலாயிருந்து கொண்டு புண்ணியாத்மா வாய் இருக்க முடியுமோ?

இருக்க முடியாது என எனது அனுபவத்தை யுரைத் தேன்.

உன்னுடைய அனுபவத்தில் இருக்க முடியாது என நீ உரைப்பாயேயானல் நீ ஏன் இன்னம் வக்கீலா யிருக்க வேண்டும்? நீ தர்ம புருடாயிருக்க விரும்புவதால் வக்கீலா யிருப்பது ஏனே? நீ இனி தர்மத்தில் தோய்ந்து சிட் சையை யளிக்கும் புனித பணியில் ஏன் சாயலாகாது. "குருதத்தரின் இம் மொழிகளே என்னை குருகுலத்தில் ஆசாரியனவதற்குத் தூண்டுதலாயிருந்தது" என சிரத்தா னந்தர் கூறி வேறொரு சம்பவத்திலே, மாமிசாகாரத்தைப் பற்றிச் சொல்லுங்கால் "மாமிசம் புசிப்பது நன்மையா ஞல், மேன்மையான மாமிசம் புசிக்க வேண்டும். மாமி சத்தில் சிறந்தது மனித மாமிசமே அதை ஏன் புசிக்கலா காது என குருதத்தர் விவாத மொன்றில் கூறியவுடன் மற்றவர்களெல்லாம் மௌனமாய் விட்டார்கள்.

பண்டித குருதத்தர் மாமிசாகாரத்தை வெறுத்ததால், அவர் ஹன்ச ராஜரின் கொள்கைகளை ஆதரிக்காமல் தனிக் கட்சியான குருகுலத்தை ஏற்படுத்துவதற்குத் துணையா யிருந்தவர் அவர் இளம் பருவத்திலேயே க்ஷயரோகத்தின் வாய்ப்பட்டு புவிநீங்கினர்.

மகாத்மா ஹன்சராஜர்—சுவாமிகள் ஹன்சராஜர் கொள் கைக்கு மாறுக தனி குருகுலத்தை ஸ்தாபிக்கக் காரணமா யிருந்தபோதிலும் பெரும்சந்தர்ப்பங்களிலே ஒன்றுகூடி ஒருவருக்கொருவர் மரியாதையுடனிருக்கத் தவறியதில்லை.

ஸ்ரீ தயானந்தரின் 100-வது வருஷ கொண்டாட்டம் 1924-ம் வருடம் சுவாமிகளின் தலைமையில் நிகழ்ந்தது. ஆனால் ஹன்சராஜர் தன்னுடைய பரிவாரங்களுடன் மதுராபுரியில் விஜயஞ் செய்து ஒற்றுமையுடன் சதாப்தி மகோற்சவத்தை நடத்தி வைத்தார். ஹன்ஸராஜர் சுவாமிகள் குருதத்தர் மூவரும் கலாசாலை நண்பர்களாகும். ரிஷி தயானந்தர் தரணி நீங்கினார் என செவியில் விழுந்தவுடன் ஆரியர்கள் எல்லாம் ஒன்று கூடி என்ன செய்வதெனத் திகைத்தார்கள்; லாகூரிலே ஐந்து ரூபாய் வாடகைக்குக் குடியிருந்து ரூ. 50 சம்பளத்தில் குடும்பத்தை எல்லாம் காப்பாற்றி வந்த ஒரு எளியவர் இருந்தார். அந்த எளியவரின் சகோதரன் பி.ஏ. பரீட்சை அந்த வருடமே தேறி ஸ்ரீ தயானந்தர் ஞாபகார்த்தத்திற்கு என்னால் என்ன செய்ய முடியுமென எண்ணி அவர் ஞாபகார்த்தமாக கலாசாலை ஏற்பட்டால் நான் சொற்ப சம்பளத்திற்கே எனது வாழ் நாட்களை எல்லாம் அளிப்பேன் எனச் சொல்லி தன்னையே தியாகஞ்செய்து கொண்டார். அவரே பிற்காலத்தில் மகாத்மா ஹன்சராஜர் என அழைக்கப் பட்டவர். இலட்சக் கணக்கான பூஸ்திதியுடன் கூடி, நிகழும், டி.ஏ.வி. கலாசாலையே, அவரின் ஆதி சங்கற்பத்தின் வடிவமாகும். அந்தக்கலாசாலையினின்று இன்னும் வருடந் தோறும் நூற்றுக் கணக்காய் மாணவர்கள் வெளியில் வருகிறார்கள். அக் கலாசாலை, பாஞ்சால யூனிவர்சிடியுடன் இணைக்கப் பட்டிருக்கின்றது. சுவாமி சிரத்தானந்தர் இந்தக் கலாசாலையை குருகுலமாக்கவேண்டு மென விரும்பி, அதுமுடியாமற் போகவே ஹன்சராஜருடனிருந்து பிரியவேண்டியிருந்தது.

மகாத்மா ஹன்சராஜர் மாமிசம் புசிப்பவர். அதை

சில பழைய கோஷ்டிகள் விரும்புவதில்லை. ஆரியரும் மாமிசம் புசிக்கலாம் என்னும் சிந்தாந்தத்தைப் பகிரங்கம் செய்தவர். மௌனமாயிருந்து தொண்டுபுரிவதில் ஹன்சராஜருக்கு நிகராக இப்பாரத பூமியில் எவருமில்லை. தென்னாட்டில் பண்டித ரிஷிராமனை முதன் முதலாக அனுப்புவித்து, ஆரிய தர்மத்தை பிரசாரஞ் செய்தவர். தமிழர்கள் அடிக்கடி பேசும் நோயினின்று எப்பொழுது நீங்குவார்களென வருத்தமுடனுவார். தென்னாட்டிலே தமிழர்களே ஆரிய தர்மம் அறிந்து பிரசாரஞ் செய்யவேண்டும் என்னும் சிந்தனையிலே இன்னும் சாய்ந்துளார். மலையாளத்தில் நடைபெறும் ஆரிய சமாஜ தொண்டுகளுக் கெல்லாம் ஹன்சராஜரே முதன்மையான காரணம். பால்க்காடு, கள்ளிக்கோட்டை, எர்ணுகுளம் முதலிய இடங்களில் பஞ்சமர்களின் முன்னேற்றத்திற்கு பிரசாரகர்களை அனுப்புவித்து ஊழியஞ் செய்வதே உத்தம பணி என இன்னும் உற்சாகத்துட னிருப்பவரே ஹன்சராஜ ராகும்.

லஜபதிராய். ஹன்ஸராஜருடன் ஒத்தாசையா யிருந்து பூர்வத்தில் சுவாமிகளுடன் உழைத்தவரில் லஜபதிராய் ஒரு சிங்கம்போல் விளங்கினர். அவர் மாணவரா யிருக்குங் காலத்திலேயே விடுமுறை நாட்களில் கிராமங்கள் எல்லாம் சஞ்சரித்து தயானந்தர் அமுதத்தை பாமரர்களுக்கு அளித்தவராகும். டி. ஏ. வி. கலாசாலைக்கு உதவியா யிருந்து ஆயிர மாயிரமாய் பொருள் சேகரித்து உதவி செய்ததன்னியில், ஏராளமான அனுதாலயங்களையும், எளிய மாணுக்கர்களையும் காப்பாற்றுவதில் நிகரற்றவராய் விளங்கினர். ஸ்ரீ தயானந்தர் தரணி நீங்கியவுடன் இனி தயானந்தரின் ஞாபகார்த்தமாக தேசத்திற்கு உழைக்கவேண்டும் என இவர் சபதஞ் செய்துகொண்டதே பிற்காலத்தில் இந்தியா

வின் பாக்கியமாயிற்று. இந்த சமூக சீர்திருத்த வேலேயினுல் பெரிய புரட்சி இந்தியர்களிடம் தோன்றிவிடுமென அஞ்சி சர்க்கார் 1818ம் வருடச் சட்டத்தால் முதன் முதலாய் அவரை நாடு கடத்திஞர்கள். பிறகு விடுதலையாகி, ஐரோப்பியர்களின் வேண்டுகோளுக் கிணங்கி ஆரிய சமாஜம் என்னும் அற்புத நூல் ஒன்றை ஆங்கிலத்தில் இயற்றிஞர். அது வெள்ளைக் கம்பெனியாரால் பிரசுரஞ் செய்யப்பட்டது. ஆரிய சமாஜத்தில் சீர்திருத்தக் கட்சியைச் சேர்ந்தவர். சுவாமிகளைத் தனது தலைமையன்போல் கருதியவர். ஆரிய சமாஜிகளிடம் சாதாரணமாய் சில காலத்தில் காணும் ஆவேசமான மொழிகளை அவர் விரும்புவதில்லை. ரங்கிலா ரசூலேப் போலுள்ள நூல்கள் ஆரிய சமாஜத்திற்கே அவமானத்தை விளைவிக்கும் என எண்ணியவர். சைமன் தடியடி சட்டத்தின் பயனுல் சில வருடங்களின் முன்னரே அவர் மறைந்தார்.

வேறு நண்பர்கள். சுவாமிகள் மரியாதையுடன் மதித்த வேறெருரு நண்பரையும் நோக்குவோம்.

சுவாமிகள் சிலகாலம் காசியிலே படிக்குங்கால், கிரிபத் என்பவர் கலாசாலேத் தலைவராயிருந்தார். கிரிபத்தே இராமாயணத்தை அற்புதமாய் ஆங்கிலக் கவியில் செய்தவர். வேதத்தையும் வெள்ளை மொழியில் அனுவாதஞ் செய்தவர். கிரிபத் ஆனந்தமாய் உட்கார்ந்து இராமாயணத்தைப் படிக்கும் நிலயத்தை நோக்கி இங்குதான் இராமாயணத்தை ஆங்கிலத்தில் செய்தார் என சுவாமிகள் மகிழ்ச்சியாவது வழக்கம். வெள்ளையர்களைப் போல் நமக்கு விஷயங்களில் ஊக்கம் வேண்டுமென விரும்புவார்.

சுவாமிகளுக்கு வெள்ளை மாஜிஸ்ட்ரேட் ஒருவர் சிநே

கிதருண்டு. அவருடன் ஆனந்தமாய்ப் பேசுவது வழக்கம். பேசும்பொழுது நானும் ஆரிய சமாஜி என ஒரு முறை சுவாமிகள் உரைத்ததும்,

நீயும் ஆரிய சமாஜியா? அங்ஙனமானல் எங்களை யெல்லாம் நாட்டைவிட்டு ஓடச்செய்ய விரும்புகிருயோ என வினவினர்.

எப்பொழுதாவது நீங்கள் எங்கள் நாட்டினின்று நீங்கித்தானகை வேண்டும். அதிசயம் ஒன்றுமில்லை என்ருர்.

லாலாசா இம்ஸ்தாசர் என்னும் ஒருவர் சுவாமியின் ஆப்த நண்பராகும். ஆதியிலே லாகூர் ஆரிய சமாஜத்தை நிலையாக்கிய ஆர்ய உற்சாகியே லாலாசா இம்ஸதாசராகும். அவர் ஒரு முறையாவது பகிரங்கமாய் உபந்நியாசஞ் செய்ததே இல்லை. அவர் பத்திரிகைக்கு எழுதுவதுமில்லை. லாகூர் ஆர்ய சமாஜத்தைத் தவிர வேறு எதையும் அவர் அறியார். லாகூர் ஆர்ய சமாஜத்திற்கு உயிரை அளித்தவர் லாலா சாஇம்ஸ்தாசரே யாகும். ஜனங்கள் நான்கானல் லாலாசா இம்ஸ்தாஸர் வாயைத் திறப்பதில்லை யாதலால் பேசும் வன்மை இவரிடம் பூஜ்யம் என எவரும் நினைத்து விடுவார்கள். ஆனல் செவி கொடுப்பவர் ஒருவருக்கு அதிகமில்லையானல் லாலாசா இம்ஸ்தாசரை விட மொழியும் பிரகஸ்பதி புவியிலில்லை, ஆனல் அவர் தினந்தோறும் உத்தியோக உழைப்பினின்று நீங்கலாக மற்றப் பொழுதை யெல்லாம், ஆரிய சமாஜத்தின் அற்புதத்தை அன்னியர்களிடம் வாதஞ் செய்வதிலேயே காலத்தைக் கழிப்பார். அவருடைய ஊக்கம் என் மனத்திலாயிற்று என இங்ஙனம் சுவாமிகள் பிற்காலத்தில் கூறி புன்னகை புரிவார்.

தன் தேகத்தையே ஆரிய தர்மத்திற்கு அளித்த பண்

டித லேகராமனும், தலேயோங்க வாழ்நாட்கள் எல்லாம் அந்தமானில் கஷ்டமடைந்த பாய் பரமானந்தரும், நட மாடும் நிகண்டாய் நாடெங்கும் பிரசாரஞ்செய்த சுவாமி ஆத்மானந்தரும், ஜலந்தரகன்யா வித்தியாலயத் தலேவரான தேவராஜரும், சுவாமிகளின் ஆப்த நண்பர்களாகும். இவர் களே அவர் ஒருபொழுதும் மறப்பதில்லே.

ஷியாம்ஜி கிருஷ்ண வர்மாவும் சுவாமிகளின் நண் பர் எனலாம். இவரும் 1851ம் வருஷம் பிறந்தவர். 1930ம் வருஷமே புவிநீங்கினுர். பம்பாய் நாட்டிலுள்ள மாண்டுவியிலே பிறந்தவர். இவரின் நுண்ணிய மதியைக் கண்டு தயானந்தர் நீ ஜர்மன் நாடு சென்று இன்னம் கற்க வும் என உபதேசித்தார். கேம்பிரிட்ஜில் பெரிய பரீட்சை யைப் பாஸ்செய்து வடமொழி நிபுணராயிருந்தார். பிறகு இந்தியா திரும்பி சுதேச சமஸ்தான மொன்றில் பெரிய பதவியிலிருந்த போதிலும் மறுபடியும் ஐரோப்பிய நாடு திரும்பிவிட்டார். இங்கிலாந்திலே இந்தியா நிலயம் என் னும் சங்கத்தை நிர்மாணஞ் செய்து இளேஞர்களுக்கு தேச பக்தியை ஊட்டினுர். அந்தச் சங்கத்திலேயே ஹரிதயால ரும், சேனுபதர் பாபதரும், வி. வி. எஸ். ஐயரும் பெரும் ஊக்கத்தையும் உணர்ச்சியையும் பெற்முர்கள். பாரிஸ்டர் சாவர்கரும் அங்குதான் பெருமையான சங்க நுட்பங்களே அறிந்தார். பிறகு சண்டை ஆரம்பித்தவுடன் சங்கத்தின் நண்பர்கள் எல்லாம் பிடிபட்டனர். ஸ்ரீ. வி. வி. எஸ். ஐய ரும் சாவர்க்கர் பட்ட கஷ்டங்களும் தியாகங்களும் உலக மறியும். அப்பொழுது ஷியாம்ஜி கிருஷ்ணவர்மா பிரான்ஸ் முதலிய நாடுகளுக்குச் சென்றுவிட்டார். அவர்தான் ஆயி ரக் கணக்கான ரூபாய்களே முதல்வைத்து அதனுல் ஏற் படும் வட்டியின் தொகையைக்கொண்டு ஸ்ரீ சிவாஜி, ஸ்ரீ

தயானந்தர் முதலிய புருஷர்களைப்பற்றியும் இந்தியாவின் புராதன சரிதைகளின் ஆராய்ச்சிகளிலும் இணைந்தவர்களுக்குத் துணைபுரிய வேண்டுமென சில அங்கத்தினர்களை நியமித்து ஒரு திட்டத்தையும் செய்தார். இந்தத் திட்டத்தின் பயனாலேயே பாரிஸ்டர் சாவர்கர் அவர்களின் சுதந்திர யுத்தத்தின் சரிதை வெளியாயிற்று. ஆரிய சமாஜம் ஆதியிலே ஏற்பட்ட பல கூட்டங்களைப்போல் இதுவும் பழைய புத்தில் விழக்கூடாது என பெரும் முயற்சி செய்தார். இத்துடன் ஐரோப்பா நாடெங்கும் சதாகாலமும் சுற்றி துண்டுப் பிரசுரங்கள் மூலமாக பாரதநாட்டின் துன்பங்களை அடிக்கடி புலனாக்கியது ஒருபுறமிருக்க, நிரந்தரமான பத்திரிகையொன்றை ஸ்தாபித்து ஐரோப்பியபாஷைகளிலே பாரதநாட்டின் நிலையை அடிக்கடி தெரிவித்து வந்தார். அதனால் இந்தியாவின் விஷயத்தில் பல ஐரோப்பியர்கள் ஊக்கம் பெற்றது ஒருபுறமிருக்க, பல இளைஞர்கள் அவருடைய ஊழியத்தைப் பின்பற்றலானார்கள். இச் சிறந்த ஷியாம்ஜி கிருஷ்ணவர்மாவைப் பற்றி அடிக்கடி குருகுல மாணவர்களுக்குக் கூறுவது வழக்கம்.

திலகர்—இந்தியாவிலுள்ள தேசபக்தர்களையும் அவர் மறக்கவில்லை; பாலகங்காதர திலகரை மனத்திலே எப்பொழுதும் புகழ்வார். "லோகாமான்யர் கீதா ரகஸ்யத்தை திருத்துங்கால் அவருடன் பேசும் பாக்கியத்தைப் பெற்றேன். அந்த நாளை இன்னம் நான் மறக்கவில்லை. திலகர் இராஜீய விஷயத்தில் தோய்வதற்கு முன் தேசபக்தி எல்லாம் நாட்டிலே வாய் மொழியுடன் நின்றுவிடும். பாமரர்களும் இராஜீயத்தில் பாயவேண்டும் என்னும் எண்ணத்தை முதன் முதலாய்ப் புலனாக்கியவர் திலகர் பெருமானேயாவர். கணபதி பூஜையைக் குணமாக்கி தாய்

பாஷையிலே தேசப் பத்திரிகையை ஸ்தாபித்து, நமது திவ்ய மொழியிலே மொழிந்து, புதிய உற்சாகத்தை அளித்த பெருமை லோகமான்யருடையதாகும்.

"வங்காள உபந்நியாசகர்கள் ஆவேசமுடன் பேசுவார்கள்; ஆனால் திலகரோ நிதானமாய் படாடோபமன்னியில் பேசுவார். சூரத் காங்கிரஸில், மேடையிலே திலகர் சாந்தமாய் எழுந்து நின்றதும் வங்காள பிரகஸ்பதிகளெல்லாம் மறைந்து விட்டார்கள். திலகர் லக்ஷ்மணபுரியில் 'ஹோம்ரூல் என்னுடைய பிறப்புரிமை' என கர்ஜித்த மொழிகள் ஒன்றே அவரை பாரத நாட்டின் பெருமைப் புதல்வன் என ஸ்தாபித்துவிடும்! பாரத நாட்டின் முதல் தேசபக்தர், முதன் முதலாய் சிறைச்சாலைக்குச் சென்றவர். உன் கடமை செயலைச் செய்வதே என்னும் கீதாமுதத்தை மறுபடியும் பிரகாசஞ் செய்த பிரபுவாவர். அவர் ஓரியன், வேதத்தின் ஆர்டிக் நிலயம், கீதாரகஸ்யம், என்னும் நூல்கள் புவியுள்ளவரை அழியாது. சுயராஜ்யம் வந்துவிட்டால் கலாசாலையில் கணிதாசாரியனுகவே நான் சென்றுவிடுவேன் என அவர் கூறியது அவரின் அற்புத மனத்தின் மேன்மையைப் புலனுக்கும்" என சுவாமிகள் கூறியுளார். பாலகங்காதர திலகருக்குப் பிறகு மகாத்மாவை தேசத்தில் பெரியவராய்க் கருதினுர்.

மகாத்மா காந்தி—தேசம் புதிய யுகத்தை காந்தியினுல் பெறும் என்பதை அறிந்து இராஜீய விஷயத்தில் அவர் ஆரம்பித்த வேலைகளுக்கெல்லாம் உதவி புருஷராயிருந்தார். மகாத்மா காந்தி இல்லையேல் அவர் பிற்காலத்தில் காங்கிரசில் சேர்ந்திருக்கமாட்டார். தேசீயத்திலே புனித வாழ்வு மகாத்மா காந்தியினுல் தோன்றுமென்பதை அவர் திடமாய் நம்பினுர். காந்திஜி சிரத்தானந்தரைக்

குறித்து ஒருகாலத்தில் பகிரங்கமாய் நினைப்பவர், சண்டை புரிவதில் பிரியமதிகம் என சில கண்டிதமான மொழிகளைக் கூறியபோதிலும், அதற்காக பாரத நாட்டிலுள்ள ஆரிய சமாஜிகள் எல்லாம் மகாத்மாவைச் சற்று மறுத்த போதிலும், சுவாமிகள் சாந்தமாயிருந்து பதிலளிக்காமல் ஒரு வேளை நமது குற்றத்தை நாம் அறியோம், ஆதலால் நாம் பதிலளிக்க அருகரில்லை என மௌனமாயிருந்து விட்டார். பிறகு சில காலங்கழித்து இனித் தனிமையாகி என் குறைகளை எல்லாம் கழிக்க நான் முயலவேண்டுமென அவர் அடிக்கடி சொல்லியது மகாத்மாவிற்கு அவரிடமிருந்த மதிப்பைப் புலனாக்கிற்று.

டில்லியிலே மகாத்மா காந்தி இந்து முஸ்லிம் சச்சரவிற்காக மனம் நொந்து பல நாட்கள் உபவாச மிருந்த காலத்தில், சுவாமிகள் "நான் இனி சுத்தி செய்யப்போவதில்லை; இந்தியாவிலுள்ள கிறிஸ்தவர்களும் மற்றவர்களும் இவ் வேலைகளினின்று நீங்க வேண்டு"மென வேண்டிக்கொண்டார். ஆனால் பாரத நாட்டிலுள்ள அன்னிய மதஸ்தர்கள் அதற்குச் செவிகொடுக்க வில்லையாதலால், மறுபடியும் சுத்திசங்கடன் இயக்கத்தில் சாய்ந்தார்.

இன்னம் அவருடன் நெருங்கிப் பழகியவர் பலர். சேலம் ஸ்ரீ விஜயராகவாச்சாரியினிடம் அவருக்கு மதிப்புண்டு. "அவர் பழைய காங்கிரஸ் வாதி, எனது புராதன நண்பர். நான் அவரைச் சந்திக்கச் சேலம் செல்ல வேண்டும்" என புன்னகையுடன் சென்னை வந்தகாலத்தில் கூறியது அவரின் அன்பைக்காட்டும்.

பாரத நாடெங்கும் பல நண்பர்களையுடைய சுவாமிகள் காங்கிரஸுடன் சேர்ந்தும் சேராமலும் தேசீயமாய் செய்த ஊழியங்களும் மனத்திலாக்குவது மிகையாகாது.

## அத்தியாயம் இருபத்தி மூன்று.

### பெரும் சம்பவங்கள்.

சத்தியாகிரகத்துடன் சேர்தல்—சத்தியாகிரகியார்—டில்லி சம்பவம்—மஸ்ஜித்தில் உபந்நியாசம்—காந்திஜீயுடன் பிரிவு.

சத்தியாகிரகத்துடன் சேர்தல். சென்ற மகா யுத்தத்திற்குப் பின்னர் பாரதநாட்டில் புதிய நிலையொன்று நிகழ்ந்தது. தேசத்தில் அராஜரீகம் அதிகரிக்கின்றதென சர்க்கார் எண்ணி ரௌலட் என்னும் வெள்ளையரைத் தலைவனாய்க் கொண்ட நீதி நிபுணராம் ஸ்ரீ குமாரசாமி சாஸ்திரியார் முதலியவர்கள் அடங்கிய, கமிட்டியின் சிபார்சு எனச் சொல்லி கருப்புச் சட்டமொன்றை நிறைவேற்றி ஜனங்களின் சொல் சுதந்திரத்தையும் குறைத்து எங்கும் புதிய உணர்வை புலனுக்கி விட்டார்கள். நாங்கள் அடிமைகள் என்னும் எண்ணம் எங்கும் பகிரங்கமாயிற்று. வெள்ளையர்களிடம் நிலையாயுள்ள நீதி எப்பொழுதாவது வெளிவரும் என எண்ணிய மகாத்மா காந்தியும் சர்க்காருடன் நிராசையாகி பெருங் கிளர்ச்சி செய்தது நாடெல்லாம் கோபாக்கினி கொழுந்து விட்டெரிய ஆரம்பித்தது. சென்னையிலும் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியால் அற்புதமாய் எழுதப்பட்ட துண்டுப் பிரசுரங்கள் எங்கும் காணுத ஒரு புத்துணர்ச்சியை பெருமை யுடனுக்கிற்று. மாயாபூரிலே வானப் பிரஸ்தாசிரமம் நீங்கி பரோபகாரத்திற்காக சந்நியாசம் பெற்று சமூக ஊழியம் நாடெல்லாம் செய்து வரும் ஸ்ரீ சுவாமிகள் சித்தமும் தேசத்திற்கு உழைக்க வேண்டுமென சிறந்தது. காந்தி சத்தியாகிரகம் என்னும் மொழியை சுவாமிகள் செவியுற்ற வுடன், சத்தியத்தை கிரகிக்க,

*அசத்தியத்தை நீக்க எப்பொழுதும் தயாராயிருக்க வேண்டும் என்னும் ஆரிய நிபந்தனையான ஸ்ரீ தயானந்தரின் அமுத மொழிகள் அவருக்கு ஞாபகமாயிற்று. சத்தியாக்கிரகியின் அடியிற்கண்ட நிபந்தனைகளை காந்திஜீயின் திருமொழிகளாலறிந்து தானும் அந்தக் கூட்டத்தில் சேர்ந்தார்.*

1. சத்தியாகிரகி யார்—சத்தியமேன்றால் உண்மை. அதை பற்றுவதே சத்தியாக்கிரகம். இதைப் பற்றுபவன் பெரும் பலத்தைப் பெறுகின்றபடியால் அவன் சத்தியாகிரகி எனப்படுவோன்.

2. *சத்தியாகிரகிக்கு விரோதமாக, தாய் தந்தைகள், ஸ்திரீ, பிள்ளைகள், அரசன், குடிகள், அகிலமெல்லாமான போதிலும் சத்தியம் அவனைப் பாதுகாக்கும்.*

3. இந்த சத்தியாக்கிரகத்தின் சக்தியை ஒருவன் பெற்றுவிட்டால், நண்பனும் பகைவனும், குழந்தையும், கிழவனும், ஸ்திரீயும் புருடன் என்னும் வேற்றுமை அவனை அணுகுவதில்லை. அவன் தேகத்தால் திறமையைத் தேளிவாக்குவதில்லை. அன்பு என்னும் வன்மையையே அவன் அறிவான். இதைத்தான் ஆன்ம பலம் என உரைப்பது.

4. *அன்புமயமானவன். அன்னியனை அழிக்கான், ஆனால் தன் காயத்தையும் பலி அளிப்பான். சத்தியாக்கிரகியானவன் கஷ்டங்களை அனுபவிக்கும் பொழுது சிரிக்கும் சக்தியையுடையவனவன்.*

5. சத்தியாக்கிரகி சர்க்காருக்கு பெரும் சத்துருவாயிருந்த போதிலும் மனத்தாலும், மொழியாலும், ஒரு வெள்ளையனுக்கும் புன்மையைச் செய்வதில்லை.

6. *சத்தியாக்கிரகிக்கு எவனிடமும் கோபமில்லை. சத்துருவின் கோபத்தையும் சகிப்பான். எதிரி கோபமுடனுல் அவனுக்கும் நீதியையே செய்வான். ஆனால் அச்சத்தால் அவனை ஆட்சி செய்ய இயலாது.*

7. போலீஸ்காரன் பிடிப்பதற்கு வந்தால் அவன் சந்தோஷமாய் கைதியாவன். தன் பூஸ்திதிகளையும் பேரானந்தமுடன் பறி கொடுப்பான். சரண மடைபவனுக்கு சாகும்வரை சரணமளிப்பான்.

8. *நிந்தனை மொழிகளையும் மொழியான். விரோதியையும் கண்ணியமாய் நடத்துவான். யூனியன் ஜாக் கொடிக்கு மரியாதை செய்யான். ஆனால் அவமரியாதையும் செய்வதில்லை. எந்த வெள்ளையனுக்கும் புன்மை செய்யான். ஆபத்துக் காலத்தில் தன் உயிரை அளித்தாவது வெள்ளையரின் சீவனை விபத்துக்களினின்று நீக்குவான்.*

9. சத்தியாக்கிரகி சிறைச்சாலைக்குச் சென்றால் அதை தவச்சாலையாகக் கருதி சட்டங்களுக்குட்பட்டு நடப்பான். உத்தியோகஸ்தர்களிடம் மரியாதையாயிருந்தபோதிலும் 'சர்க்காருக்கு ஜே' என கோஷஞ் செய்யச் சொன்னால் மறுப்பான். அவமானத்தைப் பொறுக்கான்.

10. *சத்தியாக்கிரகி கொலை பாதகர்களிடமும் வேற்றுமையன்னியி லிருப்பான். தன்னை உயர்ந்தவனாக மதியான்.*

11. விருப்பானாலும் வெறுப்பானாலும் தலைவன் சொல்வதைக் கேட்பான். சபையிலே சேர்ந்து அதற்கு

விரோதமாய் ஒரு போழுதும் செல்லான். வேண்மோ தனிமையாகி விடுவான்.

12. சத்தியாகிரகி அன்னியரின் ஆதரவை நாடான். உயிர் துறந்தால் பெண் பிள்ளை உற்றார் உறவினர்கள் என்ன செய்வார்கள் என கவலைப்படுவதில்லை. சண்டை செய்த போதிலும் நீதியுடன் அகிம்சா போரே செய்வான். தன்னை இந்தியன் எனவே அழைத்துக்கொள்வான். எப்பொழுதும் அறத்திலே அமைந்தவனாகும்.

13. சத்தியாகிரகிக்கு, சுகமில்லை. துக்கம், சூன்யம், தேகாரோக்கியமுடனிருப்பான். செயல்களின் பயன்களில் பற்றன்னியி லிருப்பான்.

இந்த நிபந்தனைகளை அடைந்துள்ள சத்தியாகிரக கமிட்டியின் தலைவராய் நிகழவேண்டுமென காந்தி அவர்கள் சுவாமிகளை வேண்டிக் கொண்டார். சுவாமிகளும் தலைவரானார்.

டில்லி சம்பவம். சுவாமிகள் டில்லியிலே சுதந்திரத்தை அபகரிப்பதான ரௌலட் சட்டத்திற்கு விரோதமாய் பெருங் கிளர்ச்சியைச் செய்தார். அர்ச்சுனன், ஆக்பரின் டில்லி மகா நகரம் மறுபடியும் புது சீவனைப் பெற்றது. டில்லியிலே எங்கும் சிறிய கூட்டங்கள் நடைபெற்றன. 1919ம் வருடம் மகாத்மா காந்தி அவர்களும் டில்லியிலே எல்லாத் தலைவர்களையும் கண்டுபேச ஆமதபாத்தினின்று தலைநகருக்குப் புறப்பட்டார். ஆனால் டில்லி அதிகாரிகள் மகாத்மாவை டில்லியின் எல்லைப்புறத்திலேயே கைதி செய்து விட்டார்கள்.

டில்லி ஜனங்கள் கோபாவேசமுடனானார்கள். மகா ஜனங்கள் மகாநாடுகளுக்குச்செல்ல இங்குமங்குஞ்சென்ற

தால் அவர்களை பயமுண்டாக்க மெஷின் பீரங்கிகளையும், கூர்க்க சிப்பாய்களையும் இங்குமங்கும் நிறுத்தினார்கள். இரயில்வே ஸ்டேஷனருகிலும் எங்கும் கூட்டமயமாய் விட்டது. போலீஸ்காரர்களால் கூட்டத்தை நிர்வகிப்பதற்குக் கஷ்டமாய்விட்டது. பிரிட்டிஷ் ராஜாங்கம் கவிழ்ந்து விட்டதோ என மகா ஜனங்கள் நினைக்கலானார்கள். கூட்டத்தை இனிச் சமாதானமாய் சாந்தமுடன் திருப்பி அனுப்ப முடியுமோ என்னும் கவலையே எங்கும். டில்லி ரணகளமாய் விடுமோ என்னும் அச்சம் எங்கும் அதிர்ச்சியை அளித்தது. போலீஸ்காரர்களால் துராக்கிரகமும் சில இடங்களில் தோன்றவே ஜனங்களின் கோபம் கொழுந்து விட்டெரிய ஆரம்பித்தது.

ஆனால் சுவாமிகள் கூட்டத்தின் முன் சென்று டில்லி பெருங் கடியாரத்தின் கீழ் நின்றுள்ள போலீஸ் தலைவர்களை நோக்கி, கூர்க்க சிப்பாய்களை நீங்கள் அழைத்துச் சென்று விட்டால் நான் அமைதியாய்க் கூட்டத்தைக் கலைத்து விடுவேன் என்றார். அவர்களும் அப்பொழுது துருப்புக்களை எடுத்துச் சென்று விட்டார்கள், ஆனால் மறுபடியும் துருப்புக்கள் தோன்றிற்று. அதற்குள் தைர்யகஞ்சில் மெஷின் பீரங்கிகளால் சிலர் சுடப்பட்டு இறந்ததால் அவர்களின் ஞாபகார்த்தமாக ஒரு சபை நடைபெற்றது. ஆயிரக் கணக்கான சனங்களுடன் சுவாமிகள் அந்த சபைக்குச் சென்றார். ஜனக் கூட்டமானது டில்லியின் சாந்தினி சௌக்கை அடைந்தவுடன் கூர்க்க சிப்பாய் ஒருவன் வழியை மறித்து இனி கூட்டம் முன் செல்லலாகாது எனத் தடுத்தான். முன் சென்றால் துப்பாக்கியால் சுட்டுக் கொன்று விடுவோம் என பயமுறுத்தினன். சுவாமிகள் முன் செல்லுகின்றார். பின்னால் ஜனக் கூட்டம்; உடனே பத்து

கூர்க்க சிப்பாய்கள் துப்பாக்கி முனைகளை முன் செலுத்தி வாமிகளின் முகத்தை நோக்கினான். சுவாமிகள் அஞ்ச வில்லை. முன் சென்றார். அவர்களின் சமீபம் அணுகிய தும், தனது மார்பைத் திறந்து அங்கு நிலையாய் நின்று கொண்டு இவர்களைச் சுடுவதற்கு முன்னால் என்னைக் கொல்லவும் என்றார். ஒரு கூர்க்க சிப்பாய் அவர் மார் பிலே துப்பாக்கி முனையை நீட்டி, சுடுவதற்குக் குதிரை யைப்பற்றினான். ஆனால் மனம் கலங்கினான். பிறகு குதி ரையை அசைக்க குழப்பமாகி சாந்தமாய் விட்டான். கூட்டமும் அமைதியாய்க் கலைந்து விட்டது. சுவாமி களும் பிறகு சென்றுவிட்டார்.

மஸ்ஜித்தில் உபந்நியாசம்—பிறகு சில நிலயங்களில் தூர்க்காரரால் சுடப்பட்டு காயமடைந்த மகம்மதிய நண்பர் களுக்கு தன் விபத்தையும் கவனியாமல் உதவி செய்து அவர்களையும் தனது சகோதரர்கள் போல் எண்ணினார். அதனால் முஸ்லீம்கள் அவரை தங்களில் ஒருவராய்க் கருதினார்கள். நமது கஷ்ட காலங்களில் நமது நாட்டி லுள்ளவர்களே, நாம் எத்துணை அபிப்பிராய பேதமுடனி ருந்த போதிலும் நமக்கு உதவிபுரிவார்கள் என நினைத்து சுவாமிகளுக்கு சிறந்ததோர் மரியாதையைச் செய்ய கருதி னார்கள். டில்லியிலேயுள்ள மசூதியிலே பெரிய சபை யொன்றைக் கூட்டி சுவாமிகளை மகாமசூதியின் தலைவர் ஸ்தானத்தில் அமர்த்தி உபந்நியாசம் புரியவேண்டுமென விரும்பவே சுவாமிகளும் வேத கோஷத்துடன் பெரும் உபந்நியாசமொன்று செய்தார். ஆயிரக்கணக்கான மகமதிய சகோதரர்கள் அவ்வானந்தா முகத்தைக் கொள்ளைகொண்டு போனார்கள். பாரத நாட்டிலேயுள்ள மசூதியில் பெரியது ஹஸ்தினபுர மசூதியாகும். ராஜ ராஜாக்களால் கண்ணி

யமாய் கருதப்பட்டதாகும். அந்த மசூதியிலே இதுவரை மகம்மதியர்களல்லாதவர்கள் உபந்நியாசமே செய்த தில்லை.

இந்து மகம்மதியர்கள் அண்ணன் தம்பி போலாகி சுதந்திரத்திற்கு இங்ஙனம் போராடுங்கால் மகாத்மா காந்தி சத்தியாகிரகத்தை நிறுத்தி இனி போராட்டம் வேண்டாமென பகிரங்கஞ் செய்துவிட்டார். 'பாஞ்சாலத்திலேயுள்ள மகாசனங்கள் துராக்கிரகத்தில் இறங்கி விட்டபடியால், நான் சத்தியாகிரகத்தை நிறுத்தி விடுகிறேன்' என மகாத்மா காந்தி கூறியதை மறுத்து, சுவாமிகள் துராக்கிரகம் மறைமுகமாய் சனங்களுடன் கலந்து அதிகாரிகளால் ஏன் செய்யப்பட்டிருக்கலாகாது. அதற்காக நாம் ஏன் நிறுத்திவிட வேண்டும். மகாஜனங்களின் யோசனையன்னியில் நீர் நிறுத்தியது உசிதமில்லை என அவர் சத்தியாக்கிரக கமிட்டியினின்று தனிமையாகி மறுபடியும் பொதுப்படையான சமூக ஊழியத்தில் சாய்ந்தார்.

ஆனால் பாஞ்சால படுகொலை காலத்தில் பாஞ்சாலத்திலேயுள்ள தலைவர்கள் எல்லாம் பிடிப்பட்டவுடன், அமிர்தசரஸ் தேசீய காங்கிரசை நடத்துவதற்கு தலைவரில்லாததால் சுவாமிகளையே இந்தியாவிலுள்ள ஜனங்கள் எல்லாம் நோக்கியவுடன் மறுபடியும் வரவேற்பு சபைத் தலைமை பதவியை சுவாமிகள் வகித்து தேசீயத் தொண்டில் தோய்ந்தார். அப்பொழுது நிகழ்ந்தவைகளை அவர் மொழிகளாலேயே மொழிவோம்.

---

# அத்தியாயம் இருபத்தி நான்கு

## தேசீயவாதி

காங்கிரசுடன் சேர்க்கை—இந்து முஸ்லீம் வேற்றுமை.

காங்கிரஸுடன் சேர்க்கை. *அமிருத சரசிலே நடைபெற்ற அட்டூழியத்தை அகிலமெல்லாம் அறியும். பாவிடயர் மகாஜனங்களை பாம்புபோல புவியிலே அங்கத்தையெல்லாம் நிலத்தில் சாய்த்து நகரும்படி செய்தான்.* "சுட்டேன், சுட்டேன்; ரவையுள்ளவரை சுட்டேன். இன்னமும் சுடுவேன்" *என மிருகச் சொற்கள் மொழிந்தவன். நிராயுதபாணிகளை வீராவேசமுடன் எதிர்த்தவன்.* பஞ்சாப் *எல்லாம் பயமுறுத்துவதற்கே இங்ஙனம் செய்தது என சில வெள்ளையர்களும் வெட்கமில்லாமல் பகிரங்கஞ் செய்து அவனுடன் சேர்ந்தார்கள்.*

அந்த நெருக்கடியான நிலையிலே அமிருதசரஸ் காங்கிரஸின் வரவேற்பு கமிட்டித் தலைவராயிருந்து, பிரதிநிதிகளுக்கு எல்லா சௌகரியங்களையுஞ் செய்து, தாழ்ந்த வகுப்பினர்களின் நிலையைத் தெளிவாயுரைத்து, காங்கிரஸிற்கு புது ஒழுக்கத்தை சுவாமிகள் அளித்தார். அமிருதசரஸ் காங்கிரசிற்குப் பிறகு, மகாத்மா காந்திக்கு கடிதமொன்று எழுதி, கிலாபத் பிரச்சினையை முதன்மையாய்க் கருதி அதற்காக மகம்மதியர்கள் ஹிஜரத் செய்வது உசிதமில்லை என வற்புறுத்தி அதைக் கண்டனஞ் செய்ய வேண்டுமென்றார்.

*ஒத்துழையாமை எனக்கூறி சாதாரண சனங்கள் சர்க்கார் உத்தியோகத்தைவிடச் செய்வது, சாத்தியமாகாதெனச் சொல்லி, அவர்களின் அரைவயிற்றுக் கஞ்சிக்கு*

ஏதாவது பிழைப்பிற்கு வழியைக் கற்றுக்கொடுக்க வேண்டுமென காந்திஜீயை கேட்டுக்கொண்டார். லாலா லஜபதிராய் தலைமையில் கல்கத்தாவில் நடைபெற்ற கா கிரசில் அவர் பரிபூரணமாய் கலந்து கொள்ளவில்லை யாயினும் அதன் நடவடிக்கைகளில் கண்ணுங் கருத்துமா யிருந்தார்.

மகாத்மா காந்தி மகா புத்திசாலியான பனியா வகுப்பைச் சேர்ந்தவராவர், அவரின் உண்மையான நோக்கத்தை நீங்கள் அறிவது இல்லை. உங்களைப் பெரும் திட்டங்களுக்குள்ளாக்கி குரங்குச் சண்டைக்குப் பிரயத் தினஞ் செய்கின்றார். நீங்கள் நினைப்பதுபோல் அவருக்கு அகிம்சையில் நம்பிக்கையில்லை. இங்ஙனம் மகாத்மா முன் ஆப்த நண்பர் ஒருவர் பகிரங்கமாய் அடிக்கடி கூறு வதைக்கண்டு காந்திஜீ அவர்களே! இத்தகைய நண்ப களை நீங்கள் நன்றாய் அறியவேண்டுமென வற்புறுத்துவார்.

சுவாமிகள் ஒருமுறை பண்டித நேருவின் பெண் மணத்திற்கு கல்கத்தா செல்லுங்கால், புகை வண்டியில் மௌலானா மகம்மது அலியைச் சந்தித்தார். சர் விலியம் வின்ஸண்ட் நீங்கள் காபூல் சர்க்காருக்கு கடிதம் பாரசீக மொழியில் இந்திய சர்க்காருக்கு விரோதமாய் எழுதிய தாக கௌன்ஸிலிலே கூறியது உண்மைதானோ என சுவாமிகள் மௌலானாவை வினவியதற்கு எனக்கு பார சீக பாஷை தெரியாது, உருது மொழியிலும் பெரிய அறிஞ னில்லை என்றார். பிறகு மௌலானா பட்டம் அமிருதசரஸ் காங்கிரஸ் நடைபெறுங் காலத்தில் தப்லீக் என்னும் சுத்தி முயற்சிக்காக அவருக்கு அளிக்கப்பட்டதென சுவாமிகள் அறிந்தார்.

அலகாபாத்திலே மகாத்மா காந்தி அவர்களிருக்குங்கால் லார்டு ரீடிங் அவரை சிம்லா வரவேண்டுமென விரும்பினுர். நான் "நீங்கள் ரீடிங்கை பார்ப்பதனுல் ஒருவிதமான லாபமுமில்லை. அப்படிச் சென்றபோதிலும் காங்கிரஸ் காரிய கமிட்டியின் உத்தரவினுடன் செல்லவேண்டு" மெனச் சொல்லியும் செவி கொடுக்காமல் சென்றுர். அதனுல் விளைந்த கஷ்டம் தேசம் அறியும். ஒரு வருஷத்திலே சுயராஜ்யம் வரும் எனவும், பெரிய செயல்களுக்கு சிறிய தவறுதலான இவ்வாசை மொழிகளைச் சொல்வதையும் சுவாமிகள் விரும்புவதில்லை. மகாத்மா காந்தியைக் காட்டிலும் தேசம் பெரியது எனவே மதிப்பார். அதை மகாத்மாவினிடமும் அடிக்கடி மொழிவது வழக்கம். பர்டோலி தாலுக்காவில் ஒருமுறை சுவாமிகள் விஜயஞ்செய்து கத்தர் இயக்கம் இங்கு வன்மையுடனிருந்தபோதிலும் தீண்டாமை ஒழியவில்லையே, தீண்டாமை தொலையாதிருக்குங்கால் வரிகொடா இயக்கம் நீங்கள் எங்ஙனம் ஆரம்பஞ் செய்யலாம் என காந்திஜீயுடன் அடிக்கடி கூறுவதுண்டு. அதுவுமன்னியில் காந்திஜீயின் பெயரால் காங்கிரஸ் தலைவர்களில் பலர் பொருள்களை கொள்ளை கொண்டு போவதைக்கண்டு மனமுருகி காங்கிரஸினுடன் இனி சம்பந்தம் வேண்டாம் என விலகி ஆரிய சமாஜ சரித்திரத்தை எழுதப்போகிறேன் என இராஜீயத்திலிருந்து தனிமையாய் விட்டார்.

பிறகு பெரிய மாறுதல் தேசத்தில் ஏற்பட்டுவிட்டது. மகாத்மாவும் சிறையில் சென்றுவிட்டார். நானும் சிறிது காலம் சமாஜ சேவையிலாகி பிறகு 1923-ம் வருடம் பிப்பரவரி மாதம் 13-ந் தேதி மல்கானு இராஜபுத்திரர்களை புனித இந்துக்களாக்கும் பணிகளில் பாய்ந்தார். மகம்

மதியர்கள் காங்கிரஸில் சாய்ந்து கொண்டே பகிரங்கமாய் தப்லீக் வேலையில் தோய்ந்திருந்தார்கள்.

இந்து முஸ்லீம் வேற்றுமை. மகாத்மா சிறையினின்று வெளியாகி பம்பாயின் அருகிலுள்ள ஜுஹுவிலே வசித்து வந்தார். ஜுஹு பெரும் புனித க்ஷேத்திரமாக மாறி நாட்டிலுள்ள பாரத புத்திரர்கள் எல்லாம் அங்கு யாத்திரை செய்யலானார்கள். சில வேஷதாரிகளின் மொழிகளைச் செவியுற்று நான் மகம்மதியர்களின் சத்ருக்கள் என நினைத்து என்னுடன் பேசவும் விரும்பவில்லை. ஆரிய சமாஜிகளை எல்லாம் தேசத்துரோகிகள் என திட்டமாய் தவறுதலான எண்ணங்களில் தோய்ந்தார். அதை பகிரங்கமாய்க் கூறவும் பின் வாங்கவில்லை. அதனால் இந்துக்கள் பட்டபாடோ பரமனறிவார். பிறகு மகாத்மா தலைமையின் கீழ் முடிவிற்கு வர கமிட்டியொன்று ஏற்பட்டது. மகாத்மாவின் அபிப்பிராயம் இந்துக்களுக்குப் பிடிக்கவில்லையாயினும் அவர்கள் அவரைத் தலைவராய் ஒப்புக் கொண்டார்கள். ஆனால் மகம்மதியர் அவரின் தலைமைப் பதவியை விரும்பவில்லை. அப்பாலும் பெரிய கலகங்கள், குல்பர்கா முதலிய இடங்களில் தோன்றிற்று. மகாத்மா தன்னுடைய ஆட்களையே அனுப்பிவைத்து உண்மைகளை எல்லாம் அறிந்தார். கோகட்டிலும் கலவரம். அதன் உண்மையையும் மகாத்மா அறிந்தார். சில மகம்மதியர்களின் செயல்களைக் கண்டு சித்தங்கலங்கி 21 நாள் உணவில்லாமல் உபவாசமிருந்தார். இந்துக்களுக்கு செய்யப்பட்ட அநியாயங்களின் பிராயச்சித்தத்திற்கே அந்த உபவாசமிருந்தது. அப்பொழுது இந்தியாவிலுள்ள எல்லா சமுகங்களின் மகா சபையொன்று நடந்து ஒரு திட்டத்தை தயார் செய்தார்கள். மகாத்மா காந்தி அந்த திட்டத்தை மகம்மதியர்கள்

ஏப்புக் கொள்ளவேண்டுமென விரும்பினர். அவர்கள் அதையும் ஒப்புக்கொள்ளவில்லை. பிறகு 21 நாள் உப வாசம் கழிந்து டில்லி நீங்கி கல்கத்தா சென்றார். பிறகு அவரும நேருவும், தாஸ் அவர்களும் சேர்ந்து கல்கத்தா விலே கத்தரைப்பற்றி ஒரு திட்டத்திற்கு வந்தார். அப்பால் பெல்காம் காங்கிரஸ் நடைபெற்றது.

என்னை வருவதற்கு அழைத்தார். நானும் அவரும் ஒன்று யிருப்பதாக மற்றவர்களுக்குத் தென்பட வேண்டு மெனவே, அவர் அழைத்ததுபோல் அங்கு நடைபெற்ற சம்பவங்களால் அறிந்தேன். பிறகு கான்பூர் காங்கிரசிற் கும் சென்றேன். நான் சர்க்காரிடமிருந்து இலட்சக்கணக் காய்ப் பொருள் பெற்று இந்து முஸ்லிம் சண்டையை பெருக்குவதற்கு உழைத்து வருகிறேன் என பெரும் வதந்தி எங்கும் நிலவியது. ஒரு மகம்மதிய கௌன்சிலர் லேஜிஸ்லேடிவ் சபையில் நான் எத்தனை ரூபாய் சர்க்கா ரிடமிருந்து சுத்தி செய்வதற்காகப் பெற்றுளேன் என ஒரு கேள்வியைக் கேட்டார். உண்மையை இல்லை என பகிரங்கமாய்ச் செய்து விட்டால் சந்தேகம் தெளியுமென எண்ணி இவ்வினவை வினவ அனுமதிக்கப் போவ தில்லை. என சர்க்கார் தெரிவித்து விட்டார். காங்கிரஸ் மெம்பர்கள் எனச் சொல்லிக்கொண்டு, ஒழுக்க மன்னியி லிருப்பவர்களைவிட கண்ணியமுள்ளவர்கள் முதன்மை யாய் உழைப்பதற்கு சந்தர்ப்பமளிக்க காங்கிரஸில் முயற்சி செய்யப்படவேண்டும்.

இவை தான் காங்கிரஸில் தனக்கிருந்த சம்பந்தத்தை சுவாமிகள் கூறியது.

---

# அத்தியாயம் இருபத்தைந்து

## கடைக்காலம்

சமாஜ சேவை—முதல் சீர்திருத்தம்—கடைக் காலம்—வேண்டுகோள்—பண்டிதர் தீனதயாளு—சுவர்க்க யாத்திரை—எங்கும் துக்கம்.

சமாஜ சேவை—இனி காங்கிரஸில் இணைந்து படாடோபமான பயமுறுத்தல்களால் தேசம் தலையோங்காது என எண்ணி அவரவர்கள் நிலைக்கேற்றவாறு நிர்மாண வேலைகளில் நினைவைச் செலுத்த வேண்டுமென ஜனங்களுக்குச் சொல்லி தானும் அமைதியாய் ஏதோ சமூக ஊழியஞ்செய்ய வேண்டுமென நிச்சயமாகி அதற்கேற்ற செயல்களில் சாய்ந்தார். "லிபரேட்டர்" என்னும் தனது இங்கிலீஷ் வாரப் பத்திரிகையிலே தனது எண்ணங்களை எல்லாம் பகிரங்கமாக்கி தாழ்ந்தோர்களின் முன்னேற்றத்திற்காகப் பிரத்தியேகமாய் பிரசாரஞ் செய்தார். அத்துடன் இந்து சமூகம் செழித்தோங்கி வளர எச் செயல்கள் அவசியமென்பதையும் எங்கும் பகிரங்கஞ் செய்தார். அக்காலத்தில் நிலவிய ஹிந்து மகாசபையினின்றும் விலகி விட்டார். பண்டித மதன்மோகன மாளவியா, டாக்டர் மூஞ்சே அவர்கள், ஹிந்து சமூக சங்கத்தின் பெயரால் ராஜீய ஆதாயங்கள் பேசுவதை விரும்பாமல் தன்னந் தனியாய் ஏதோ ஊழியஞ் செய்ய எண்ணித் தீர்மானமானார்.

முதல் சீர்திருத்தம்—இந்தியாவிலுள்ள பெருஞ் ஜனங்கள் இந்துக்களாகும். இந்துக்கள் சீர்திருத்தப்பட்டால் பெரும்பான்மையோர் பெருமை யடைவார்கள். ஆதலால் அவர்களைச் சீர்திருத்துவதே சிறந்த செயலாகும். ஆர்ய

சமாஜமே இந்து சங்கதனத்தை பெருமையாகச் செய்ய முடியும். ஏனெனில் புரோகிதரையும் ஆசாரியரையும் அவசியமில்லை எனக்கண்டித்த ஸ்ரீ தயானந்தரே ஆர்ய சமாஜ ஸ்தாபகராதலால் இவர் உற்சாகமே பெரும் பணிகளைத் தோற்றுவிக்கும். மனிதர்களால் நிர்மாணிக்கப் பட்ட எந்த நூலையும் நிராகரித்த நெறி புருடனுகும். அவர் சித்தாந்தம் நிலவினுல் ஜகம் செம்மையாகும். நவீனமாய் நிலவும் ஆரிய சமாஜிகளின் அனுபவமொழிகளையே வேதாமுதமென ஜனங்கள் எண்ணலாகாது. பல வருடங்களாக ஆரிய சமாஜம் பெரும் வகுப்பு வாத சங்கமாவதை நான் வருத்த முடன் காண்கிறேன். அவர்கள் இந்த நினைவுடனேயே முன் செல்வார்களே யானுல் சிலவருஷங்களில் தயானந்தாமுதத்திற்கு தகுதியற்ற நிலையங்களாய் விடுவார்கள். வேதாமுதத்தினுல் வையகமெல்லாம் விளங்க வேண்டுமென விரும்புகிறவர்கள் தங்களைத் தாமாக முதன்மையாய் சீர்திருத்திக்கொள்ளவேண்டும். சொல்வதுபோல் செய்யும் சக்தியற்றவர்கள் எல்லாம் ஆர்ய சமாஜிகளாயிருக்க அருகரில்லை. வட நாட்டிலுள்ள ஆர்ய சமாஜிகளை சீர்திருத்தவே நான் முதன்மையாய் என்னுடைய காலத்தைக் கழிக்க விரும்புகிறேன். இதுதான் என்னுடைய உத்தேசம் என 1926 ம் வருடம் அக்டோபர் மாதம் 28 ந் தேதி சுவாமிகள் பகிரங்கஞ் செய்தார்.

1926 ம் வருடத்தில் சில ஆரிய சமாஜிகள் செய்த அனுவசியப்பிரசாரமே அவரைப் புண்படுத்திருக்க வேண்டும். ரங்கிலா ரசூலைப்போலுள்ள ஆபாசமான நூல்களை விரும்பவில்லை என அவர் அடிக்கடி கூறுவது வழக்கம். சில ஆரியசமாஜங்கள் வருடமுழுதும் வேலை செய்யாமல் வருஷோற்சவ சமயத்தில் அந்நிய மத ஸ்தாபனங்களை

அவதூறு செய்து அனுவசிய தர்க்கங்களை கிளப்புவதையும் அவர் ஆரிய குணம் எனக் கருதவில்லை. புராணங்களையும் இதிகாசங்களையும் ஆர்யர்கள் நிந்திக்கலாகாதென வற்புறுத்த ஒவ்வொரு சபையிலும் அவர் துளசிதாஸ் இராமாயணத்தினின்று சில அமுதமொழிகளைக் கூறுவது வழக்கம்.

இவைகளை எல்லாம் மனத்தில் வைத்துக்கொண்டே அவர் ஆரிய சமாஜிகளையே முதன் முதலாய் சீர்திருத்த வேண்டுமென எண்ணினர். இங்ஙனம் சிந்தனையாய் செயலில் சாயுங்காலத்தில் ஆரியர்களின் வேண்டுகோளுக்கிணங்கி இந்திர பிரஸ்தத்திற்கு சமாஜப் பணியின் நிமித்தஞ் சென்றார்.

கடைக்காலம்—அங்கு வழியில் குளிர்காற்று பொறுக்க முடியாமல் நோய் தோன்றி சுரமுங் கண்டு விட்டது. நிமோனியா என டாக்டர் சுகதேவரும் சொல்லி விட்டார். டாக்டர் அன்ஸாரியும் அவருக்குச் சிகிச்சை செய்யலானர். அப்பொழுதும் அவர் கடைக்காலத்தில் நடந்த சம்பவங்களை அவர் மகனை பண்டிதர் இந்திரனின் மொழிகளாலேயே உரைப்போம்.

சுவாமிகள் சுரம் நீங்கிற்று. ஆனல் அவர் முகமோ அற்புதம். அதிகமாய் நோயில் அவஸ்தைப்படுங்கால் நோய் நீங்காதோ என்னும் நினைவு. நோய் குறைந்தாலோ நினைவு வேறு நிலயத்தை நாடும். காலம் நெருங்கி விட்டது என சுவாமிகள் எண்ணி விட்டார். நோய் சற்று நீங்கிய ஒரு காலையிலே தன்னுடைய மந்திரியை அழைத்து தேசபந்து, குப்தா, இராமனந்தர், டாக்டர் சுகதேவரை அழைக்கவும்.

உங்கள் முன்னிலையிலே நான் உயிலை எழுதப் போகிறேன் என சுவாமிகள் சொன்னார்.

நாங்கள் பரஸ்பரம் சிந்தனையில் சாய்ந்தோம். நாம் புறக் கண்களால் காண்கிறோம். சுவாமிகள் ஏதோ சூட்சம மாய் பார்ப்பதுபோல் புலனாகின்றதே. சுவாமிஜியே நோய் பயம் நீங்கி விட்டது. இனி அச்சமில்லை என டாக்டர்கள் கூறுகிறார்களே ? இன்னம் சில நாட்களில் பரிபூர்ண சுகத் தைப் பெறுவீர்கள். உங்கள் இஷ்டம்போல் பிறகு செய்து கொள்ளலாம். இப்பொழுது என்ன அவசரம் ?

குழந்தைகளே ! டாக்டர் ஔஷதத்தால் என் காயம் குணமாகலாம். நான் எழுந்து நடப்பேன் என மனம் மொழியவில்லையே. உயிலை எழுதவும் என்றார்.

நடுப் பகலில் நாம் செய்துவிடுவோம் எனக் கூறிவிட் டோம்.

வேண்டுகோள்—நடுப் பகலில் அவரை தரிசிக்கச் சென்றேன். பாங்கியிலே யுள்ள திரவியத்தைப் பற்றி புகன்று விட்டு என் தேகத்தைப்பற்றி நான் நிச்சயமாய் சொல்வதற்கில்லை. ஒரு வேளை எழுந்திருக்கலாம். ஆனால் நான் சொல்லும் வேலையொன்றை நிச்சயமாய் செய்ய வேண்டும். என்னுடைய அறையிலே ஆரிய சமாஜ சரித்திர சம்பந்தமான விஷயங்களை எல்லாம் வைத்திருக்கிறேன். அவைகளை வெகு ஜாக்கிரதையுடன் பாதுகாத்து சரித்திரத்தை நிச்சயமாய் எழுதிவிட வேண் டும். சரித்திர சம்பந்தமாய் ஒரு மொழி. சரித்திரம் எழுது வதிலே என்னையும் 'ஸ்பேர்' (மன்னிக்க) செய்யவேண் டாம். நானும் பெரிய பெரிய பிழைகளை யெல்லாம் செய்

துள்ளேன். நான் என்ன செய்ய விரும்புகிறேன். ஆனால் எங்கு விழுந்துளேன் என்பதை நீ அறிவாய்.

இங்ஙனம் அவர் கூறுங்கால் நெஞ்சு அடைத்துவிட்டது. எதையும் சொல்லமுடியவில்லை. கண்களையும் மூடிக் கொண்டார்.

அப்பொழுது டாக்டர் சுகதேவர் கூறியதாவது:— சுவாமிஜியே! நோய் உங்களை விட்டுவிட்டது எனலாம். இன்னம் சில தினங்களில் நீங்கள் எழுந்து நிற்பீர். இரண்டு தினங்களில் நான் ரொட்டியை அளிப்பேன். நீங்கள் ஆனந்தமாய் புசிப்பீர்.

டாக்டர்கள் எல்லாம் இங்ஙனம் கூறுவதே வழக்கம். ஆனால் இனி இச்சரீரத்தால் ஒரு வேலையுமாகாது என நிச்சயமாய்விட்டேன். இச்சரீரம் நீங்கி, வேறு சரீரத்தால் இப்பாரத பூமிக்கு ஊழியஞ் செய்து என் நோக்கத்தை நிறைவேற்ற ஜன்மம் எடுக்க விரும்புகிறேன் என்றார்.

பண்டித தீனதயாளு—சுவாமிகள் சகம் நீங்க இரண்டு தினங்களுக்குமுன் பண்டித தீனதயாளு சுவாமிகளை பார்க்க வந்தார். சுவாமிகளால் எழுந்திருக்கவும் முடியவில்லை. ஆனால் நண்பரை சற்று எழுச்சியாகி நல்வரவு கூறினார்.

பண்டிதர் சற்று புன்சிரிப்புடன் புகன்றதாவது:— "சுவாமிகளே! பண்டித மதன் மோகனமாளவியா என்னைக் காட்டிலும் ஒரு வருஷம் பெரியவர். நீங்கள் மாளவியா அவர்களைவிட ஒருவருடம் அதிகம். நாம் இன்னம் செய்யவேண்டிய வேலைகளோ கணக்கிலில்லை. நீங்கள் ஏன் மோட்சத்திற்குத் துரிதமாக வேண்டும்? நீங்கள் ஏன் சாந்தமாகலாகாது.

பண்டிதரே! இக்கலியுகத்தில் நான் மோட்சத்திற்கு முயலவில்லை ஆனல் இத்தேகத்தை துரிதமாகக் கழித்து வேறு காயம் அடைய விரும்புகிறேன். இச்சரீரத்தால் இனி பயனில்லை. அவன் அருளானல், பாரத நாட்டிலேயே பிறந்து தேச சேவை புரிய விரும்புகிறேன். என சுவாமிகள் கூறினர்.

*சுவாமிகள் சகம் நீங்குவதற்கு ஒரு தினம் முன்னர் தனது மாப்பிள்ளையான தேசபந்து குப்தரும், பெண்மணியான சாந்தி தேவியும் அவரைத் தரிசித்து உங்கள் உடம்பு சவுகரியமாய் வருகின்றதென டாக்டர்கள் கூறுகிறார்கள். உங்களுக்கும் ஆரோக்கியம் உதயமாகின்றதென எண்ணுகிறோம் என வினவினர்கள்.*

டாக்டர்கள் அவர்களிஷ்டம்போல் உரைக்கலாம். இச்சரீரம் பயனற்றதென என் ஆன்மா கூறுகின்றது. நான் புவி நீங்கவும் இப்பொழுது தயாராயுளேன் என்று சுவாமிகள் மறுமொழி அளித்தார். *சுவாமிகள் சகம் நீங்க சில நாழிகைக்கு முன் இராஜா இராம்பால சிங்கரிடமிருந்து தந்தியொன்றுவரவே* சுவாமிகள் நான் சவுகரியமே. ஆனல் வேறு சரீரம் பெற்று சுத்தி இயக்கத்தையும் தேசப்பணியையும் பரிபூர்ணமாய்ச் செய்ய விரும்புகிறேன் என பதிலளிக்கச் சொன்னர்.

*சுவாமிகள் சரீரம் சௌகரியமாக செம்மையாய், சிறந்தோங்கிடும், எங்ஙனமோ அவர் அருளால் நான் இனி இருக்கப்போவதில்லை என்பதை நண்பர்களுக்கும் அறிவித்து விட்டார்.*

1926-ம் *வருடம் டிசம்பர் மாதம்* 23ந் *தேதி நான் தினந்தோறும் தரிசிப்பதுபோல் சுவாமிகளைக் காணச்*

சென்றேன். பகல் $1\frac{1}{2}$-மணி இருக்கலாம். சுவாமிகள் உறங்குகிறார். கட்டிலின்கீழ் காமசிங்கனும் அமர்ந்துளான். அவரின் மந்திரியான தர்மபாலனும் தூக்கத்திலே தோய்ந்துளார்.

யாவரும் உறங்குவதைக்கண்டு ஆச்சரியமானேன். தூக்கத்திலுள்ளவர்களை ஏன் எழுப்பவேண்டும் என நான் திரும்பிவிட்டேன். அங்கு எல்லோரும் உறங்குவதைக் கண்டு காவலுக்கு ஒருவனை வைத்துவிட்டு மாலை வரலாமென நான் சென்றுவிட்டேன்.

சுவர்க்க யாத்திரை—பிறகு, டாக்டர் சுகதேவரும் கன்னியா குருகுல ஸ்ரீமதி வித்யாவதியும் லாலா ஜம்னுசருரும், மாலை $3\frac{1}{2}$-மணி வரை சுவாமிகளுடன் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பால் சுவாமிகள் நண்பர் எல்லோரையும் நோக்கி நீங்கள் எல்லாம் சென்றுவிடவும், தர்மசிங்கன் ஒருவனே இங்கு தனிமையாயிருக்கட்டும். நான் இளைப்பாற விரும்புகிறேன் என்றார்.

நண்பர்கள் அறிந்து சென்று விட்டார்கள்.

தர்மசிங்கன்—அவருக்கு செய்யவேண்டிய பணிவிடைகளை எல்லாம் செய்தவுடன் சுவாமிகள் கை கால்களை கழுவிக்கொண்டு சாந்தமாய் அமர்ந்தார்.

தர்மசிங்கனும் வெளியில் சென்று தானும் கைகால்களை சுத்தி செய்துகொண்டான். அதற்குள், ஒரு மகம்மதியர் அங்கு தோன்றினர். ஒருவரையும் பார்க்கலாகாது சுவாமிகள் சாந்தமாய் அமர்ந்திருக்க வேண்டுமென டாக்டர் அவர்களின் ஆக்ஞை என மகம்மதியர், வேலைக்காரனால் தடுக்கப்பட்டார்.

சுவாமிகளை நான் நிச்சயமாகப் பார்த்துவிட்டே செல்வேன் என அவர் கூறி பிடிவாதஞ் செய்தார்.

சுவாமிகள் இதையெல்லாம் செவியுற்று, அவர் யார்? உள்ளே வரச்சொல்லவும் என கர்ச்சனை செய்தார். மகமதிய பிரபுவும் உள்ளே நுழைந்தார்.

நான் இஸ்லாம் மதத்தைக் குறித்து உங்களிட விவாதஞ் செய்ய விரும்புகிறேன் என அப்துல் ரஷீது கூறினார்.

சகோதரனே! நான் நோயில் சாய்ந்துள்ளேன். உன்னுடைய தொழுகையால் நான் திடகாத்திரனானால் உன்னுடன் பேசுவதற்கு என்னால் முடியும் என சுவாமிகள் மறுமொழி அளித்தார். பரஸ்பரம் மௌனம்.

பிறகு மகமதியர் எனக்குப் பருக சலம் வேண்டும் என்றார். உடனே அவருக்குப் பருக நீர் அளிக்கவும் என தர்மசிங்கனிடம் சுவாமிகள் கூறினார்.

மகம்மதியரை வெளியில் அழைத்துச் சென்று தர்மசிங்கன் கங்கையை அளித்தான். சல பாண்டத்தை வைப்பதற்கு வேலைக்காரன் வேறு அறைக்குச் சென்றவுடன் மகம்மதியர் சுவாமிகள் அறையை அடைந்தார். நீரினால் என் தாகம் தணியாது. சுவாமிகள் உதிரமே என் தாகத்தை தணிக்குமென கூச்சலிடுவதுபோல பிஸ்டலின் சத்தம் செவியுற்றதும், தர்மசிங்கன் மனத்தில் திகைப்புடன் கலங்கி துரிதமாய் அவர் அறையை நாடினான்.

சுவாமிகள் பெருந்தலையணையிலே சாய்ந்திருந்தார். மகம்மதியர் சுவாமியின் மார்பை நோக்கி சுடுகிறார் வெடியின் வேகத்தால், சுவாமிகளின் நோயால் அவர்

கண்கள் உடனே மூடிக் கொண்டன. மறுபடியும் அடுத்த விஞடியும் சுட்டார். எல்லாம் ஒரு இமை க்ஷணத்திலாகும்.

இரண்டு முறை சுடப்பட்டவுடன், பாரத நாட்டிலுள்ள ஒவ்வொரு எளியவனையும் சதாகாலமும் காணும் கண்கள் மறைந்தது. கூர்க்க சிப்பாய்களுக்கு மார்பை புலனுக்கிய காயத்தினின்று இரத்த பிரவாகம் பெருகியது. எவர்கள் கதறுகிருர்களோ, ஏழைகள் ஓலம் ஓங்கி. மறுபடியும் தமிழ்நாட்டில் வெள்ளம் வந்து தமிழ் மக்கள் குய்யோ முறையோ என எங்கே புலம்புகிருர்களோ என சந்தேகமாகி துரிதமாய்ப் பாயும் பாம்புச் செவியும் பேரமைதியை பெற்று விட்டது. சத்தியமொன்றே ஜகத்தில் ஜெயிக்கும். ஆனல் சத்தியத்திற்கு சாதகம் சக்தி அவசியமாகும். அச்சக்தியை இந்துக்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து சிறப் புடையதாக்கினுல் மறுபடியும் சத்திய யுகம் வருமென வீரமுழக்கஞ் செய்யும் வாய் மௌனமாய் விட்டது. இத்தேகம் தேச மக்களுடையது. நானுள்ளவரை மகா ஜனங்களுக் குழைப்பேன். சரண மடைந்தவர்களைக் காப்பாற்று வேன் எனக் கூறிய காயம் பஞ்ச பூதங்களினிரையாய் விட்டது.

நீ என் உதிரத்தை நாடி சலம் வேண்டுமெனச் சொன்னுய். ஸ்ரீ. தயானந்தருக்காக இத் தேகத்தை தத்தஞ் செய்து விட்டேன் என நீ அறியவில்லே. என் இரத்தத்திஞல் உன் தாகம் தணியுமென நீ கூறி இருந்தால், நானே அளித்திருப்பேனே என அவர் மொழிவதுபோல் திருவாய் சற்று மலர்ந்தது.

இவரே அறியாதவர் நான் மறைந்தால் என்

ஆன்மா அழிந்து விடுமேன எண்ணி என்னைச் சுட்டார். ஈசா அவனை நீ மன்னித்து அருள வேண்டும். *அவருக்கும் அமைதியை அளிக்க வேண்டுமென ஆண்டவன் திருவடியில்அமர்ந்து தியானமாவதுபோல் அவர் கண்கள்சமாதியி லாயிற்று.*

என்னை விரும்பினாய், என் தேகம் நாடினாய், இனி என் கைகால்கள் தலை முதலிய என் எல்லா அங்கங்களையும் உன் உபயோகத்திற்கு அளித்துவிட்டேன். நீ எது வேண்டுமோனாலும் அவைகளால் செய்துகொள்ளலாமென்பதைப் புலனாக்கவோ அவர் காயமெல்லாம் சடக்கருவிபோல் ஸ்மரணையன்னியிலாய் விட்டது.

சிரத்தானந்த சன்னியாசியும் சகம் நீங்கினார். மகாத்மா முன்ஷீராமன் மறைந்தார். குருகுல ஸ்தாபகத் காணுமலாய் விட்டார். தயானந்த சீடர் வேறு தேசத்திற்குப் பிரயாணமானார்.

*தர்மசிங்கன் பின்புறமாக வந்து என் தலைவனை இந்த வெறியர் சுட்டு விட்டாரே, இன்னஞ் சுடுகிறார் எனச் சிந்தனையிலாகி அவரைப் பிடித்து தர்மபாலரையுமழைத்து கூக்குரல் செய்ய ஜனக்கூட்டமாகி மகா ஜனங்கள் ஒன்றுசேர்ந்து, ரஷீதை அதிகாரிகளிடம் ஒப்புவித்துவிட்டு சுவாமிகளின் தேகத்தை கடைசியாக தரிசித்தார்கள்.*

எங்கும் துக்கம். மகா ஜனங்களை நோக்கிய கண்கள் சூரியனில் சேர்ந்துவிட்டார். சிரத்திலே சிறந்த சேவிகள் ஆகாசத்தில் கலந்தார். சதா கால சஞ்சாரம்செய்த தேகம் தரணியுடன் தோய்ந்தார். சத்தியாக்கிரகம் முழங்கிய சுவாஸமானது திருவருள் தலைவனிலே சாந்தமானார். அவர் உணர்வானது காற்றுடன் கலந்து டில்லி நகரத்து

ஜனங்களை அவர் காயதரிசனத்தில் இணையச் செய்யுங் கால், பாரதநாட்டு மகா ஜனங்களை யெல்லாம் கவர்ந்து புத்துயிர் புது உற்சாகத்துடன் அங்கு கூடும்படிச் செய்து விட்டார். ஜனங்கள் பதை பதைத்து, புத்தி மயங்கி, நடு நடுங்கி, பெரு மூச்சுடனாகி இது உண்மையோ, இது சத்தியமோ என ஒன்று சேர்ந்தார்கள். நான் சௌகரியமாயுளேன் இனி திடமாகி தேசப் பணியையும் என் வேலையில் சேர்த்துக் கொள்ளுவேன் என இன்று தான் என்னிடம் கூறினரே? அதற்குள்ளே மறைந்தாரோ என அவரின் நண்பர்கள் டில்லியை நாடினார்கள்.

இந்த கோரமான உண்மையைக் காண கூட்டம் திரள் திரளாய் சேர்ந்துவிட்டது. டில்லியிலுள்ள ஜனங்கள் எல்லாம் கரைபுரண்டு ஓடும் நதிபோல் பாய்ந்து சுவாமிகள் தேக தரிசனத்தைக் காண வந்தார்கள்.

காங்கிரி குருகுலத்தினின்று ஆச்சாரியர்களும், குழந்தைகளும் கேசரி உடைகளோடு மனங்கலங்கி அர்ச்சுன நகரத்தை நாடினார்கள். லாகூர் ஆரிய சமாஜிகள் தன்னந்தனி வண்டிகளில் ஏறி அஸ்தினாபுரம் விஜயஞ் செய்தார்கள். ஜலந்தர் கன்னியாப் பெண்கள் தமது தந்தையே தரணி நீங்கி விட்டார் எனக் கதறி அங்கு ஓடினார்கள். அனாதைகளும் ஏழை எளியவர்களும் அறிஞர்களும் அறியாதவர்களும் பெரியார்களும் சிறியோர்களும் ஆண்களும் பெண்களும் இந்துக்களும் மகம்மதியர்களும் கிறிஸ்தவர்களும் பட்டாணிகளும் ஒன்றாகூடி தலைப்பாகை நீக்கி, பாதங்களிலும் ரட்சை அணியாமல், முகம், சோர்ந்து, கண்கலங்கி, தேகம் தளர்ந்து சிரத்தானந்தரே, இந்த சாந்தினீ சவுக்கில் எங்களைக் காப்பாற்றிய வீரனே, உங்களை நாங்கள் இனி

எப்போழுது பார்ப்போம் என ஆரவாரஞ் செய்து டில்லி யிலே பெரும் மகாமகக் கூட்டமாய் விட்டது.

வைதீக பாஸ்கரன் கீழே விழுந்து விட்டார், காஷாய மணிந்தவர் காயம் கழிந்தார், பழைய வியாசர் காலத்தில் புலனுன பிரபு மறுபடியும் ஹஸ்தினுபுரத்தில் பெருமை யுடன் உதயமானுர் என எண்ணினேனே, என்னைப்போல் இருள், அந்தகாரம், புழுப் பூச்சிகள், துர்க்கந்தம், தீத் தோற்றம் முதலியவைகளை ஜனசமூகத்தினின்று துவம்சஞ் செய்த சிரத்தானந்தன் உதிரக்களத்தில் நிரந்தரமாய் உறங்க ஆரம்பித்து விட்டானே என் சூரியபகவான் தானு கவே தரணியிலே சித்திரவதை செய்து தற்கொலை புரிந்து கொள்வது போல் அங்கமெல்லாம் செந்நீராகி, வானமெல் லாம் இரத்த துளி தெளித்து, இனி நானும் புவியிருக்கப் போவதில்லை என்பதைப் புலனுக்கவோ பெருங் கடலிலே விழுந்து புதைந்தான்.

இரவெல்லாம் துக்க சாகரத்திலே மூழ்கியது இனி நமது சமூகம் பிழைக்குமோ, தலைவரில்லாமல் நாம் யாது செய்வோம். அதற் கேற்றவன்மை நம்மிட முண்டோ, வீர புருடனை இனி காண்பாமோ பாண்டவ மன்னர்களையும், மொகலாய பிரபுக்களையும் கண்ட டில்லி மகா நகரம் சிரத் தானந்தர் ஒருவரால் மறுபடியும் நிகழ்ச்சியிலே சிறப்புற் றோங்கி கீழே சாய்ந்து விட்டதே என சோர்வடைந்து மகா ஜனங்கள் மெய் மறந்து மௌனமாய் இரவைக் கழித் தார்கள்.

மகா சனங்களே! இனி நீங்கள் துக்கத்திலாக வேண் டாம். சிரத்தானந்தர் சகம் நீங்கவில்லை. காய மழிய லாம், கண்கள் மறையலாம், செவி சாந்தமாகலாம்,

மூச்சு பூஜ்யமாகலாம், அதனால் சிரத்தானந்தர் மறைந்த தாக எண்ண வேண்டாம். சிரத்தானந்தர் கேவலம், கண்களும், காதுகளும், மூக்கும், தேகமும், தலையும், கால்களும் மூச்சு மில்லை. அவர் இந்த பஞ்ச பூதங்களை வாகனமாகக் கருதி ஏதோ தரணியிலுள்ளவர்களுக்கு புத்துயிரையும் புத்துணர்வையுமளித்து, பூவுடல் நீங்கி, உங்கள் கண் காது நா மூக்கு தேகத்திலே தோய்ந்து விட்டார் என சங்க நாதஞ் செய்வது போல், பெரும் ஜனங்களின் முழக்கம் தோன்றி காலையில் எங்கும் பெரும் உற்சாகத்தைப் புலனாக்கி விட்டது.

மகா சனங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து அவர் மறைந்தார் என்னும் துக்கத்தினின்று நீங்கி, அவருடைய புனித காயத்தை அலங்காரஞ் செய்து டில்லி நகரத்தை யெல்லாம் சுற்றிக் கொண்டு இலட்சக் கணக்கான ஜனங்கள் படைசூழ, பெண்களால் புஷ்பமழை பொழிய, குழந்தைகள் இங்கு மங்கும் களிப்புடனாக, பெருந் தோட்டத்தில் எடுத்துச் சென்றார்கள். அங்கு சந்தனக் கட்டை பசு நெய் முதலியவைகளுடன் பெருந் தீயை வளர்த்து சுவாமி ஜீயின் தேகத்தை தகனஞ் செய்தார்கள்.

அமுதமொழி கூறியவர் அனலுடன் சேர்ந்தார். வீர கர்ஜனை செய்தவர் விளங்கும் கனலானார். நாடெல்லாம் சுற்றியவர் ஜகமெல்லாம் நுழைந்தார். சிரத்தை என்னும் சிந்தையின் சிறப்பிலே சாய்ந்தவர், சந்தனக் கட்டையிலே சேர்ந்து எங்கும் நிலை நினைவான நம்மணத்தை வீசினார். ஆனந்த மென்னும் அற்புத நிலையிலே எப்பொழுதும் அமைந்தவர், அகில மெல்லாம் அகரமுதலெழுத்துக்கு ஆதரவான ஆரியத்தில் அணுவடிவமாய் மறுபடியும் ஆழ்ந்தார்.

# அத்தியாயம் இருபத்தாறு

## எங்கும் துக்கம்.

**கலக்கம்—பெரியார்கள் புலம்பல்—காந்திஜி துக்கம்—தமிழர் துக்கம்—சகம் கலங்கல்—சாந்தம்.**

**எங்கும் கலக்கம்.** சுவாமிகள் சுடப்பட்டார் என்னும் செய்தி இந்தியா முழுவதும் ஒரு விநாடியிலே காட்டுத் தீபோல் பரவியது. பத்திரிகைகள் தன்னந்தனி விளம்பரங்களை அச்சடித்து 'சுவாமிகள் சகம் நீங்கினார்' என எங்கும் தெரிவித்தன. 'சென்னையிலே தாழ்ந்தோர்களாகிய எங்களுக்கு உதவி செய்வேன் என ஒரு கடிதம் நேற்றுத்தான் எழுதினார்; இன்று மறைந்து விட்டார்" என ஆதி திராவிடர்களும், தென்னாட்டிலே வேதம் என்னும் பெயரால் செய்யப்படும் பிராமணீயத்தை ஒழிக்க பிரசாரம் செய்யப்போவதாய் வாக்குறுதி செய்த வீரன் விழுந்து விட்டாரே என பிராம்மணரல்லாதவர்களும்; வைதீக தர்மம் மறுபடியும் புனர் உத்தாரணமாகுமா வென எண்ணினோமே என இந்துக்களும், எதிர்க்கு எதிராய் நின்று நேர்முகமாய் போர் புரிந்த இந்து தலைவர் இறந்து விட்டாரே என மகம்மதியர்களும் மனங் கலங்கினார்கள். அவர் மரணம் நமது நாட்டின் பெரும் நிலையொன்றை புலனாக்கும். இடி விழுந்ததுபோல் நமக்கு அதிர்ச்சியாகின்றது; வகுப்பு வாதக் கிளர்ச்சிக்கு இரையாகி விட்டாரே, மத வெறியினால் புலனாகும் புன்மையே இது. இந்துக்கள் கோடானகோடி இருந்தபோதிலும் அவர்களின் நிர்க்கதியை இது நிதர்சனமாக்கி விட்டதே, பொய் என புகன்றவர்கள் உண்மை என அறிவார்களென நாட்டிலுள்ள பெரியார்கள் எல்லாம் அவர் மரணத்தைக் குறித்து கலங்கினார்கள்.

வீரமே வடிவெடுத்தவர்; விபத்திற்கு அஞ்சாதவர்; வீரனுகவே போர்க் களத்தில் மடிந்தார். நோயில் கிடந்தும் அவர் வீரமுடன் விழ வேண்டும் என வையகம் போற்றும் தலைவன் எண்ணினன் போலும்! சுவாமிகளின் கடைமொழியை நாமறியோம். 'அவர் அறியாமல் செய்து விட்டார் அவரை மன்னிக்கவும்' என அவர் ஈசனை தியானஞ் செய்திருப்பார் என்பதில் சந்தேகமில்லை. இத்தகைய புனித மரணத்தை அடைபவன் பெருந்தீரன் என பகவத்கீதை கூறும்.

தன் நோக்கத்திற்காகத் தரணி நீங்குபவன் தலைவன் அருளைப் பெற்றவனுவன். மரணத்திற்கு மனிதர்கள் துக்கப்படுவது வழக்கம். சிரத்தானந்தருக்காக நாம் துக்கப் படுவது உசிதமில்லை. அவர் மரணத்தைக் கண்டு எவனும் பொறாமை கொள்வான். அவர் மரிக்கவில்லை. இன்னம் ஜீவனுடனிருக்கிறார். இந்த மரணத்தை கண்டு, அவர் குடும்பமும், குலமும் தேசமும் பெயரையும் பெருமையையு மடையும். தேசத்திலே இது ஒரு பெரிய பயங்கர சம்பவமாகும் என மகாத்மா அவர்களும் துக்கமானுர்.

மேற்கு நாட்டிலே சனங்கள் உண்டு உற்சாகமாய் இரவெல்லாம் நடனத்தில் கழிக்கின்றார்களே! ஆரியரின் நாகரீகம் தலையோங்கி யிருந்த வைதீககாலத்தில், நவீனத்தில் நிலவும் இச்செயற்கையான வாழ்க்கையை நடத்தவில்லையே. கதிரவன் எழுச்சிக்குமுன் எழுந்து கடவுள் தியானஞ் செய்து பிறகு தினக் கடன்களை முடித்து அவன் கடலில் விழுந்ததும் அவன் சரணம் போற்றி பிறகு புசித்து நித்திரை யிலாவார்கள். ஆதி காலத்திய ஆரிய முன்னோர்கள் ஆண்டவனோடு அமைந்த அற்புத வாழ்க்

கையை நடத்தினார்கள்! நவீனத்தில் அது தலைகீழாய் விட்டதே எனச் சொல்லி சிறிய குழந்தையைப்போல் கவர்ந்து கருணை முகத்தால் என்னை நோக்கும்பொழுது பாரத நாடே இவ்வடிவமெடுத்த திலகமெனவே நான் சுவாமிகளை எண்ணுவேன். ஆண்மைத் தனம் பரி பூர்ணமாய் நிறைந்த அவர் ஆனந்த தோற்றமே தோற்றம். ஸ்ரீ தயானந்தரை காண்பதற்கு முன் அவர், தன் ஆன்ம பலம் குறைந்திருந்தார். ஆனால் அவ் வாழ்க்கையின் கொடுமையான உண்மைகளை எல்லாம் மிகவும் பணிவாய் பெருமையான உண்மையுடன் உரைப்பார். சத்தியத்தை மறைக்கும் வஞ்சனையற்றவராவர். மகா ஜனங்களிடமும் தன் குறைகளைக் கூற அஞ்சாத வீரனவர். தன் பெருங் குறைகளை மறைக்காமல் பகிரங்கஞ் செய்ததே அவர் பெருமைக்குப் புகழை அளித்து விட்டது. அத்தகைய சிரத்தானந்தர் சகம் நீங்கினரோ?

பெரியார்கள் புலம்பல். நான் குருகுலம் செல்லும் பொழுதெல்லாம் கங்கைக் கரையினோரமுள்ள அவருடைய சிறிய ஆசிரமத்தை நாடுவேன். நான் சென்றவுடன் என்னைத் தழுவி ஆலிங்கனம் செய்து ஆனந்தமுடனவர். நீண்ட தண்டமுடன் காஷாயமணிந்து கம்பீரத் தோற்றமுடன் அவர் நடப்பது இன்னம் என் கண்கள்முன் புலனாகின்றது. நான் வெகு தூரத்தில் வருவதை அவர் கண்டுவிட்டால் தன் கழியை கீழே எறிந்து விட்டு என்னை ஆலிங்கனஞ் செய்ய ஓடிவருவார். நானும் துரிதமாகி அவரைக் கட்டித்தழுவுவேன். குருகுல குழந்தைகள் ஓடுகிறார்கள், ஆடுகிறார்கள், ஆனந்தமாய் கற்கிறார்கள் என புன்னகையுடன் பெருமையுடன் மொழிவார்.

குருகுலத்திலே குழந்தைகள் எல்லாம் அவரை மூத்த

சகோதரன் என எண்ணுவார்கள். அவர்கள் நோயினுல் பீடிக்கப்பட்டால் இரவு பகலென பாராமல் அவர்களோடு உட்கார்ந்து சிகிச்சை செய்வார்.

திடமாய் தீரமுடனுள்ள குழந்தையைக் கண்டால் அவருக்குப் பிரியமதிகம்.

நாங்கள் இங்கு வரும்பொழுது புலி, கரடி என்னும் கானக மிருகங்களே எங்கள் நண்பர்களாகும். காட்டு யானைகளும் சிறுத்தைகளும் எங்களைச் சுற்றும். பாம்பும் எங்கள் குடிசையில் பாயும். ஆனல் பரமனையே நாங்கள் நாடி திடமுடனிருந்தோம். ஒரு மிருகமும் இது வரை எத் துன்பமும் செய்ததில்லை. முதன் முதலாய் இங்கு வந்த வுடன் கங்கை நதியை எங்ஙனம் தாண்டுவது என எங் களுக்குப் புரியவில்லை. பழைய மண்ணெண்ணெய் டின் களைக்கொண்டு முக்கோண வடிவத்திலே பரசலொன்றை செய்து விபத்து அன்னியில் அக்கரை செல்லுவதை நீர் பார்த்தாயோ என சுவாமிகள் அன்று கூறிய இம்மொழி கள் இன்னும் என் மனதிலே படுகின்றன.

கங்கா நதியைக் கண்டால் அவருக்குப் பிரியமதிகம். அதை நதி எனவே எண்ணவில்லை. தெய்வீகம் திரண் டோடும் அமுதக்காவேரி என அதை நினைத்தார். அவர் ஆசிரமத்தினருகே கங்காதேவி செல்லுவாள். கங்கையின் அமுதத் துளி கர்ச்சனையை இரவெல்லாம் நான் செவியுற வில்லையேல், எனக்கு தூக்கம் தோன்றுவதில்லை. குருகுலம் நீங்கினுலும் எனக்கு உறக்கமில்லை என சுவாமிகள் சொல் வது வழக்கம். சுவாமிஜியின் ஆசிரமத்தை அணுகினல் எனக்கு ஜுரம் வரவேண்டுமென சிந்தனையிலாவேன். ஏனெனில் என்னை ஒரு சகோதரன்போல் சுவாமிகள் கருதி பெரும் உபசாரஞ் செய்வார்.

வெள்ளை நாட்டு ஸ்திரீ ஒருவள் குருகுலத்தைக்கண்டு கண்களில் கண்ணீர் பெருகி, மொழி நடுங்கி, முன்ஷி ராமன் பதைபதைத்து பெரும் நடுக்கமடைந்த எனது ஆன்மாவிற்கு அமைதியை அளித்து விட்டாரே என என்னிடம் அன்று கூறிய மொழியை இன்னும் நான் மறக்கவில்லை.

இச்சாந்தமான நிலயத்திலே, சாசுவதமான இமய மலைப்பனியிலே, சீதளமான கங்காமுதத்திலே, முன்ஷி ராமனின் வேதமொழிகள் என்னை மறக்கச் செய்து நான் இதுவரை கண்டிராத பெரும் சாந்தத்தை அளித்துவிட்டது. அவர் அற்புத மறை மொழிகள் இமய மலைபோலவும், கங்கா சலத்தைப் போலவும் நித்தியமாயுள்ள ஒலி எனக்கண்டு உயர்ந்த நிலையைப் பெறுகிறேன் என அந்த வெள்ளை மாது உரைத்தது பசுமரத்தாணி போல் என் மனதில் பதிந்துவிட்டது என சுவாமிகளைப் பற்றி அவர் மரணத்தைச் செவியுற்றவுடன் ஆண்டுரூஸ் அறிஞர் கூறினர்.

மகாத்மா, முன்ஷிராமன் தன்னுடைய நோக்கம் மாநிலத்திற்கே என மதித்தார். ஆபிரிக்கா, அமெரிக்கா, பிரிட்டிஷ் கயானா முதலிய இடங்களிலே வேத சந்தேசத்தை கர்ச்சனை செய்யும் பண்டிதர்கள் உண்டோ? அங்கு ஆரிய சமாஜத்தின் நிலை என்ன? ஆபிரிக்காவிலேயோ நீக்ரோக்களுக்கும் ஆரியோபதேசம் நடைபெறுகின்றதா? சண்டை சச்சரவன்னியில் ஆரியர்கள் வாழ்கிறார்களா என அடிக்கடி யாத்ரீகர்களை வினவுவார்.

அவருக்குப் பண்டிதரும் பாமரனும் ஒன்றே. தாழ்ந்தவனே அவரின் திவ்யமான நண்பனவன். எவர்களையும் சகோதரன் எனவே அழைப்பார்.

கூட்டத்தைச் சுடவேண்டாம். கூட்டத்தின் தலைவன் நான். என்னைச் சுடவும், என மார்பினைத் திறந்து கூர்க்கர்களின் துப்பாக்கிகளின் முன் காண்பித்த பெருங் காளை சிங்கவடிவ மெடுத்தவரே! சிரத்தானந்தா! நீ சென்று விட்டாயோ?

வையகத்தில் நடைபெற்ற வீரச் செயல்களில் இது ஒன்றாகும். இந்திய சரித்திராசிரியர்கள் இதை ஒருபொழுதும் மறக்கப்போவதில்லை. பாஞ்சால முழுவதும் சட்டமில்லா சட்டத்தை ஸ்தாபித்ததுபோல டில்லியிலும் ஸ்தாபிக்க வேண்டுமென சர்க்கார் கருதினார்கள். சுவாமிகள் ஒரு அணு அசைந்திருந்தால் அன்று டில்லி நகரம் இரத்தப் பிரவாகமாயிருக்கும். சிறிய பிழைகளுக்குச் சுடுவதற்கும் துருப்புகள் தயாராகவே இருந்தது. மார்பினைத் திறந்து, நேர்முகமாய் நின்று முதன் முதலாய் என்னைச் சுடவும் என சுவாமிகள் சொல்லியது பெரும் சங்கட நிலையை மாற்றிவிட்டது. அந்த ஒரு மொழியே டில்லியையும் பாதுகாத்தது. ஒரு துளி ரத்தமும் பிறகு சிந்தவில்லை. சனங்கள் எல்லாம் பெரும் திகிலில் தோய்ந்திருக்குங்கால், இந்த ஒரு சம்பவமானது நாடெல்லாம் புத்துணர்வை அளித்து புது உற்சாகத்தை உண்டாக்கியது.

இந்த பெரும் விபத்தினின்று நீங்கள் தப்பிப் பிழைத்தது அதிசயம். அப்பொழுது உங்களுக்கு பயம் புலனாகவில்லையோ என நான் வினவியதற்கு அவர் குழந்தையைப்போல் புன்னகை புரிந்து என்னை அவர்கள் சுடமாட்டார்கள். அதை நன்றாய் நானறிவேன். அவர்கள் கூட்டத்தைச் சுட்டிருப்பது நிச்சயம், நான் அதை எங்ஙனம் தடுப்பது? சுட ஆரம்பித்திருந்தால் கூட்டமும் கலங்கி

பலர் யமபுரி சென்றிப்பார்கள் என கண் குளிர என்னை நோக்கிக் கூறினர். அவருடைய சிறந்த செம்மையான சித்தமே பெரும் சங்கடத்தை சாந்தமயமாக்கிவிட்டது ஒரு விநாடியிலே யோசனைசெய்து நிலையான நினைவை அடைந்த பாக்கியம் சிரத்தானந்தருடையதாகும். இந்த அற்புத செயல்களைச் செய்த சிரத்தானந்த சன்னியாசியே! நீர் மறைந்து விட்டீரோ என மறுபடியும் ஆண்ட்ரூஸ் என்னும் புனித கிறிஸ்தவர் புலம்பினர்.

காந்தி துக்கம். ஒத்துழையாமை ஆரம்பிப்பதற்கு முன்னரே சர்க்காரிட மிருந்து எனக்குப் பொருள் வேண்டாம் என குரு குலத்தை ஸ்தாபித்தவர். மேற்கு நாட்டிலுள்ள நன்மையும் கீழ் தேயத்திலுள்ள குணங்களையும் அவசியம் என குருகுலத்திலே நிலை நாட்டியவர். குரு குலத்திலே நான் கண்ட ஒரு காட்சியை இன்னம் மறக்கவில்லை. குரு குலத்திற்கு பொருள் வேண்டு மென்றார். தொண்டர்கள் கூட்டத்திலே சென்று கூடை கூடையாய் நோட்டுக்கள், ரூபாய் வெள்ளி நாணயங்களை ஒரு விநாடியில் சேர்த்து விட்டார்கள். இத்தகைய காட்சியை நான் எங்குமே கண்டதில்லை.

வட மொழியிலும் ஹிந்தியிலும் அவருக்குப் பிரியம் அதிகம். ஒத்துழையாமை பிறப்பதற்கு முன் அதன் உத்தமத்தைக் கண்ட உயர்ந்த ஒப்பில்லா மணியாவர். சுயராஜ்யத்தை அடைய அவருக்கு அவசர மதிகம். தீண்டாமையை வெறுத்தவர். தாழ்ந்தோர் தலை யோங்க கவலை கொண்டவர், நான் சத்தியாக்கிரகம் ஆரம்பித்தவுடன் எனக்கு முதன் முதலாய் உதவியை அளித்தவராகும். முஸல்மான்களை அவர் வெறுக்க வில்லை என நான் மகம்மதிய நண்பர்களுக்

குரைப்பேன். ஆனால் பல முஸ்லிம்களை அவர் நம்பவில்லை என்பதை யாவரும் அறிவார்கள். அதனால் அவர்களுக்கு தீமை செய்ய வேண்டுமென அவர் கனவிலும் கருதவில்லை. இந்துக்கள் பேடுகளாய் விட்டார்கள். மறுபடியும் அவர்கள் வீரமுடனாகி பயமன்னியில் தங்கள் கண்ணியத்தை தாமாகவே பாதுகாத்துக் கொள்ளவேண்டும். என்னைத் தவறுதலாக பலர் எண்ணுகிறார்கள். என்னைப்பற்றி பல பொய் வதந்திகளும் நிலவுகின்றன என அவர் சொல்லியுளார். பல மொட்டைக் கடிதங்கள் அவருக்கு பயமுடனாக வேண்டுமென எழுதப்படும். நீங்கள் இனி தனிமையாகப் பிரயாணஞ் செய்யலாகாதென பல நண்பர்களும் அவருக்குக் கூறுவதுண்டு. கடவுளிலேயே கனிந்தவனுக்கு பயம் ஒன்றுமில்லை என சிரத்தையிலே சாய்ந்தவர் சொல்வது வழக்கம். அவனிஷ்டமில்லையேல் அணுவுமசையாது. நான் ஒரு வேளை என் நோக்கத்திற்காக மரித்தால் அதனால் என் நோக்கம் நிறைவேறுமென ஈசனும் என் தேகத்தை பலியளிக்கச் செய்வதற்கு காரணமாகலாம் எனச் சொல்லியதுண்டு. தீண்டாதவருக்காக தரணி நீங்கிய தேச பக்தரே சிரத்தானந்தராகும். தனது சீவனைப் போலவே அவர்களையும் உயிருக்குயிராய் கருதினார். தன் குழந்தைகள் எனவே அவர்களை எண்ணினார். அவரிடம் வன்மையிருந்தால் ஒரு விநாடியிலே அத் தீண்டாமையை ஒழித்திருப்பார் என காந்திஜி அவர்கள் சுவாமிகள் சகம் நீங்கியவுடன் புலம்பிப் பகிரங்கஞ் செய்தார்.

தமிழர் துக்கம். ஆன்றோர் வாக்கினுக்கு ஒரு இலக்காக விளங்கும் உத்தமனே!

இச் சென்னைமா நகரம் தங்கள் பாதம் பட பாக்கியம்

படைத்ததெனலாம். சனாதன தர்மத்தையே பீடமாகக் கொண்டு அமர்ந்துள்ள இந்து மதம் மாசற்று முன்னையிலும் மும்மடங்கு ஜோதியுடன் சிறப் பெய்த தாங்கள் படும்பாட்டை உலக மறியும். இப்பொழுது கேரள நாட்டில் நடந்து வரும் போராட்டத்தைக் கண்டு வெற்றிக் கொடி தூக்கவே தாங்கள் சென்னைக்கு விஜயஞ் செய்வது.

மனித கோடிகளுக்கும் சீவராசிகளுக்கும் நன்மை பல புரியவே உடலும் உயிரும் கொண்டுளோ மென்பதை உலகினருக்கு உணர்த்தவேண்டி தாங்கள், பூர்வாசிரமத்திலுஞ் சரி, இந்த ஆசிரமத்திலுஞ் சரி உழைத்து வருவதை உணராதார் இல்லை. தங்களது உழைப்பின் பலனை ஹரித்துவாரத்தில் விளங்கி வரும் குருகுல வித்தியாலயத்தையும் அதன் விசேஷத்தையும் தென்னாட்டினராகிய நாங்கள் நன்கறிவோம்.

இந்த ஆசிரமத்திலே தாங்கள் செய்து வரு மழியாத வேலை செப்பும் தரமானது. அவ் வேலையினை ஒவ்வொன்றாக எடுத்துரைக்கவும் வேண்டுமோ!

அந் நாளிலே மகாத்மா சத்தியாகிரக கொடி தூக்கிய பொழுது, 'தாங்கள் டில்லியிலிருந்து அக் கொடியை உயர்த்தி ஆருயிரைக் கவர வந்த ஈட்டியினுக்கு மார்பினைத் திறந்து காட்டிய தீரத்தை என்னென்று எடுத்துரைப்போம்! அதனை நினைக்கும் தோறும் வசிஷ்ட முனிவரின் பிரம்ம தண்டத்தின் சக்தி எம்மவருக்கு ஞாபகம், வரும்.

அப்பால் தாங்கள் தீனர்களின் தரப்பில் தலையிட்டு தயாளங்காட்டி, தீனதயாளராக விளங்கி வருவதைக் கண்டு

எங்களது உள்ளமும் உடலும் பரவச மடைகின்றன. தீண்டாமை என்னும் தீமையை அகற்றவும், இந்து மதத்தை முன்போல பரிசுத்தமாக்கவும், தாங்கள் சிரத்தை கொண்டிருப்பதைக் கண்டு, நாங்கள் ஆனந்தங்கொண்டு சிரத்தானந்த புருஷர்களாக துணை நிற்போமென வினயமுடன் விளம்பிகின்றோம்.

இங்ஙனம் சுவாமிகளுக்கு வரவேற்பு அளித்த சென்னை வாசிகள், சுவாமிகளின் சுவர்க்க யாத்திரையை அறிந்து, பெருங் கடலோரஞ் சென்று பிரம்மாண்டமான மகாநாடு கூடி சாதிமத நிறைவேற்றுமையன்னியில் தங்களது துக்கத்தைத் தெரிவித்தார்கள். தமிழ் நாட்டிலே உயிருடன் உள்ள எல்லா சங்கங்களும், நகரங்களும் பெரும் கூட்டங்களைக் கூட்டி மனத்தின் துக்கத்தை வெளியாக்கினார்கள்.

சகம் கலங்கல். சுவாமிகள் மறைந்தார் எனத் தெரிந்தவுடன் பம்பாய் நகரிலே ஜனங்கள் தங்கள் வியாபார ஸ்தலங்களை மூடிவிட்டு திரள்திரளாக கடற்கரையோரஞ் சென்று, திலகர் சோதியுடன் கலந்த சலத்தினருகேசென்று தங்களின் ஆழ்ந்த துக்கத்தைப் புலனாக்கினார்கள். வடநாட்டிலுள்ள எல்லா நகரங்களும் திடுக்கிட்டு திரள் திரளாய் ஒன்றுகூடி மனங்கலங்கி பதை பதைத்து ஏங்கி, பெருமூச்சடங்கி, விசனத்தை வெளியாக்கியது யாவரும் அறிந்த விஷயம். கௌஹத்தியிலே தேசீய மகா காங்கிரஸ் கூடும் சமயம். தேசீய மகாநாட்டு தலைவருக்கு யானை குதிரைகளுடன் பெரும் ஊர்வலஞ் செய்ய எண்ணி யிருந்தார்கள் சுவாமி சிரத்தானந்தர் சுடப்பட்டார் என்னும் தந்தி காட்டுத் தீ:போல் எங்கும் பரவியது. ஊர்வலம் வேண்டாம், பவனி வேண்டாம். இனி நமக்கு உற்சாகமில்லை என காங்

கிரஸ் தலைவர் கூறிவிட்டார். குதூகலமாயிருந்த கௌஹாத்தி சுடுகாட்டுச் சாந்தமாய் விட்டது. பிறகு காங்கிரஸ் கூடியதும் சந்நியாசியின் சாந்தத்திற்கு எழுந்து ஈசனை தியானஞ் செய்தார்கள். ஆபிரிக்கா, அமெரிக்கா, ஜப்பான், சீனநாடு, ஐரோப்பா முதலிய நாடுகளிலுள்ள இந்தியர்கள் எல்லாம் பெருந்துக்கத்திலாழ்ந்து கவலையுடனானார்கள். இந்துக்களின் பெரிய பாதிரி சுடப்பட்டார் என கிறிஸ்தவ தலைவர்களும் ஏங்கினார்கள்.

இனி இந்த நிலத்தை சிரத்தானந்த தோட்டமென அழைப்போம். இத்தெருவை சிரத்தானந்த புனித நாமத்தால் கூப்பிடுவோம். அவர் பெயரால் அனாதாலயம் ஏற்படுத்துவோம், சிரத்தானந்தர் என ஒரு பத்திரிகை நடத்துவோம், சிரத்தானந்தக் கல்லூரியை ஸ்தாபிப்போம், அவர் திருநாமத்தால் ஏழைகளுக்கு உணவு அளிப்போம், கன்னியாலயங்கள் ஏற்படுத்துவோம், தாழ்ந்தோர்களுக்கு பண உதவி செய்வோம், சிரத்தானந்தர் பெயரால் மாணவர்களுக்கு வெகுமதி யளிப்போம், சிரத்தானந்த பதக்கங்கள் பரிசளிப்போம் என ஜனங்கள் அங்கங்கு ஒன்று சேர்ந்து தீர்மானித்து அவர் ஞாபகார்த்தமாக பெருஞ் செயல்களிலே ஈடுபட்டார்கள்.

நான் சிரத்தானந்தரின் சிந்தனைகளுக்கு மாறுபட்டவன், அவர் செயல்களை நான் விரும்பவில்லை என சிலர் நினைப்பது பிழை என்பதைப் புலனாக்க மகாத்மா காந்தியும் குருகுல வருஷோத்ஸவத்திற்கு சென்று அதன் நிதிக்கு பொருள் திரட்ட உதவியாயிருந்து தான் குருகுலத்தை தன் கண்கள் போல் கருதுவதாக அங்கு பகிரங்கமாகக் கூறி தன் நிலையான அன்பை புலனாக்கினார். சில குருகுல

பிர்ம்மசாரிகள் நாங்கள் இனி வாழ் நாட்கள் வரை அவர் ஞாபகார்த்தமாக வேதப் பிரசாரம் அன்னியர்களின் உதவி யன்னியில் செய்வோம், உலக மெல்லாம் யாத்திரை செய்து அவர் அமுதவாரியை எங்கும் இன்பமா யளிப் போம் என சங்கற்பஞ் செய்து கொண்டார்கள். நாட்டி லுள்ள அறிவு மிகுந்த அபலைகளும் முன் வந்து அவர் நோக் கத்திற்காக எங்கள் ஆன்மாவையும் தத்தஞ் செய்து விடு வோம். பொது ஜன ஊழியத்தில் ஈடு படுவோமென பகி ரங்கமாகக் கூறினர்.

இங்ஙனம் இந்தியாவில் ஜிவ நாடி சிறந்த ஜனங்கள் ஸ்ரீ சிரத்தானத சந்நியாசிக்கு சாந்தமளித்தார்கள். நாமும் அவர் ஆன்மா நித்தியமான அமைதியைப் பெற வேண்டு மென ஈசனைப் போற்றி வணங்குவோம்.

ஓம். சாந்தி : சாந்தி : சாந்தி :

---

# பிழைத்திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 7 | காலத்தில் | காலத்தின் |
| 3 | 24 | மன்ஞ் சேர்ந்து | மனஞ் சோர்ந்தது |
| 8 | 20 | நியமானமாளுர் | நியமனமாளுர் |
| 9 | 19 | பண்டிதற்கள் | பண்டிதர்கள் |
| 11 | 23 | கிவின்ஸ் | குவீன்ஸ் |
| 12 | 7 | யொன்யையும் | யொன்ரையும் |
| 17 | 13 | சொல்லுகிருர் | செல்லுகிருர் |
| 18 | 3 | மகாரஜவே | மகாராஜாவே |
| 21 | 1 | நாலு | நான்கு |
| 26 | 7 | மிருந்த | மிகுந்த |
| 31 | 10 | மரு | மறு |
| 38 | 13 | பரிசை | பரிட்சை |
| 45 | 3 | ஆசாரியாஞல் | ஆசாரியஞல் |
| 45 | 24 | செய்துக் கொண்டு | செய்துகொண்டு |
| 47 | 15 | அவர்ளை | அவர்களை |
| 91 | 1 | அத்தியாயம் பதிறு | அ. 16. 17. |
| 96 | 28 | அவர்களை மற்றவர் | அவர்களை மற்றவர் ஏமாற்ற முடியாது. |
| 152 | 13 | நாட்டில் | நாடு |
| 156 | 14 | இரபத்திரண்டு | இருபத்திரண்டு |
| 156 | 15 | ஹசன் ராஜா் | ஹன்ச ராஜர் |
| 168 | 1 | இருபத்தி மூன்று | இருபத்து மூன்று |
| 175 | 1 | இருபத்தி நான்கு | இருபத்து நான்கு |

# ஆசிரியர் ஜம்புநாதனின்
## தமிழ் நூல்கள்.

---

1. யோகாசனங்கள்—சுமார் 50 யோகாசனங்களை ஆசாரியர் அன்னியில் தானாகவே பயிற்சி பெறலாம். உடல் நோய் நீங்கி, உள்ளம் ஓங்கி, உயிர் பெருகும். 54 சித்திரங்கள். காம கோடிபீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சாரி அவர்கள் அநேகப் பிரதிகளை வாங்கி யுள்ளார். எல்லாப் பத்திரிகைகளாலும் புகழப்பட்ட நூலாகும்.

விலை, ரூபா ஒன்று.

2. சீன வேதம்—இந் நூலை பொன் தகட்டிலே செதுக்க வேண்டு மென ஒரு அறிஞர் எழுதியுளார். இதுவரை தமிழ் நாடு கண்டிராத நூல். ஆயிரங் காபி வரை செலவாகி வீட்டது. சீன வேதம் எதற்கு என நீங்கள் கேட்கலாம். அந்நியர்களைக் கண்டு உங்கள் குற்றங் குணங்களைக் காண்பது போல் அந்நியர்கள் வேதத்தால் நமது உண்மையை நன்றாய் அறியலாம்.

விலை, ரூபா 0—12—0

3. திரிமூர்த்தி உணமை—தமிழ் நாட்டிலே முதன் முதலாய் புராணப் புரட்டுக்களைப் புலனாக்கி, அவைகளின் உண்மையான தத்துவங்களை விளக்கி புதிய அறிவையும் உணர்ச்சியையும் உண்டாக்கிய நூலாகும். தேவர்களின் உண்மையான இரகசியத்தை வேத உபநிடத ஆதாரங்களோடு அறிய வேண்டுமானால் திரிமூர்த்தி உண்மையே உங்களுக்குத் திருப்தியை யளிக்கும். நெஞ்சு துடிக்கும் நூல்.

விலை, ரூபா 0—12—0

4. குலிஸ்தான் பாரசிக நூலின் தமிழ் மொழி புஸ்தகம். ஏராளமான சிறு கதைகளுடன் நூற்றுக் கணக்கான அமுத மொழிகளோடு நிலவும் நூல்.

விலை, ரூபா 0—8—0

5. தேசீய வாழ்வில் உங்களுக்கு ஈடுபட வேண்டுமானால் இராஜீய திட்டங்களை அறிய வேண்டுமானால் நேரு ரிபோர்டுக்கு நிகரான நூலே இல்லை. இதுவரை 1500 காபிகள் செலவாகி விட்டது.

விலை, ரூபா 0—8—0

6. மாஜினி சரித்தரமும் மனிதர் கடமைகளும் சுமார் 300 பக்கங்கள். 22 அத்தியாயங்கள். ஐரோப்பாவில் புரட்சி சம்பந்தமாக நடந்த வற்றை யெல்லாம் அறிவிக்கும். இடாலி அந்நிய ஆட்சியினின்று நீங்கிய கதை—ஆண், பெண், தாய், தந்தை, மனைவி, மக்கட்கடமை, ஈசன், சட்டம், சனசமூகம், தேசக்கடமை, சுதந்திரம், சமத்துவம், கல்வி, முதலாளி, தொழிலாளர், சமத்துவ தர்மம், புரோகிதர்களின் புரட்டு வாழ்க்கை இவைகளை அறிய வேண்டுமானால் மாஜினியைப் படிக்கவும். பகவத்கீதையையும் நீங்கள் படிக்கவேண்டாம். மாஜினி படித்தால் ஊமையனும் பிரசங்கங்கள் செய்வான். அற்புதமான நூல்.

விலை, ரூபா 2—0—0

ஜம்புநாதனின் தமிழ் நூல்களை, ஹிந்து, சுயராஜ்யா, தமிழ் நாடு, சுதேசமித்திரன், குடியரசு முதலிய பத்திரிகைகள் புகழ்ந்து எழுதி யிருக்கின்றன.

நூல்கள் கிடைக்குமிடம் :—மதராஸ் மௌண்ரோட் சுதேச மித்திரன் புத்தகசாலையிலும், அதன் கிளை ஆபீசு

களிலும், சென்னை பிராட்வே "தமிழ் நாடு" பத்திரிகாலயத்திலும், மதுரை, இ. எம். கோபால கிருஷ்ண கோன் அவர்களிடமும், இரங்கோன், 251 மான்டி கோமரி தெருவிலுள்ள நவீன கதா புத்தகசாலையிலும், இன்னம் எல்லாப் பிரபல வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

மதராஸ் 14 பள்ளியப்பன் தெருவிலுள்ள சூடன் அண்டு கம்பனியில் கிடைக்கும்.